திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் — 93



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# மன்மத ஆவணி அபிடேக மலர்

1955

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து.

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில் **திருவா வடுதுறை** வாழ்
**குருநமச்சி வாய தேவன்**
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி **தழைக** மாதோ.

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் — 93

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருத்துறையூர் அருணந்திதேவ நாயனார்

அருளிச்செய்த

# இருபா இருபஃது நூலின் விரிவுக்கட்டுரை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

*21-ஆவது குருமகா சந்நிதானம்*

ஸ்ரீ—ல—ஸ்ரீ

**சுப்ரமண்ய தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

திருவருளாணைப்படி

அவ்வாதீனத்து வித்துவான்

**தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன்**

இயற்றியது

*மன்மத ஆவணி அபிடேக மலர்*

*1955*

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## மெய்கண்ட தேவ நாயனர் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த**அருட் கதிரோன்**
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் **வெண்ணெய்** மேவு
**மெய்கண்ட தேவன்**மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

**—சிவஞான சித்தியார்**



இருபத்தொன்றுவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்ட சாத்திரம்

(பதினான்கு)

உந்தி களிறு உயிர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

திருச்சிற்றம்பலம்

௧

## திருத்துறையூர்—அருணந்தி தேவ நாயனார்

### துதி

முப்பொருளின் சரியல்பும் ஓரியல்பா
நுவலாது முறைவெவ் வேறாய்ச்
செப்புசிவா கமங்களின்றன் பொருளொருமை
பெறவுணர்த்து திறமுன் னூலை
ஒப்பவிரி யாப்பதனால் சித்தியெனும்
வழிநூலா யொளிர்பிற் காலத்
திப்புவியோர் தெளிந்துய்ய மொழிந்தஅருள்
**நந்திசிவன்** இணைத்தாள் போற்றி.

—குருபரம்பரை விளக்கம்



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
21 - ஆவது மஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் வழிபடுதல்

சிவமயம்

## உரைப்பாயிரம்

சற்குரு வணக்கம்

**ஒருமூன்றினி லிடையாவரு மடியேனிரு மூன்றின்**
**வருமூன்றுகொள் வினைவீழ்ந்திட வகைமூன்றுறழ் மூன்றாய்**
**மருணீங்கிட நான்மூன்றருள் மெய்கண்டவர் மரபில்**
**திருவாவடு துறைவாழ்குரு பதமேகொடு திகழ்வாம்.**

— தே. ஆ. ஸ்ரீ.

உலகில் சீவர்கட்கு வேண்டுவது விடுதலை. ஆன்மாக்களைப் பந்தித்திருப்பது பாசம். இப்பாசம் எவ்வெவ்வாறு நம்மைப் பந்திக்கின்றதென நாமறிந்தால் பாச விடுதலை அடையப் பாடுபடலாகும். இப்பந்தனை விவரத்தை மெய்கண்ட சாத்திர நூல்கள் பதினான்கனுள் ஐந்தாவது நூலாக விளங்கும் இவ்விருபா இருபது நூல் எடுத்துரைக்கின்ற தென்னலாம். ஐந்தாய்ப் பந்திக்கும் பாசத்தினை இந்த ஐந்தாம் நூலறிவு போக்க வழிகாட்டுதல் இயைபுடையதே.

ஸ்ரீ மெய்கண்ட தேவரால் ஆட்கொள்ளப்பட்ட ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் இந் நூலாசிரியர் ஆவர். இவர், வேதங்கள், சாத்திரங்கள், புராணங்கள், கலைகள், உப நிடதங்கள், பிரதமாகமங்கள், உபாகமங்கள், திருமுறைகள் சிவஞானபோத சாத்திரம், சங்கப்பனுவல்கள் ஆகிய சகல கலைகளும் கற்றுணர்ந்த நாயனாராவர். ஆதலால், இவரது நூல்களில் இவ்வனைத்தின் சாரங்களும் அடங்கியிருக்கும். இவ்விருபா இருபஃதும் அத்தகைய தொன்றும். பெரும்பான்மை வினாவடிவமாக அமைந்

துள்ள இந்நூற் கருத்துக்களை அறிதல் எளிதன்று. இதனை நம்மனோர் அறிந்துய்ய வேண்டியே **திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகள்** ஓரழகிய உரை அருளிச் செய்துள்ளார்கள். இவ்வுரை ஞானியர்களின் போற்றுக்குரியது. நிற்க,

ஞாலம் இயற்றிய நல்தவப்பயனால் **திருவாவடுதுறை** ஆதீனத்தே தற்போது எழுந்தருளியிருந்து ஞான அருட்செங்கோல் நடாத்தியருளும் **21-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்** சித்தாந்த ஞானப் பனுவல்யாவற்றையும் யாவரும் அறிந்து ஒழுகி உய்யவேண்டுமென்னும் பெருங் கருணையுடையவர்களாவர். இவர்கள், அற்ப மதி உடைய அடியேனைச் சில்லாண்டுகளாக ஆட்கொண்டருளி மெய்கண்ட சாத்திர நூற்கருத்துக்களை யாவருக்கும் புலப்படுமாறு எளிய விரிவுரைகளாக்குமாறு பணித்தருளியுள்ளார்கள். இவர்கள் பேராசித் துணைகொண்டும் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் திருவருள்துணைகொண்டும் **திருவுந்தியார்த் தெளிவுக்கட்டுரை – திருக்களிற்றுப் படியார் விளக்கக்கட்டுரை** என்னும் முதலிரண்டு ஞான சாத்திர விரிவுரைகள் இயன்றளவு ஆக்கலானேன். இதுபோது அங்ஙனமே **இருபா இருபது விரிவுக்கட்டுரை** என்னும் இந்நூலையும் ஆக்கி **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம்** அவர்களிடம் சமர்ப்பிக்கலானேன். சாத்திர பாரங்கதர்களான பெரியோர்களே இந் நூற்கு விரிவுரையாக்கவல்லவர்கள் என்பது உண்மை. ஆதலின், இந்நூலின்கண் அறியாமையால் அமை பிழைகள் ஆன்றோர் பொறுமைக்கிலக்காவன ஆகுக!

இங்ஙனம் எவரையும் அடியேனையும் ஆட்கொண்டருளும் **திருவாவடுதுறை** ஆதீன பரம்பரை **21-ஆவது**

**குருமகா சன்னிதானமாக** எழுந்தருளியிருந்து க்ஷேத்திர சமய சாத்திர பரிபாலனம் செய்தருளுகின்ற **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்,** இந்நூற்கான திருவுருவப்படங்களும் அமைய அருள்கூர்ந்து, இந்நூலினை ஸ்ரீ நடராசப்பெருமானுக்குரிய **மன்மத ஆவணி** அபிடேக மலராக வெளியாகுமாறும் திருவருள் பாலித்துள்ளார்கள். இவர்கள் பெருங்கருணைத்திறம் என்றும் வாழ்க என ஏத்திப்பணிசெய்து கிடப்பதே அடியேனுக் குய்வுநெறியாமென விண்ணப்பித்துக்கொள்கின்றேன்.

மேலும், அடியேனை **ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம்** அவர்கள் திருவடிக்கண் ஆளாக்கியும், இத்தகையபனுவல் துறையில் பணிபுரிதற்கு உடனிருந்து ஊக்கியும், இந்நூலினை நோக்கி அணிந்துரை அளித்துச் சிறப்பித்தும் உதவியுள்ள இவ்வாதீன அடியவரும் அடியேன் உழுவல் அன்பருமாகிய **உயர்திருவாளர் வித்வான் T. S. தியாகராச தேசிகர்** அவர்கட்கும் என்றும் நன்றி பூண்டொழுகும் கடப்பாடுடையேன். மற்றும், இந்நூலைக் கண்ணுறும் பெருமக்கள் யாவர்க்கும் அடியேன் பணிவு உரியதாகுக !

இந்நூலினை அழகிய தோற்றத்துடன் காட்சியளிக்குமாறு ஆர்வமும் முயற்சியும் காட்டி உரியபோதில் அச்சிட்டுதவிய **திருப்பாதிரிப்புலியூர், சரஸ்வதி அச்சகத்தார்க்கு** எனது நன்றி உரியதாகுக !

**ஞான நன்னெறி நாடுக ஞாலமே !**

இங்ஙனம்,

விரிவுரை நூலாசிரியர்,
திருவாவடுதுறை ஆதீனப்புலவன்,
**தே ஆ. ஸ்ரீநிவாஸன்**

21|G துக்காராம் தெரு,
கடலூர் N T.
மன்மத ஆவணி.

சிவமயம்

# அணிந்துரை

படிக்கு நூல்கள் சிவாக மம்பசு
பாச மோடு பதித்திறம்
எடுத்தி யம்புவ தீசன் வார்கழல்
ஏத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள்
வேண்டி டும்பொரு ளீண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல
னோடு நின்றிடல் முத்தியே.

— சிவஞானசித்தியார்

உலகத்திலேயுள்ள சமயங்கள் பலவாகும். சமயங்கள் மனிதர்கள் அறிவுவிளக்கம்பெற்று நன்னெறியிலே ஒழுகி, மேலான சுகவாழ்வை அடைவதற்குச் சாதகமாயுள்ள ஞான ஆலயங்களாகும். அச்சமயங்கள் பலவற்றுள்ளும் மிகச்சிறந்ததும் ஒப்புயர்வற்றதும், தன்னியல்பு என்றும் குன்றுததும், பரம்பொருளின் கருணைவிளைவாகிய அருவம், அருவுருவம், உருவம் என்னும் தடஸ்த லட்சணங்களை விளக்குவதற்குத் தலையாயதுமான சமயம் **சைவசித்தாந்தம்** ஒன்றேயாம். இச்சமயத்தில் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களின் கொள்கைகள் உள்ளன உள்ளவாறு நன்கு விளக்கிக்காட்டப்பட்டுள்ளன. அன்றியும் பலசமயங்கள் கூறும் பல பொருள்களின் இயல்புகளைத் தன்னகத்தே யடக்கிக்கொண்டு தானென்றே அவையனைத்தினும் முதன்மைபெற்றுச் சமய

அரசாய் விளங்கலின் சித்தாந்த சைவம் எனவும் வேத சிவாகமங்களால் புகழப்பெற்று நிற்கின்றது. இச்சமயத்துச் சிறந்த சாத்திரநூல்கள் மெய்கண்ட சாத்திரங்கள் எனப்படும். இவை பதினுன்காம். இப்பதினுன்கையும் இன்னவையென **"உந்தி களிறு"** — என்னும் செய்யுள் நவிலும். அவற்றுள் தலைசிறந்தது ஸ்ரீமெய்கண்டதேவர் திருவாய்மலர்ந்தருளிய சிவஞானபோதம் என்னும் சிறந்த சித்தாந்த நூலேயாம். இந்நூலின் சொல்லையும் பொருளையும் துணையாகக்கொண்டு எழுந்தவைகளே ஏனைய மெய்கண்ட சாத்திரநூல்கள். அவற்றுள் சிவஞான சித்தியார், இருபாவிருபஃது இவ்விரு நூல்களும் ஸ்ரீ அருணந்திதேவ நாயனாரால் அருளிச்செய்யப் பட்டவை. இவ்விரண்டனுள் சித்தியார் சிவஞான போதத்தின் விரிவுரைபோல்வது. **இருபாவிருபது** என்னும்நூல் பத்துத் திருவெண்பாக்களும், பத்துத்திருவாசிரியங்களும் முறையே விரவப்பெற்றது. பாச இலக்கணத்தைப்பகுத்து வினவிடையாகத் தெளிவிக்கின்றது. பாசநீக்கமே பரமனை அடைவிப்பது. இதுவே முத்திப்பேறு. இதனை நாம் ஞான குரவர்களிடம் உபதேச வாயிலாகப் பெறல்தக்கது. ஸ்ரீ அருணந்திதேவர், பாசம்பற்றி எக்காலத்தும் எவர்க்கும் எழக்கூடும் எல்லா ஐயங்களையும் களையும்பொருட்டு தமது பரமாசாரியரைப் பல்வகை வினக்களால் வினவி நமக்குத் தெளிவுறுத்துகிருர். இஃது இந்நூலின் தனிச்சிறப்பாகும். இத்தகைய சிறப்புவாய்ந்த இவ்விருபாவிருபது என்னும் நூலை, சித்தாந்த சாத்திரங்களின் சரக்கறைபோன்ற நம் திருவாவடுதுறை ஆதீனம். மக்கள் யாவரும் கற்றுச் சிவஞானம் பெறவேண்டுமென்ற பேரருள் நிறைவால் ஷ ஆதீனத்து முனிவர்களுள் ஒருவராய்த் திகழ்ந்த ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரைந்துள்ள சிறந்த உரையுடன் வெளியிட்டுள்ளது யாவரும் அறிவர்.

இந்நூலும் இத்தகைய உரையும் அறிவுடையோர்க்கு எளிதின் பயன்படுவன. எனினும் எம்போன்ருர்க்கு இன்னும் எளிதின் விளக்கம் வேண்டுமென்ற ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பெருங்கருணையின் விளைவாக, இந்த **'இருபாவிருபது விரிவுக்கட்டுரை'** என்னும்நூல் மன்மத ஆண்டு ஆவணித் திங்கள் ஸ்ரீ நடராஜர் அபிடேக மலராக வெளிவருகின்றது,

இவ்விருபாவிருபது விரிவுக்கட்டுரை எழுதியவர் முன்னர் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரு சாத்திர நூல்களுக்கும் தெள்ளிய விளக்கவுரை எழுதி, ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவருள் நோக்கால் சிறப்புற்றுவிளங்கும் சித்தாந்த சாத்திர வித்தகராகிய ஆதீன வித்துவான் உயர்திரு. **தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார்** அவர்கள் ஆவார்கள். இவர்கள் மகாசந்நிதானம் அவர்கள் அருளாணையின்படி ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை, சிவஞான போதமும் - பன்னிரு திருமுறையும் என்ற இருநூல் களையும் இயற்றி வெளியிட்டும், சைவ சமயப்பணி புரிந்துவரும் உத்தமரும் ஆவர்.

இருபாவிருபது விரிவுக்கட்டுரை நூலில் ஆசிரியர் ஒவ்வொரு செய்யுட்கும் ஏற்ற தலைப்புக்கள் அமைத்து, முக்கியமான இடங்களில் செய்யுளின் வினுக்களையும் — விடைகளையும் தொகுத்துக்கூறி விளக்கும் அருமைப்பாடு போற்றற்குரியது. இந்நூலில் பலவிடங்களில் சித்தாந்தக் கொள்கைகள் தெளிவாக விளக்கப்பட்டிருத்தல் காண - லாம். மேலும் ஒவ்வொரு செய்யுளின் கருத்தையும் சுருக்கமாகக்கூறி, இடைஇடையே இலக்கிய நயத்துட னும் தக்க மேற்கோள்களோடும் சித்தாந்த சைவ அருங் கருத்துக்களை ஆங்காங்கு புலப்படுத்தும் திறம் படித்தின்-புறத்தக்கது. ஒவ்வொரு செய்யுளுக்கும் காணப்படும் பதசாரங்கள் இந்த விரிவுக்கட்டுரை நூலாசிரியரின்

சித்தாந்த சாத்திரப்பேரறிவையும் நுண்ணறிவையும் புலப் படுத்துனவாம். இக்கட்டுரை நூலில் பாசம்பற்றிய வரலாறு, தெரிதற்கேற்ற முகவுரையாக அமைத்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்புக்களின் ஒன்றும். இந்நூலில் 16 ஆம் பாடல் நாம் பாசத்தின் அகன்று பயன்பெறுதற்கு வழிகாட்டுவதாகவும், இச்செய்யுளை நாளும் ஓதவேண்டு மெனவும் குறிப்பிட்டிருத்தல் கருதத்தக்கது. மற்றும் இவ் விருபாவிருபது விரிவுக் கட்டுரைநூல் பல்வகைச் சிறப்பும் பாங்குடன் அமைந்து மிளிர்கின்றது.

திருக்கயிலாயத்தோடு தொடர்புடையதாகிச் சிவ பரம்பொருளின் கருத்தின் வழி நின்று சைவ சமயத்தைத் திருவாவடுதுறைத் திருமடத்து ஞானாசாரியர்கள் பண்டு தொட்டே பரிபாலனஞ்செய்து வருதல் யாவரும் அறிந்ததே. இத்தகைய ஞானாசாரியர்களின் பரம்பரை யில் உதித்து இதுபோழ்து ஞானதான வள்ளன்மையை இடைவிடாது இயற்றிவருபவர், திருக்கயிலாய பரம்-பரைத் **திருவாவடுதுறை ஆதீன**த்தில் **21-வது குரு-மகா சந்நிதான**மாக எழுந்தருளி அருளாட்சி நடாத்தும் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்** ஆவார்கள். இவர்கள், தாம் ஞானபீடத்தில் எழுந்தருளி யது முதல், ஞானசாத்திர அமுதத்தை அகிலமுழுதும் அருந்தி வாழவேண்டுமென்ற பெருங்கருணையால், மெய் கண்ட சாத்திர உணர்ச்சி அருகிவரும் இக்காலத்தில், மெய்கண்ட சாத்திரநூல்கள் பதினான்கையும் தமது ஆதினத்துப் பூர்வாசாரியர்கள் செய்த உரைகளுடன் வெளியீடுசெய்தும், மற்றும் அச்சாத்திர நூல்களுக்குத் தக்க சான்றோரைக்கொண்டு விளக்கவுரைகள் எழுது-வித்து அச்சிட்டுதவியும், மேலும் பலப்பல சித்தாந்த ஞான நூல்களையும், தமிழிலக்கிய நூல்களையும் வெளியீடு செய் தும் சிவப்பணியில் தலைநின்றும் சைவசமயத்தையும் தெய்வத்தமிழையும் வளர்த்துவருதல் சைவநன்மக்கள்

செய்த நற்றவப்பயனேயாம். அன்றியும் இதுபோது திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தோன்றாவது குரு-மூர்த்தியாக எழுந்தருளி ஞானச்செங்கோல் நடத்திவரும் **ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம்** அவர்கள், பல பேரறிஞர்களைக்கொண்டு சொற்பொழிவுகள்மூலம் சமயசாத்திர உண்மைகளை வெளிப்படுத்தல் சைவநன்மக்களுக்குச் சிறந்த பயன் அளிக்கும் என்னும் அருள்நோக்கால ஆண்டுதோறும் **சித்தாந்த சைவ மாநாடு** கூட்டுவித்தருளுதலும், பத்தாவது சைவத்திருமுறையாகிய திருமந்திரத்தை இலக்கியம், சைவம் என்ற இருகண்களாலும் காண்போருக்கு அது ஒரு அரிய இலக்கியமாகவும், உலகுக்கெல்லாம் அன்பு நெறியாகிய சைவநெறியைப் போதிக்கும் ஒரு அரிய சமயசாத்திரமாக மாகவும் விளங்கும் சிறப்பை ஆண்டுதோறும் துறைசையில் நடைபெறும் **திருமந்திர மாநாட்டின்** வாயிலாக உலகப் பெருமக்கள் உணரும் வண்ணம் செய்தருளுதலும், சைவசமயம் எங்கும் சிவஞான சூரியப்பிரகாசமாய்ப் பொலிவுற வேண்டுமென்ற ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் பேரருள் நிறைவின் விளைவேயாம். இங்ஙனம் செந்தமிழையும் சிவநெறியையும் கண்ணெனக் கருதி-வளர்க்கும் **திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தொன்றாவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம்** அவர்களின் அருள்ஞான வள்ளன்மையால், திருவா-வடுதுறைத் **திருமடம்** வழிவழியாகப் பரஞானங்களைப் பக்குவ ஆன்மாக்களுக்குப் படிமுறையால் உபதேசஞ் செய்யும் **ஞானஆசாரிய பீடமென** நன்கு உணரலாம். இத்தகைய துறைசையம் பதியில் ஞானபீடத்தில் வீற்றிருந்தருளும் **ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின்** பேரருள் நாளும் ஓங்கி நலம் விளைப்பதாக! சிவதருமமும், சித்தாந்தசைவமும் நீடூழி வாழ்க!

இங்ஙனம்
திருவாவடுதுறை ஆதீன அடியவன்,
வித்துவான்
**T. S. தியாகராஜதேசிகன்,**

கடலூர் N. T.
1-9-55

உ

சிவமயம்

# இருபா இருபது

## நூல் மாண்பு

" விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை ஒன்று மில்லையாம் ;
பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது *நமச்சி வாயவே* "

— 4-ஆம் திருமுறை.

மக்கட் பிறப்பு சிறப்பு உடையது. இதற்கு இச் சிறப்பு அறிவுடைமையால் அமைவது. இவ்வறிவு இருவகைப் படும். ஒன்று ஆராய்ச்சியறிவு ; மற்றது அநுபவ அறிவு. ஆராய்ச்சியறிவனைத்தும் அநுபவ அறிவுக்குக் கருவியாய் நிற்கும் துணையதாகும். முடிந்த முடிபு **அநுபவ ஞானம்** எனப்படுவதாம். இந்த அநுபவ ஞானம் அசைக்க முடியாத உறுதியுடையது. இத்தகைய அசைவற்ற அநுபவ ஞானம் படிப்படியாகப் பழகிப் பண்படுவதனுல் விளையும். இதன் படிமுறைகள் மூன்றும். அவை பாச ஞானம் பசுஞானம் பதிஞானம் எனப்படும். இவற்றுள் பாச ஞானம் என்பது **சொற்பகுதி ஞானம்** எனவும், **பொருட்பகுதி ஞானம்** எனவும் இரு கூறுபடும். நான்மறை, ஆறங்கம், பதினெண்மிருதி, பதினெண் புராணம், அறுபத்து நான்கு கலைகளாதியவை அறிவு பெருகுதற்பொருட்டு ஓதத் தக்கவை. இதனுல் வேதத்தை

"ஓத்து" எனவும் அழைப்பர். "மறப்பினும் ஓத்துக் கொளலாகும்" என்பது தமிழ் மறையவர் வாக்கு. இவற்றை ஓதுவதால் வாக்கினியல்பான **சொற்பகுதி ஞானம்** வளரும். இந்த ஞானம் ஆராய்ச்சிக்குத் தூண்டுதல் கோலும். இத் தூண்டுதலால் தத்துவங்கள் ஆராயப்படும். தத்துவங்கள் பற்பல சமயத்தாரால் பற்பலவாருகக் கொள்ளப்படும். எனினும், யாவரும் ஒப்புக்கொள்ளவேண்டும் தத்துவங்கள் **நிலம்** முதல் **நாதம்** ஈருன முப்பத்தாறும். இவற்றைக் கடந்து ஆராய்ச்சியறிவு செல்லாது. இத் தத்துவங்களைப் பற்றிய ஞானம் **பொருட்பகுதி ஞானம்** எனப்படும். இவ்வளவும் பாசஞானம் என்பதனுள் அடங்கும்.

சொற் பொருட் பகுதிகளான பாசஞானத்தினை அடைவது உயிரேயாகும். உயிர், பசு எனவும் அழைக்கப்படும். புறத்ததாகிய பாசஞானத்தை அடையப்பெற்று ஆய்வு செய்த உயிரானது பாசப் பொருட்கள் தானல்ல வென அறியப்பெறும். பாசம் யாவும் தன்கீழ் அடங்குவன என உணரும். உணர்ந்த பின், பாசத்தினை நீக்க வழிதேடும். அவ்வழி முயலும். முயற்சியின் பயனுகத் தன்னை மேற் பட்ட ஒன்ருகக் கருதும். இதனுல் ஒருவகைச் செருக்கு மிகும். தன்னையே பிரம மென மதித்திடும். முத்தனுகிய தன்னை அநாதி முத்தனுக மதிக்கும் இந்த அறிவினைப் **பசுஞானம்** என்பர். இது உண்மை முத்தியை உண்டாக்காது. ஆதலால், மெய்ம் முத்திநிலையை உயிர் ஒரு சிறிதும் மயக்க மடையாமல் தருக்க முறையாகவும், அநுபவ வழியாகவும் தெரிந்தொழுக வேண்டி யுள்ளது.

மேற்கூறிய உண்மை முத்திநிலையினை உணர்த்து வன சாத்திரங்கள் எனப்படும். இச் சாத்திர உண்மைகள் தோத்திர வடிவாகவும் ஓதப்படும். இவற்றிற்கு

ஆதாரமாயிருப்பவைகளை **ஆகமங்கள்** என்பர். இவை, உயிர்களின் உய்வு கருதி உயர்ந்தோனாகிய சிவ பெருமானால் கருணையுடன் அருளப்பட்டனவாகும். இவ் வாகமங்கள் விரித்துரைக்கும் அவைகளையே தோத்திரங்களும் சாத்திரங்களும் வேண்டு மளவுக்குச் சுருக்கி விளக்கி யோதுகின்றன. திரு முறைகளும், மெய் கண்டநூல்களும் இத்தன்மை வாய்ந்தனவாம். இவை **பதி ஞான** விளக்கத்துக்கு ஏதுவான நூல்களாம். இவற்றைச் சற்குரு அருளால் தீக்கை முறைப்படி அறியலுறின் பதி ஞானம் தலைப்படும். இப் பதி ஞானமே உண்மை முத்திப்பேறு பயப்பதாகும். இதனால், சாத்திர நூல்களை ஏனை உலக நூல்கள் போல எண்ணி அவமதிக்காமல் ஒவ்வொருவரும் ஓது முறையில் ஓதி ஒழுகி உய்தி பெறல் அவசியமான கடமையாகும். இங்ஙனம் சாத்திர நூல்களை (உணர்வு நூல்களை) (அல்லது) (சிறப்புநூல்களை) ஓதாதார் பிறந்த பயன் இழந்தவரேயாவர். தடுமாற்றம் தீர்க்கும் துணையாகிய மெய்ந் நூல்களை ஓதவேண்டுவது நம்கடமை என்பதை நீதி நூல்களும் வற்புறுத்துகின்றன. வாலறிவன் நற்றாள் தொழத் தூண்டுவனவே பதிஞான மோதும் சாத்திரங்கள். இவற்றைக் கல்லாது பாச பசு ஞானப் பனுவல்களைப் பரக்கக் கற்றதனால் ஆயபயன் ஏதும் இல்லை என்பது தமிழ் வேதமெனப்படும் திருக்குறள்.

உலகில் உண்மைநெறி காட்டும் சமயங்கள் பல உள. இவை யாவும் இறையருளால் அந்த அந்தக் காலங்கட்கும், இடங்கட்கும், உயிர்களின் பக்குவங்கட்கும் ஏற்ப அந்த அந்த மதங்கட்கு ஏற்ற தலைவர்களைக் கொண்டு ஆக்கப்பட்டவையாம். இதுபற்றியே சிற்சில சமயங்கள் அவ்வம் மதத் தலைவர்கள் பெயராலேயே அழைக்கப் படுகின்றன. எல்லாச் சமயங்களின் உண்மை நுண்மைகளையும், எக் காலத்துக்கும், எவ்விடத்துயிர் கட்கும்

ஏற்ற கொள்கைகளேயும் தனக்குள் கொண்ட மைந்தது **சைவசமய** மாகும். இஃது இறைவனே கண்டருளிய தாதலால் சைவம் எனச் சிவ சம்பந்தப் பெயராலேயே தொன்று தொட்டு வழங்கப்பட்டு வருகின்றது. இச்சமயம் தெளிவாகக் கூறுகின்ற கொள்கைகளே சித்தாந்தம் எனப்படும். ஆதலால் சித்தாந்த சமயமென்பதே சைவ சமயத்தைக் குறிக்கும். ஏனைச் சித்தாந்தங்கட்கு அவ்வச்சமயத்தின் பேர் இணைத்து வழங்கப்படுதல் காணலாம். எல்லாத் தெய்வங்களும் சிவத்தில் அடங்கும். எல்லாச் சமயங்களும் சைவத்துள் அடங்கும். உலகில் எத் திசையிற் பாயும் நதிகளும் கடல் ஒன்றிலே கலந்து ஒன்ருகும். இவ்வாருன பெருமை கொண்டதே **சித்தாந்த சைவம்.** இதுபற்றியே அறிஞர் ஜி-யு-போப் அவர்களும் சைவசித்தாந்தம் பற்றிக் கூறவந்த இடத்திலே " The Saiva Siddhanta is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India " எனத் தேர்ந்து கூறலாயினர். ஆகலால், இச் சமயம் கொண்டுள்ள சாத்திர நூல்கள் எச் சமயத்தவரும் பகை பாராட்டாமல் மேற்கொள்ளத் தக்கன என நாம் அறியலாம்.

இந்தச் சித்தாந்த சைவ சமய சாத்திரங்கள் பதினன்காகும். அவை; 1. திருவுந்தியார் 2. திருக்களிற்றுப் படியார் 3. சிவஞான போதம் 4. சிவஞான சித்தியார் 5. **இருபா இருபஃது** 6. உண்மை விளக்கம் 7. சிவப்-பிரகாசம் 8. திருவட்பயன் 9. வினவெண்பா 10. போற்றிப் பஃருெடை 11. கொடிக்கவி 12. நெஞ்சு-விடு தூது 13. உண்மைநெறி விளக்கம் 14. சங்கற்ப நிராகரணம் என்பனவாம். இவையன்றி, இவற்றின் விளக்கங்களாக அநுபூதிமான்களால் ஆக்கியளிக்கப்பட்-டுள்ள பண்டார சாத்திர நூல்களும் உள்ளன. இவை யாவும் **தூய அத்துவித நிலை**யை ஐயமற அறிவிக்கும்

தகையன. இவற்றுள் ஐந்தாவது நூலாக அமையப் பெற்றுள்ளதே இந்த **இருபா இருபஃது** நூல். இந்நூலை அருளிச்செய்தவர் நம் புறச்சந்தான குரவர்களில் இரண்டாமவராகிய **ஸ்ரீ அருணந்திதேவ நாயனர்** ஆவர். இவரது வரலாற்றினை வரலாற்றுக் குறிப்பில் காணலாகும்.

இந்த நூலுக்குள் பத்துத் திருவெண்பாக்களும், பத்துத் திருவாசிரியங்களும் முறையே விரவி வருகின்றன. இத் திருப்பாக்கள் யாவும் **பாச லட்சண**த்தைப் பகுத்து வினைவிடை வடிவில் செப்புகின்றன என்பர். பதிஞான நிலைபேறடைவோர், பாசஞானத்து எழும் ஐயங்கள் யாவும் அகலப்பெறவேண்டுமல்லவா ? ஆதலால், பாசம் பற்றிய எல்லாச் சந்தேகங்களையும் இந்நூல் எழுப்பிக் கசடறக் களைகின்றதென்னலாம். மற்றும், சகலாகம பண்டிதராகிய இந்நூலாசிரியர், கற்போர்க்கு மலைவு ஒரு சிறிதும் தோன்ருவண்ணம், எல்லா ஆகம சாரங்களை யும் பாச நீக்கக் கருவியாகிப் பயன்படுமாறு கடா விடைகளால் (கேள்விமுறையால்) அருளிச்செய்ய லுற்ருர் என்னலாம். இவ்வாசிரியர், ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனரின் உகந்த முதல் மாணவரானவர். அப் பெருமானைச் சிவமாகக் கொண்டும் கண்டும் உபதேசப் பேறடைந்தவர். ஆதலால், தமது ஆசாரிய மூர்த்திக ளிடம் அவ்வப்போது பாச லட்சணம் பற்றி உசாவித் தெளிந்தடைந்த ஞானச் செல்வங்களை இந்நூல் வாயிலாக நமக்கு வாரி வழங்கியுள்ளார் எனலும் தக்கதே. பாசம் ஒருவினலன்றிச் சிவத்தினிடம் நேசம் மருவாது. ஆகவே, நாம் யாவரும் பாச நீக்கம் முதற்கண் பெற்ருலே போதுமானது. பாச நீக்கமே சிவப்பேற்றினை அளிப்பது. இதனலேயே இந்நூலாசிரியர் சிவஞான போத நூலுக்கு விரிவுரையேபோலச் சிவஞான சித்தியார் நூலை இயற்றியருளியதோடு அமையாமல்

நம்மனோர்க்குப் பாசநீக்கமே முதற்கண் வேண்டுவதாதலின் இந்நூலொன்றையும் பரமகருணையினாற் செய்தருளினாராவர். ஆதலின், பாசந்துடைக்கும் நோக்கமுடைய நாமனைவரும் இந்நூலினை ஓதல் பெரிதும் வேண்டும். மற்றும், இந்நூல் கூறும் கருத்துக்கள் நம்மனோர்க்கு எளிதில் விளங்குதற் பொருட்டாக இத்திருவாவடுதுறை ஆதினத்திலே ஐந்தாம் ஞானகுரவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ வேலப்பதேசிக மூர்த்திகள் அருளுபதேசம் பெற்ற ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகள் உரையொன்றும் வரைந்தருளியுள்ளனர். இஃது ஆதீனவுரை எனப்படுவது. பின்னும், இந்நூற் கொள்கைகளை நாம் யாவரும் உள்ளங் கொள்ளற் கருதிப் பேட்டை திரு. ஆறுமுகம் பிள்ளையவர்களின் மகனார் திரு. ஆ. ஈசுவரமூர்த்திப் பிள்ளையவர்கள் எளிய உரையொன்றும் வரைந்துதவியுள்ளார்கள். இவ்வுரைகளைத் துணைக்கொண்டு எழுவதே இந்த உரை நூல்.

கிடைத்தற்கரிய இப்பிறப்பிலேயே பாசநீக்கமும் சிவப் பேறும் அடையவேண்டுவது நம் உரிமையாதலால், இவற்றிற்கான மெய்ந் நெறிகாட்டும் சாத்திரநூலாகிய இதனை ஓதவேண்டுவது நம் கடமையாகும். இக் குறிக்கோளுடையதே இவ் வரலாற்றுரை. பாசம் அருகுக! சிவ நேசம் பெருகுக! பிற பெரியார் நூல்களிலும் "போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" எனப் பேசப்படுதல் காணலாகும். **"இஷீகதூல மக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத"** என்ற சாந்தோக் யோபநிஷத் வாக்கியமும், தலைப்பிலே தரப்பட்டுள்ள நம் நான்காம் திருமுறைப் பாட்டின் செய்தியை அரண் செய்தல் அறியலாகும். பறக்க பவபாசம்! சிறக்க சிவநேசம்!

ஸ்ரீ அருணந்தி தேவநாயனார் திருவடிவாழ்க!

**தே. ஆ. ஸ்ரீ.**

உ
சிவமயம்

# 2

## நூலாசிரியர்

# ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் வரலாறு

**[கி-பி. 1195 — 1250]**

**இருணந்தும் உயிரெல்லாம் ஈறில்லாப் பதமுறவே**
**வருநந்தி மரபுமுறை வாழ்வருளும் பரஞ்சோதி**
**தெருணந்து போதமுரை மெய்கண்டார் சேவடிநல்**
**கருணந்தி வருகுருவெம் *அருணந்தி* அடிபுனைவாம்.**

— தே. ஆ. ஸ்ரீ

***இருபா இருப*** *:தென்னும் இச்சித்தாந்த நூலின் ஆசிரியர் திருத்துறையூர்* ***ஸ்ரீ அருணந்திதேவ நாயனார்*** *ஆவர். பெருகுநலமளிக்கும் தன்மையுடையது குரு சரிதம் சிந்தித்தல். ஆதலின், இங்கு இப்பெருமான் திவ்விய சரிதம் இயலுமளவு கூறுவோம்.*

## நடு நாடு

*தொண்டை நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் நடுவே உள்ளது திருமுனைப்பாடிநாடு எனப்படும்* ***நடு நாடு.*** *தொண்டைநாடோ சான்றோருடையது. இவர் தம் சால்பு உயிர்க்குறுதி பயக்கும் உயர்வுடையது. சோழ நாடோ சோற்றால் மடையடைக்கும் வளமுடையது. எனவே இஃது உடலுக்கு உறுதி உதவும் பெருமை படைத்தது. இவ்விரண்டு நாடுகட்கும் நடுவே இலகுவது- நடுநாடு. உடற்குறுதிகொண்டு உயிர்க்குறுதி எய்துவதே*

மக்களாவார் குறிக்கோள். ஆதலின், இவ்விருதிறப் பயனையும் நம்மவர்க்கு நல்கும் சிறப்புடையது நடுநாடு என நாம் இயம்பலாகும். பதி, **பசு**, பாசம் என்னும் முப்பொருள்களுள் நடுவணதாகிய பசு, நாடுதற்கான பொருளை நினைவூட்டிக்கொண்டேயிருப்பது இந்நாட்டின் நற்பெயர். மற்றும் இந்நாட்டின் பெருமையினை,

**"மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி**
**அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்**
**பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்**
**சிறந்ததிரு *முனைப்பாடித்* திறம்பாடும் சீர்ப்பாடு"**

என்னும் சேக்கிழார் திருப்பாட்டானும் அறியலாம். இத்திருப்பாட்டிற் கூறப்பட்டுள்ள திருநாவுக்கரசர் ஆலால சுந்தரர்கள் போல நாம் இங்கு நம் மெய்கண்டதேவ நாயனாரையும் அருணந்திதேவ நாயனாரையும் கருதலாமன்றே! மற்றும், திருவூர்கள் இருபத்திரண்டனைக் கொண்டது இந்த நடுநாடு என்பர்.

## திருத்துறையூர்

இவ்வூர் நடுநாட்டுச் சிவத்தலங்கள் இருபத்திரண்டில் ஒன்றும். நம்பியாரூரர் தமக்குத் தவநெறி அருளும்படி பெருமானை வேண்டிக்கொள்ளலும், அங்ஙனமே காட்சி கொடுத்தருளிய தலம் இது. சுவாமி திருப்பெயர் பசுபதீச்சுரர் என்பதாம். தவநெறியாளுடையார் என்பது கல்வெட்டுக்கூறும் பெயர். திருவதிகைப்பதிக்கு வடக்கில் தென்பெண்ணை நதியின் தென்கரைப்பகுதியில் இவ்வூர் உள்ளது. பண்ணுருட்டிக்கு வடமேற்கில் ஐந்துகல் தொலைவில் உள்ளது. "பண்ணார்மொழிப் பாவையர் வடபாற்பெண்ணையில் ஆடும் **துறையூர்**" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற பீடுடையது. இது விழுப்புரத்தை அடுத்த புகைவண்டி நிலையம் உள்ள ஊர்.

இத்திவ்விய தலமே நம் ஆசாரியமூர்த்திகளின் அவதாரத் தலமாகும். மூன்றும் இராசராசசோழனை வென்று சேந்தமங்கலத்தே சிறைப்படுத்திய கோப்பெருஞ்சிங்கன் ஆட்சிக்குட்பட்டிருந்த அக்காலத்திய ஊர்களில் இதுவும் ஒன்றும்.

## திரு அவதாரம்

மேற் கூறப்பட்ட திருத்துறையூர்த் திருப்பதியிலே நீண்டகாலமாகக் கல்வி கேள்வி சிவபூசைகளிற் சிறப்-புற்ற ஆதி சைவப் பிராமணர்கள் வாழ்ந்துவந்துளர். இத்தகையகுலத்தவரே நம் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் மாமனாகிய ஸ்ரீ சடங்கவி சிவாசாரியர். இவருக்குப் பின்னர் இருபத்தொன்றுவது பரம்பரையிலே சிறந்தவர் களாகிய பெற்றோர்களிடமாக இந் நூலாசிரியர் திருவவ தாரம் செய்தருளினர். பெற்றோர் பேர்களும் இவரது இயற்பெயரும் இன்னவையெனை அறிதற்கியன்றில.

## கல்விப் பெருமை

இவர், தாம் பிறந்த ஆதி சைவமரபிற்கு ஏற்ற வண்ணம் வேதாகமவல்லுநரால் சாதகன்ம முதலான சடங்குகள் சாலச்சிறப்புடன் செய்யப்பெற்று, உரிய பொழுதிலே வித்தியாரம்பமும் பெற்றனர். முன்னர் வேதம் வேதாங்கம் ஆதியாயகலைகளை ஓதியுணர்ந்தனர். அப்பால் விதிப்படி சிவதீக்கை பெற்றனர். பின்னர், காமிகமாதி சைவாகமங்கள் இருபத்தெட்டினையும், மிருகேந்திரமாதி இருநூற்றேழ் உபாகமங்களையும் ஐயமறப் பயின்று **சகலாகம பண்டிதர்** என யாவரும் போற்ற விளங்கினர். இங்ஙனம் கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்து விளங்குவதை உணர்ந்த சான்றோர்கள் இவர்க்கு ஆசாரியாபிடேகமும் குலமுறைப்படி செய்வித்தனர். இவர் வடமொழியிற்போலவே தென்மொழியிலும் வல்-

லவராகித் தேவாரமுதலான திருமுறைகளையும் ஓதி யுணர்ந்து **சித்தாந்தச்செல்வ**ராகித் திகழ்ந்தனர் சிவ புண்ணியச் சிறப்புடைய இவர் தம் குலமுறைப்படியே ஆங்காங்குள்ள சீடவர்க்கத்தினருக்குத் தீக்கையாதிகள் செய்தும், சிவாகமச் சொற்பொழிவும், உபதேயமும் புரிந்-தும் இனிதுவாழ்ந்து வருவாராயினர். இவரது இயற்-பெயர் ஸ்ரீ சதாசிவசிவாசாரியர் என்பர்.

## அச்சுதகளப்பாளர் பிள்ளைப்பேறு

நடுநாட்டிலே, தேவகன்னியரும், காமதேனுவும், வெள்ளையானையும் பூசித்த பழம்பதி பெண்ணாகடம் எனப் படுவது. இங்குக் கோயில்கொண்டுள்ள சிவபெருமான் திருப்பெயர் சுடர்க்கொழுந்தீசுரர் என்பதாகும். இவ்வூர் ஆலயத்திற்குத் தூங்கானைமாடம் என்பது பெயர். கலிக்கம்பநாயனார் தலம் இதுவாம். சந்தானசாரி-யர்களில் ஸ்ரீ மறைஞானசம்பந்தர் இடம் இஃதென்பர். அப்பர்சுவாமிகள் திருபதிகம்பாடித் தமது தோளிலே சூலஇடபக்குறி பொறித்தருளப்பெற்றனர் இப்பதியில். தவம்புரிய விரும்புவோரைக் கடந்தைத் தூங்கானைமாடம் தொழுமாறு கட்டளையிடுகின்றனர் ஞானசம்பந்தசுவாமி கள். இத்திருப்பதியிலே, களப்பாளர், எனப்படும் வேளாளர்குடியிலே அச்சுதர் என்பார் ஒருவர் செல்-வந்தர் வாழ்ந்துவந்தனர். சிற்றரசரையொத்த சிறப்புடையவர் இவர். இவரது வாழ்க்கைத்துணைவி-யார் மங்களாம்பிகை என்னும் மங்கையார் ஆவர். இவர், கம்பரைக் காத்தளித்த சடையப்ப வள்ளலாரின் மகனாராகிய காங்கேய பூபதியாரின் தங்கையாராவர். இவர் ஊர் திருவெண்ணைநல்லூராகும். சிவநெறிச் செல்வ ராகிய அச்சுதகளப்பாளர்க்கு மற்றெல்லாச் செல்வங் களுமிருந்தும் மகப்பேறு வாய்க்கஇல்லை. இவருடைய குலகுருவாக விளங்கியவரே நம் சகலாகம பண்டிதர். அச்சுதர் தமக்கொரு சுதரைவிரும்பித் தம் குலகுருவிடம்

விண்ணப்பித்தனர். பண்டிதர் திருமுறைகளை அருச்சித்-துக் கயிறுசார்த்திப்பார்த்தனர். அப்போது ஆளுடைய பிள்ளையார் அருளிச்செய்துள்ள திருவெண்காட்டுத் திருப்பதிகத்து **இரண்டாம் திருப்பாடல்** காணப் பட்டது. அப்பாடல், "பேயடையா" எனத்தொடங்கு வது. இத்திருப்பாட்டின் பொருள்வழியே அச்சுதகளப்-பாளர் தமதில்லாளோடும் திருவெண்காட்டில் வசிக்க லுற்று, முக்குளநீரில் மூழ்கிச்சிறிதுகாலத்திலே ஓர் ஒப்பற்ற ஆண்மகவை அடைந்தனர். இவர் திருப்பெயர் **சுவேதவனப்பெருமான்** என்பதாகும். இப்பிள்ளையார் திருவெண்ணெய்நல்லூரிலே தமது மாமன் இல்லில் வளர்ந்து வரலாயினர். ஈராண்டளவிலே மெய்யுணர்வு பெற்றனர். இவரைத் திருக்கயிலையினின்றும் பொதிய மலைக்குப் போய்க்கொண்டிருந்த பரஞ்சோதி மாமுனிவர் ஆட்கொண்டு அருமறைபகர்ந்து **மெய்கண்டார்** என்னும் திருப்பெயர் சூட்டிச்சென்றனர். இவரே முப்பொருள் உண்மையை **இரண்டே** பெரும்பிரிவில் நாட்டும் **சிவஞானபோதம்** என்னும் செந்தமிழ் **முதற்பனுவலை** உபகரித்தருளிய புறச்சந்தானத்து **முதற்குரவர்** ஆவார். [திருவெண்காட்டுப் பதிகத்து **இரண்டாம் திருப்பாட்-டால்** அவதரித்தருளிய இப்பெருமான், **இரண்டாம் வயதிலே** ஞானநல்நூலை அருளிச்செய்ததும், அப்பனுவல் **இரண்டே அதிகாரத்த**தாக அமைந்திருத்தலும் இயைபு பூண்டிருத்தல்கண்டு களிகூரல் தகும்.] இங்ஙனமாகிய இப்பெருமான் திருவெண்ணெய்நல்லூரிலே பொல்லாப் பிள்ளையார் வழிபாட்டுடன் நன்மாணுக்கர் பலர்க்கு ஞான உபதேசம் நாளும் புரிந்து வருவாராயினர்.

## பண்டிதர் மெய்கண்டாரின் சீடராதல்

இந்தச் சமயத்திலே திருத்துறையூர்ச் சதாசிவ சிவா-சாரியர் எனப்படும் நம் சகலாகம பண்டிதர் திருவெண்-

ணெய்நல்லூருக்கு வந்தனர். யாவரும் இவரைத் தொழுது வரவேற்றனர். ஆனல் மெய்கண்டார் மட்டும் இவர்பால் வந்திலர். உடனே பண்டிதர் மெய்கண்டார் எழுந்தருளியுள்ள இடத்தே வந்துநின்ருர். அப்போது மெய்கண்டார் தம்முடைய சீடர்கட்கு ஆணவமல உண்மை பற்றிய பாச இலக்கணத்தை விளக்கிக் கொண்டிருந்தனர். கண்டதும், குலாசாரியர் நம் ஞான தேசிகரை நோக்கி ஆணவத்தின் சொரூபம் யாதெனக் கேட்கலுற்ருர். ஸ்ரீ மெய்கண்ட தேசிகர், சிவாசாரியர்பால் பரிவு கூர்ந்து அவரை ஆட்கொள்ளத் திருவுள்ளம் பற்றி அவரையே சுட்டிக் காட்டி "இங்ஙனம் நிற்கும் நுமது நிலேயே" ஆணவமாகும் எனத் தெளிவுறுத்தினர். பக்குவியாகிய குலாசாரியர் குணந் திருந்தப் பெற்ருர். தருக்கொழிந்தார். அன்புருக் கொண்டார். ஞானசாரியர் திருவடிகளிலே விழுந்தார். ஆடகொள்ள வேண்டினர். உடனே நம் ஞானதேசிகர், அவருக்குச் சிவதீக்கை புரிந்து, தமது சந்தானத்து பிரதம ஆசாரியரது திருநாமத்தையே சூட்டி, ஞானபிடேகம் செய்து, சிவஞான போதத்தின் வழியே ஆகமாந்தப் பொருளேத் தெளிவுறுத்தியருளினர். அன்றுதொட்டு நம் சகலாகம பண்டிதர் **ஸ்ரீ அருணந்திதேவ நாயனர்** என வழங்கப் படலானர்.

## ஸ்ரீ மறைஞான சம்பந்தரை ஆட்கொள்ளல்

இங்ஙனம், ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனரின் முதன்மைச் சீடராகிய ஸ்ரீ அருணந்திதேவ நாயனர், கிடைத்தற்கரிய விழுநிதி பெற்ருற் போன்று தமது ஆசாரிய மூர்த்திகளே விட்டுப் பிரிதலின்றி அவர்தம் உபதேசங்களேயெல்லாம் வேண்டவும் செவிமடுத்து சிவானுபூதிமானகத் திருவெண்ணெய்நல்லூரிலேயே வாழ்ந்துவரலானர். இவருடன் திருவதிகை மனவாசகங் கடந்தாரும் மற்றும் நாற்பத்தெழுவரும் ஸ்ரீ மெய்கண்ட

தேவரின் அடியுறை ஆயினர். இவ்வாறுகத் திருவெண்-ணெய்நல்லூரிலே ஸ்ரீ மெய்கண்ட சிவனுர் தலைமையின் கீழ் ஸ்ரீ அருணந்தி தேவராதி நாற்பத்தொன்பது சீடர்கள் வீற்றிருந்து சைவ சித்தாந்தத்தினை ஆய்ந்தும் தோய்ந்தும் அகிலமறியச் செய்துவந்தனர். இவ்விதம் இவர்கள் செய்திராவிடின் பல்வேறு சமயத் திரிபுணர்ச்சியாளர் களால் நம் தொன்மையும் உண்மையுங் கொண்ட சித்தாந்த சமயம் சீர்குலைந்திருத்தல் கூடும். தென்னு-டைய சிவன் எந்நாளும் அங்ஙனம் அடைய விடமாட்டாரன்றே !

இந்த நிலையிலே கி—பி. 1230-ஆம் ஆண்டளவிலே நடுநாட்டில் மருதூர்ப் பதியிலே மறையவர் மரபிலே பராசர குலத்திலே பரமசிவானந்தம் என்னும் திருப்பெயருடையார் ஒருவர் பிறந்து, ஓதி, வீடுபே-றெய்தற்குரிய வழி காட்டும் ஞானுசாரியர் ஒருவரை நாடிப் பெண்ணுகடத்தே சென்று வதிவாராயினர். இத் தலத்துக்கு அக் காலையில் நம் நாயனுர் தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தினைப் பணிதற்கு எழுந்தருளினுர். இவர்தம் திருவடியிலே வந்தடைந்தார் மருதூரர். கண்டதும் அவரது பக்குவ நிலைக்குவந்து அவரைத் தமது சீடராக்கி மறைஞானசம்பந்தர் என்ற நாமகரணமும் சூட்டியருளினர். சிவஞானபோத முதலான ஞான நூல்களையும் தெளிவுறுத்தினர். தமது ஞான குரவர் அருளிச்செய்த சிவஞான போதத்துக்கு விளக்கமாகத் தாம் ஆசிரியர் ஆணைப்படி ஆக்கிய **சிவஞான சித்தியார்** பரபக்க சுபக்கங்களையும், இந்த **இருபா இருபஃது** நூலினையும் ஸ்ரீ மறைஞான சம்பந் தற்குணர்த்திச் சிலகாலம் கழித்துத் தம்முடைய பிறப்பிட மாகிய திருத்துறையூர்க்கு எழுந்தருளினர்.

## முத்திப்பேறு

இதனிடையிலே, கி—பி. 1245-ஆம் ஆண்டிலே தமது ஞானதேசிகராகிய ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுர்

சிவானந்த நிட்டை கூடி ஐப்பசித் திங்கள் சுவாதி நன்னாளிலே அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமானோடு இரண்டறக் கலத்தலாகிய சுத்தாத்துவித முத்தி-யடைதலும், அப் பெருமானுக்குரிய திருக்கோயில் நிருவுரு நிறுவுதலைத் திருவெண்ணெய்நல்லூரிலே புரிந்து பூசையாதிகளாற்றினர். இதன் பின்னர் நாயனார் சிவஞான சித்தியார், இருபா இருபது என்னும் இரு பெரும் பனுவல்களை ஆக்கியளித்தாராவர். இதனை, **"எம்குருநாதன் கொண்டு தீதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே"** எனவும், **"மெய்கண்டான் நூல் சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றும்"** எனவும் நம் நாயனார் நவிலுதலா-லறியலாகும். இவரையும், இவர்தம் நூலின் பெருமை-யையும், தாயுமானவர் குருமரபு வணக்கத்தே எந்நாட் கண்ணியில் "பாதி விருத்தத்தால் இப்பார் விருத்தமாக **உண்மை சாதித்தார்** பொன்னடியைத்தான் பணிவ தெந்நாளோ" எனக் கூறுதலாலும் அறியலாகும்.

பின்னர், ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் திருத்துறை-யூரிலே கி—பி. 1250-ஆம் ஆண்டளவில் **புரட்டாசித் திங்கள் பூர நன்னாளிலே** தம் திவ்விய திருமேனி சோதிப் பிழம்பாக, பெருங் கருணைக் கடலாகிய சிவபெருமான் திருவடிக் கண் இரண்டறக் கலத்தலாகிய சிவ சாயுச்சியம் அடைந்தருளினர். இவரது நூல்கள் "சிவாகமார்த்தங்கட்கெல்லாம் உரையாணி" யாதலால், மக்களாகப் பிறந்த நாமனைவரும் தகுதிபெற்று முறைப்படி ஓதி ஒழுகிப் பாசவீடு பெற்றுச் சிவப்பேறெய்துவோமாக!

ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் திருவடி வாழ்க !

**தே. ஆ. ஸ்ரீ.**

உ

சிவமயம்

## பாச வரலாறு

" இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு " — *திருக்குறள் 352*

" ஒன்றதாய் அநேக சத்தி யுடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை யார்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச் செம்பினிற்க ளிம்பேய்ந்
தென்றுமஞ் ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே "

— *சி. சி.*

*நாம் மக்களாகப் பிறந்துள்ளோம். இப் பிறப்பு எதனால் வந்தது? இப்பிறப்பு உயர்ந்ததொன்றாகக் கருதப்பட்டாலும் நிலைத்த இன்பமுடையதாக இல்லையே! துன்பங்களும் தொடர்ந்து காண்கின்றனவே! ஆதலால், இப்படிப்பட்ட பிறப்பு எவ்வாற்றால் நீங்கும்? இவற்றிற் கெல்லாம்* ***பாசம்*** *என்ற ஒன்றைப்பற்றி நாம் அறிந்தால் தக்க விடை காணலாம். இத்தகைய பாசத்தால் நாம் பிணிப்புண்டிருத்தலால்* ***பசு*** *எனப்படுகிறோம். பசுவின் தன்மையை, "* ***மூல****மா* ***மல****த்தால் அன்றே மூயபே ரறிவதாகிச் — சீல****மா*** ***யை****யினாற்றேன்றும் சிற்றறி வுடையதாகி — மேலைநாள்* ***வினை****யால் தோற்றம் விளிவுடைத் தாகி வானம்—போலவே அடுத்ததாகிப்*

புணர்வது பசுவின் தன்மை" என்று சுருக்கமாக விளக்கியுள்ளனர் தவத்துறையோர். நமக்கிருக்கும் குற்றத்தைப் போக்கிக்கொண்டாலல்லது குணம் கைவரப் பெறுது. முதலில் நாம், நம்மிடம் பாசம் உள்ளதா என்பதையும், அப்படி உள்ளதாயின் அது எத்தகையது என்பதையும் அத்தகையதை எப்படிக்களைவது என்பதையும், அங்ஙனம் களைவதால் விளைவது யாது என்பதையும் அறியப் பெற்ருமாயின் பாசத்தைப் பற்றிய செய்திகளை முற்றும் அறிதலுறுவோம். இவற்றை நாம் நன்கு தெரிந்து கொள்ளுதற்பொருட்டே ஞான நூல்களை நற்றமிழிலே ஸ்ரீ மெய்கண்டாராதி ஞான குரவர்கள் பரம கருணை மேலீட்டால் அருளிச் செய்துள்ளனர். அவர்கள், **பாச உண்மை—பாச இலக்கணம்—பாச நீக்க சாதனம் — பாச நீக்கப் பேறு** — என்னும் நான்கு தலைப்புகளால் பாசத்தைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் பகர்ந்துள்ளனர்.

**பாசம்** எனப்படுவது மாயை, மாயேயம், கன்மம், திரோதாயி என **நான்கும்** ஆணவமலம் **ஒன்றும்** ஆக ஐந்தாகக் கூறப்படும். இவற்றுள் முதலிற் கூறப்பட்ட நான்கும் இடையில் வந்து செயற்கையாய்ச் சேருவன. ஆதலால், இவற்றை **ஆகந்துக** மலம் என்பர். ஆணவ மலம் அநாதியான சேர்க்கையாகவுள்ளது. ஆதலால் இதனைச் **சகசமலம்** என்பர். சகஜம் என்ருலே கூடப் பிறந்தது என்பது பொருளாம். மேற்கூறப்பட்ட சேர்க்கை மலச் செயல்களும், பிற்கூறப்பட்ட இயற்கை மலச் செயல்களும் ஆகிய யாவும் இறைவனுணையால் நிகழ்கின்றன. முதற்கண் ஆணவமலம் பற்றி ஒரு சில கூறுவோம்.

## ஆணவ மலம்

பொதுப்படக் கூறின் சமயங்கள் யாவும் நான்கு பெரும் பிரிவுபெறும். அவை புறப்புறம்—புறம்—அகப் புறம்—அகம் என்பன. இவற்றுள் **புறப்புறச் சமயத்தார்.** லோகாயதர் — (மாத்தியமிகர், — யோகா சாரர், — சவுத்திராந்திகர் ; வைபாடிகர்.) — ஆருகதர் என்ற அறுவகையினர் ஆவர். இவர்களுள் லோகா-யதனைக் **காட்சிவாதி** என்னலாம். மாத்தியமிகர் முதல் வைபாடிகர் இறுதியான நால்வகையினரைப் பவுத்தர் எனப் பொதுப்பட உரைப்பர். இவர்களைப் பொதுவாகக் **கணபங்க வாதிகள்** என்பர். இவர்களுள்ளும், மாத்தியமிகனைச் **சூனிய வாதி** என்னலாம்; யோகா சாரனை **விஞ்ஞான வாதி** என்பர். சவுத்திராந்திகனையும் வைபாடிகனையும் **சமுதாய வாதிகள்** என்க. பின் சொல்லப்பட்ட ஆருகதர் (அல்லது) க்ஷமணர் **அநேகாந்த வாதி** எனப்படுவர். இவர்களெல்லாருக்கும் **ஆணவ மலம் உடன்பாடன்று.**

அப்பால், **புறச்சமயத்தார்,** அறுவகைப்படுவர் என்பர். அவர்களாவார் வைசேடிகரும் நையாயிகரும் எனப்படுகின்ற **தார்க்கிகர் ; மீமாஞ்சகர்** எனப்படும் இரண்டாம் பிரிவினருள் பாட்டாசாரியன் பிரபாகரன் என்ற இரு பிரிவுகள் உண்டு ; மூன்றுமவர் **ஏகான்ம வாதியர்** ஆவர் ; நான்காம் பிரிவினரே **சாங்கியர் ; யோகமதத்தினர்** ஐந்தாமவர் ஆவர் ; ஆறுமவர் **பாஞ்சராத்திரர்** எனப்படுவோர். இந்த அறு பிரிவினருக்கும் **ஆணவ மலம் உடன்பாடன்று.**

இவர்கட்குப் பிறகு கூறப்படுபவர் **அகப்புறச் சமயத்தோர்** ஆவர். இவர்களாவார், **அவைதிக**

**பாசுபதர், மாவிரதர், காபாலர், வாம மதத்தர், வைரவ மதத்தர், ஐக்கிய வாதசைவர்** எனப்படுவர். காளாமுகம் சாம்பவம் முதலனவும் மேலுள்ள அறு பிரிவில் அடங்கும். மேலுள்ளவர்களுள், அவைதிக பாசுபதரைச் சங்கிராந்த சமவாதி என்பர்; மாவிரதரை உற்பத்திவாதி என்பர்; காபாலரை ஆவேச வாதி என்பர். இவர்கள் யாவருக்கும் **ஆணவ மலம் உடன்பாடன்று.**

இதன்மேல் வரும் **அகச் சமயம், பாடாண வாத சைவம், பேதவாத சைவம், சிவசம வாதசைவம், சிவசங்கிராந்த வாதசைவம், ஈசுவர அவிகாரவாத சைவம், சிவாத்துவித சைவம்** என அறுவகைப்படும். இவ்வெல்லாச் சமயங்கட்கும் மேற்பட்ட முடிந்த முடிபாய் நிற்பதே **சித்தாந்த சைவம்** ஆகும். இந்த அகச் சமயத்தாருக்கும் சித்தாந்த சைவருக்கும் **ஆணவ மலம் உடன்பாடாம்.** எனவே ஆணவ மல உடன்பாடுடையவர் எழு திறத்தினர் எனத் தெரியலாகும்.

ஆணவ மலம் உயிருக்கு அநாதியாய் உள்ளதாகும். இது நீங்கப் பெறுவதே முத்தி விளைவாம். இம் மலம் எண்ணிறந்த சத்திகளை உடையது. செம்பிற் களிம்பு போல உயிருடன் சமமாக விரவி நிற்பது. கேவல நிலையிலும் உயிரின் அறிவு செயல் விழைவுகளை விளங்க வொட்டாது மறைப்பது. சகல நிலையிலும் அறிவாதி-யவற்றைக் கீழ்ப்படுத்துவது. எனவே உயிர்களை அவற்றின் வியாபகந் தன்மை விளங்கவொட்டாது மறைத்து ஒடுக்கி அணுத் தன்மைப் படுத்துவதனால் **ஆணவம்** எனப் பெயர்பூண்டது. உயிர்க்கு இஃதொரு குற்றமாய்க் கிடத்தலினால் **மலம்** எனப்பட்டது. பளிங்கு தூய தன்மையதாகவே அகப்படுகிறது. ஆனால், செம்பு

களிம்புள்ளதாகவே கிடைக்கின்றது. இஃது இவற்றின் இயல்பாகும். இவ்வாறே உள்ளது இறைநிலையும் உயிர்நிலையும். பூத இருள் உயிர்களின் கண்ணொளியை விளங்கவொட்டாது மறைக்கின்றது. ஆணவமோ உயிர்களின் ஞானக்கண்ணை மறைக்கின்றது. இதனாலேயே இதனை **இருள் மலம்** எனவும் வழங்கலாற்றனர். இந்த இருள்மலம் ஆன்மாவின் குணமன்று. இதனின் நீங்குவதே இயல்பாகும். உயிருடன் ஒருங்கு இயைந்துள்ள இந்த ஆணவ மலத்தைப் பரிபாகமாக்குதற் பொருட்டே இறைவன் **சிருஷ்டி**யைச் செய்கின்றான். படைப்பின் நிகழ்வினால்தான் உயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்கள் விளங்க ஏதுவாகின்றது. இத்தகைய ஆணவ மலமானது, மயக்கத்துக்கு ஏதுவாகின்ற **மோக**த்தையும், மறித்தற்கேதுவாகின்ற **மத**த்தையும், ஆசை மிகுதிக்கேதுவான **இராக**த்தையும், கவலைப்படுவதற்கேதுவாகிய **கவலை**யையும், தபிப்பதற்கு ஏதுவாகின்ற **தாப**த்தையும், வாடுவதற்கு ஏதுவாகிய **வாட்ட**த்தையும், பலவற்றிற்கும் ஏதுவான **விசித்திர**த்தையும் ஆக இந்த ஏழு வகையான காரியங்களை விளைப்பதாகும். நெல்லுக்கு உமி போன்றதான உயிரின் இக் குற்றத்தைக் களைதலே முத்தி நெறியாகும். (நம் ஸ்ரீ அருணந்திதேவர் வரலாற்றில் இந்த ஆணவ மல நீக்கமே ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாரால் முதற்கண் நிகழ்த்தப்படுகின்றமை காணலாம்.) ஆதலால் சற்குரு கருணையே இதனை நீக்க வல்லதென நாமறிதல் வேண்டும். இந்த ஆணவ மல உண்மையினால்தான் கேவல நிலையிலும் உயிர்கட்குச் சூக்கும விருப்பு வெறுப்புக்கள் உளவாதற்கிடனுண்டாகின்றது. ஆதலால் நாம், “இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தால்” இருவினைக்கு இடஞ்செய்யும் இருள் வினையை இரியச் செய்தல் கூடும். இதுகாறும் ஆணவ மல இயல்பும்

உண்மையும் உரைக்கப்பட்டன. இனி, மாயை என்ற மலம்பற்றியும் ஒரு சில காண்போம்.

**மாயை**

மேற்சொல்லப்பட்ட ஆணவ மலம் பரிபாகமாதற் பொருட்டே படைப்பு நிகழ்கின்றது. இப் படைப்பினை நிகழ்த்துபவன் இறைவன். இறைவனை நிமித்த காரணன் என்பர்.

குடத்தைச் செய்பவன் குயவன். இக் குயவன் குடங்களைப் பிறர்பொருட்டு ஆக்கியளிக்கிறான். ஆதலால் குயவனை நிமித்த காரணன் என்பர். இவ்வாறே இறைவனும். குடத்துக்கு மண் முதற்காரணமாம். இங்ஙனமே உலகிற்கு முதற்காரணம் மாயை ஆகும். எல்லாக் காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குவதற்கும், தன்னிடமிருந்து தோன்றுவதற்கும் காரணமாயிருத்தல் பற்றி மாயை என்ற பெயர் வழங்கிவருகிறது. இச் சொல்லை மாய்தல் ஆதல் என்னும் தூய செந்தமிழ்ச் சொற்களின் புணர்ப்பு என்பர். மாயையினின்றே உலகிற்குக் காரணமாகிய பூதங்களும், அவற்றிற்குக் காரணமான பூதாதி அகங்கார முதலியனவும் தோன்றும். மாயை சடப்பொருளாம். மாயை வித்தும் உலகம் முளையும்போன்றன. மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தி எனப்படும். அதாவது வேண்டும்போது உபகாரப் படுவதாய் அடங்கியிருக்கும் **சத்தி**யாம். இது, சித்துப் பொருளாகிய உயிர்களினிடத்தில் சடசத்தியாகிய மந்திர சத்தி அடங்கியிருப்பதுபோலாம். மாயையும் ஆன்மா உள்ள அன்றுதொட்டே உள்ள பொருளாம். ஆனல் இறைவனிடம் இது அடங்கியிருப்பதாம். மாயை, சுத்தம் அசுத்தம் என இருதிறப்பட்டியலும். இவை யெல்லாம் தத்துவங்கட்குப் பிறப்பிடனுகும். மாயையும், கன்மம் போலவே ஆன்மாவுக்கு உணர்வு உண்டாக்கு

தற்குப் பயன்படுகின்றது. அறிவை விளக்கும் தன்மை உடைமையால் இஃது ஆணவமலத்துக்கு எதிரிடையான இயல்புடையதாகும். மாயை, இறைவனுக்கு உடை-மைப் பொருள் எனப்படும். உடையானுக்கு உரிமையாயிருத்தல் உடைமையின் இலக்கணமாகும். இவ்வுடைமைப் பொருள் இருவகைப்படும். இவற்றுள் அறிவுடைப் பொருள் அடிமை எனப்படும். அறிவில்லாத பொருள் உடைமை எனப்படும். மாயை அறிவில்லா உடைமைப் பொருளாம். இது இறைவனின் தாழ்ந்தெதான்றுதலால் இறைவனைப் பந்திக்காது. பாம்பினிடத்துள்ள விடம் பாம்பைக்கொல்லாது. இதுகாறும் கூறியவாற்றால் மாயை என்பதும் ஓர் **உள் பொருள்** என நாம் தெரிதல் வேண்டும். எனவே மாயை **முதற்காரண ஆற்றலின்** நிலைக்களனும் என்க.

## மாயேம் -- மாயையின் காரியங்கள்

மாயை, சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி மாயை என மூவகைப்படும். பிரகிருதிமாயை அசுத்தத்தின் விளைவாம். சுத்தமாயையினின்று நாதம் முதல் ஐந்து தத்துவங்கள் இயலும். அசுத்தமாயையினின்று கலை முதலிய ஏழுதத்துவங்கள் இயலும். பிரகிருதி மாயையினின்று தன்மாத்திரையாதி இருபத்துநான்கு தத்துவங்களும் இயலும். இவற்றால் **தத்துவங்கள்** சைவசித்தாந்தக் கொள்கைப்படி **முப்பத்தாறும்.** இம்முப்பத்தாறு தத்துவங்களும் பொதுவும், சிறப்பும், பொதுச் சிறப்பும் என மூவகைப்படும். புவனவடிவாகிய தத்துவங்கள் யாவர்க்கும் பயன்படுவன. ஆதலால் இது **பொது** எனப்படும். சூக்குமதேக வடிவங்கள் தமக்கே நுகர் கருவியாகிப் பயன்படுவன. ஆதலின் இவை **சிறப்பு** ஆகும். தூலதேக வடிவங்கள் தனக்கும்

பிறர்க்கும் பயன்படுதலின் **பொதுச்சிறப்பு** ஆம். மாயையின் காரியங்கள் தனுகரணபுவன போகங்களாம். பொதுப்படநோக்கின் மாயையின் காரியங்களான மாயேயம், உயிரின் ஆணவமலபந்தத்தை நீக்குதற்குத் துணைபுரியும் இயல்புடையன என்னலாம். இருட்டை நீக்குவதற்குக் கையில் உள்ள விளக்குப்பயன்படுவது போல்வது இம்மாயைச்செயல். மாயையும் ஒருவகை மலமேயாயினும், ஆடையின் அழுக்கை நீக்குவதற்கு உவர்மண் என்னும் அழுக்கு உதவுவதுபோலும் பயன் படுகின்றதெனை நாமறிதல் தக்கது.

**கன்மம்** - வினை

வினை என்பது உயிரின் சிற்றறிவினால் நிகழும் விருப்பு வெறுப்புக்களை ஏதுவாகக்கொண்டு நிகழ்வதாம். இது மனம், வாக்கு, காயம் என்னும் கரணங்களால் மந்திராத்துவா முதலியவற்றினிடமாக ஈட்டப்படுவது. இவ் வினையானது சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என மூவகைப்படும். பக்குவப்படுமளவும் சூக்குமமாய்ப் புத்திதத்துவத்தைப்பற்றி மாயையிலே கிடப்பது **சஞ்சிதம்** எனப்படும். இதுகளஞ்சியம் போல்வது. இனி, ஒருபிறப்பிலே அனுபவித்தற்கென முகந்து கொள்ளப்பட்டதாய்ச் சாதி, சனகம் அபூர்வம், ஆதி தெய்விகம் முதலனவாகப் பலதிறப்பட்டு **அதிசூக்குமமாய்** நிற்கும் கன்மமே **பிராரத்தம்** எனப் பெயர் பெறும். பிராரத்துவ புசிப்பின் போதே நிகழும் புது வினைவாகிய நால கன்மமே **ஆகாமியம்** எனப்படும். இவ்வினைகள், உலகம் — வைதிகம் — அத்தியான்மிகம் — அதிமார்க்கம் — மாந்திரம் என ஐவகைப்பட்டு ஒன்றின் ஒன்று உயர்வுடையதாய் ஐவகைக்கலைகளில் அடங்கி அசுத்தம் மிச்சிரம் சுத்தம் எனப்படும் போக வகைகளைப் பயக்கும் என்ப. இக்கன்மமும் மலம்

என்றே கூறப்படும். இதுமாயைபோலும் உயிர்க்கு மல நீக்கத்துக்காக உபகாரப்படுவதாகும். எல்லாங்கூடியும் வினை எனப்படுவது நல்வினை தீவினை என இருபகுப்புள் அடங்கும். இவற்றின் பயன்கள் இன்ப துன்பங்களாம். வினைகள் அறிவில்லாத சடப் பொருள்களாம். எந்த வினையும் முனைப்போடு செய்யப் படின் அடுத்த பிறப்புக்கு ஏதுவாய் விடும். வித்திலிருந்து மரமும், மரத்திலிருந்து வித்தும் மாறி மாறித் தோன்றுவதுபோலவே வினையினுல் பிறப்பும், பிறப்பால் வினையும் மாறி மாறி வரும். இதனைக் **கன்மச்சுழல்** என்பர். இறைவன் உயிர்களை அவற்றின் முயற்சிக்கு ஏற்ப இன்ப துன்பங்களை நுகரச் செய்வன். தாய் தந்தையர், தம்மக்களை அடித்தும் அணைத்தும் போற்றுதல் போலாகும் இறைவன் கன்மப் பயனை உயிர்கட்கு ஊட்டும் செயல். இறைவன் இங்ஙனம் புரிவது அவனது இருவகைக் கருணையினுல்தான். இறைவன், உடல், கருவி, செய்பொருள், காலம், நியதி முதலியவற்றை உயிர்களோடு கூட்டுவித்தால்தான் அவை ஒன்றைச் செய்யவும் துய்க்கவும் கூடும். இம்முயற்சியை இறைவன் அருள் என்பர் தூயோர். மருத்துவ நூலின் வழி ஒழுகுவோரைப் பிணி பீடியாது. இவ்வாறே இறைவன் அருளியுள்ள சித்தாந்த நெறி எனப்படும் பொய்தீர் ஒழுக்க நெறி ஒழுகுவோரைப் பாவம் பற்ருது. இதனுல் நரகம் இராது. தீயொழுக்க முடையாரை உலகில் அரசர் ஒறுப்பதுபோலவே இறைவனும் துன் பூட்டி ஒறுக்கும். "நன்னடை நல்கல் வேந்தற்குக் கடன்" என்ற கூற்று இக்கருத்துக்குத் துணை செய்யும். கன்மமும் இறைவனுக்கு (மாயை போலவே) உடைமைப் பொருளாம். அரசனுக்கு அடங்கி நடக்கும் அமைச்சர் முதலிய உத்தியோக சத்திகளும், அவற்றைத் தொழிற்படுத்தும் சட்டமும் போல்வனவே மாயையும்

கன்மமும். ஓர் அலுவலை அரசனால் தரப்பெற்றுச் சட்டப்படி நடக்கும்போதும் அரசன் ஆணைக்கு அடங்கியே நடக்கவேண்டியுள்ளது. எனவே, மாயையின் காரியமான தனுகரண புவன போகங்களும், அவற்றிற்கென விதிக்கப்பட்ட கன்மத்தின் காரியமாகிய இன்ப துன்பங்களும் இறைவன் ஆணையின் வழியே வருதலால் மாயை கன்மங்களின் காரியங்களும் இறைவற்கு உடைமையாம் என அறிதலாகும். " வகுத்தான்வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது " என்னும் குறட் பொருளும் ஈண்டைக்கு ஏற்புடையதாகும். " நீ யான சுக துக்கம் குறியா வினை என்று கொள் " என்பது உண்மை விளக்க வாசகம். இதுவரையில், கன்மம் பற்றிய சிற் சில கருத்துக்களைக் கண்டோம். இனிப் பாசத்தினை உயிரனுபவிக்கச் செய்து மலநீக்க உதவி யாற்றுகின்ற திரோதான சத்தி பற்றி ஒரு சில கருதுவோம்.

## திரோதாயி

ஆணவ முதலிய பாசம் அநாதியே. உயிர்கள் அறிவுக் குறைபாடுடையன. பாசம் அறிவற்றது. ஆதலால் பாசத்தைக் காரியப்படுத்துவது இறைவன் செயலாம். தாமரை, கூம்புதலும் அலர்தலும் ஞாயிற்றின் செயலால் கொண்டுள்ளது. இறைவன் ஒன்றினும் தோய்வின்றி நிற்கும் தன்னுண்மையில் சிவம் எனப்படுபவன். ஆனால், உலகெலாமாகி உடனாய் உயிர்களின் வழி நிற்கும் தன்மையில், **சத்தி** எனப்படும். சத்தி என்பது ஆற்றல் ஆகும். ஆற்றல் என்னும் சொல், வல்லமையையும், செயலையும் குறிக்கும். ஆக்கலாதி எச்செயல்களும் வல்லமைச்செயலாலேயே நடைபெறுகின்றன என்பதே அயல்நாட்டறிஞர்களான ஆசிரியர்கள் **ஜேம்ஸ், ஜோத்** என்பவர்களின்

கொள்கையுமாகும். இந்த ஆற்றலை **அருள்** என்பர். இறைவனது அருள் எனப்படும் ஆற்றல் ஐவகைப்படும். அவை பராசத்தி— **திரோதானசத்தி** — இச்சாசத்தி — ஞானசத்தி — கிரியாசத்தி என்பன. இவற்றுள் பராசத்தி என்பது **பொதுப்பட** எல்லா உயிர்கட்கும் கிருபை புரிய வேண்டும் என்ற இறைவனின் கொள்கை ஆகும். **திரோதானம்** எனப்படுவது, உயிர்களின் குற்றமாகிய மலம் பக்குவம் ஆகும் பொருட்டு **ஐந்தொழி** லாற்ற இறைவன் கருதுவதாகும். இந்த நிலை உயிர்களை அவற்றின் கன்மங்கட்கு ஏற்றவண்ணம் செலுத்தவும், போகங்களை ஆக்கவும் எண்ணுவதாகும். இந்த எண் ணத்தினை உயிர்கள் அறியமாட்டா. உயிர்கட்கு அறிவிக் கப்படுவதுமில்லை. இங்ஙனம் உயிர்கள் அறியாமலும் அறிவிக்கப்படாமலும் இவ்விறையாற்றல் நிகழ்வதால் திரோதானம் எனப்பட்டது. ஏனைய மூன்று சத்திகளும், பக்குவமடைந்த உயிர்களை அறிந்து அவற்றிற்கு முறையே கிருபை புரிய எண்ணுதல் **இச்சை** எனவும், செய்யவேண்டுவன அறிதல் **ஞானம்** எனவும், செய்தல் **கிரியை** எனவும் கூறப்படும். இவற்றுள் பராசத்தியே இறைவனுடைய **சொரூபம்** (சிறப்பியல்) ஆகும். ஏனையநான்கும் அதனின் வேறுபாடுகளாம். ஆதலால் இவை **தடத்தம்** (பொதுஇயல்) எனப்படும். நெருப் பின் சிறப்பியல் சுடுதல் ஆகும். இச்சூடு ஒன்றே வியாபாரபேதத்தால் நீற்றுவது — பாகம் செய்வது — வற்றச் செய்வது எனப்படும். இறையாற்றற்கு இவ்- வுவமைகாட்டப்பட்டுள்ளது. இவ்வைந்தினையும் ஒருசேரக் கூறுகையில் **அருட்சத்தி** என்பர். இந்தஅருள்தான்வினைப் பயனை உயிர்கள் துய்க்கச் செய்கின்றது. இதனால் சத்தி, **துணைக்காரணம்** எனப்படும்.

மற்றும் **திரோதானம்** எனப்படுவது மறைத் தலைச் செய்யும் சத்தியாம். இதனை ஆதிசத்தி எனவும்

கூறுப. பாசம் அநாதியானது. பாசகாரியம் **'வள்ளலால் ஆம்'** என்று ஞான நூல்கள் கூறுகின்றன. இங்ஙனம் கூறப்படுதலால் திரோதான சத்தி உண்டென்பதை உணரலாம். உயிர்கள் **பக்குவம்** அடைய வேண்டியுள்ளது. இப் பக்குவத்திற்கு **அநுபவமே** வேண்டும். இந்த அநுபவம் **வினைப்பயன்**களைத் துய்ப்பதால் விளையும். இந்த வினைகளை உயிர்கள் அநுபவிக்கும்படி கூட்டிவைப்பதே இறைவனுடைய **அருள்** (சத்தி) ஆகும். இந்த அருளெனப்படும் சத்தியானது உயிர்கள் அனுபவிக்கவேண்டிய விஷயங்களில் உள்ள குணத்தையும் குற்றத்தையும் அவ்வுயிர்கள் அறியவொட்டாமல் மறைக்கின்றது. இதுவே **திரோதானம்** எனப்படும். இங்ஙனம் மறைக்காவிடில் அநுபவம் கைகூடாது. அநுபவம் கைகூடாவிடின் மும்மலங்களையும் காரியப்படுத்தியும் பயனில்லை. இந்தத் திரோதான சத்தியே உயிர்களுக்குப் பக்குவம் வருவிப்பதற்காக ஆணவ மலத்தின் வழியாய்நின்று மோக முதலியவற்றைச் செய்விக்கிற சிவசங்கற்பத்திற்கு ஏதுவாம். இச் சத்தியில்லையாயின் ஆணவமலத்தைக் காரியப்படுத்த இயலாது. மலத்தின் காரியத்துக்கு இச் சத்தி ஏதுவாயிருப்பதுபற்றி இதனை **மலம்** என்றே உபசரித்துரைப்பர். மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்கும். எனவே திரோதான சத்தி தனக்குரிய மறைத்தல் தொழிலைச் செய்வதற்கு மாயை கன்மங்கள் கருவியாய் நிற்கும் என்க.

இருவினையும் அதன் காரியமும், ஆணவமலமும் அதன் காரியமும் வேறாக எண்ணப்படுவதில்லை. மாயையும் அதன் காரியமும் இரண்டு மலமாக வேறுவைத்து எண்ணப்படும். ஏனெனில் ஆணவமும் கன்மமும் தத்தங்காரியங்களின் வேறாய் நின்று தொழில் செய்வதில்லை. ஆனால் மாயையானது தன்

காரியமான உடலாதியை உண்டாக்கி அவற்றின் வேருய் நின்று மயக்கத்தைச் செய்யும். ஆதலால் இதனை இருமல மாகக் கணக்கிடுவர். இதுகாறும் **ஆணவம்—கன்மம்—மாயை—மாயேயம்—திரோதானம்** எனப்படும் பஞ்ச மலங்களைப்பற்றியும் ஒருவாறு தெரியவேண்டுவன கூறப் பட்டன. இப்பஞ்ச மலங்களையும் மும்மலங்களாகக் கூறுவதும் உண்டு. அவ்வாறு கூறும் போது மாயே-யத்தினை மாயையினும், திரோதான சத்தியை ஆணவ மலத்திலும் அடக்கி **ஆணவம், கன்மம், மாயை** என மூன்ருக வழங்குவர்.

மற்றும், ஆணவத்திற்கும் மாயை கன்மங்கட்கும் வேறுபாடு தெரிதலும் தக்கதே. இந்த மும்மலங்களும் அநாதியாகிய ஒற்றுமை உடையன எனினும் வேறு பாடுகளும்உள. ஆணவத்துக்கு **இடம்** உயிர். மாயை கன்மங்கள் இறைவனுக்கு உடைமைப் பொருளாதலால் அவற்றிற்கு இடம் இறைவன். எனவே இடத்தால் வேறுபாடிருத்தல் காணலாம். அன்றியும், ஆணவமலம் உயிரை வன்னியும் விறகும் போல அநாதியே கூடியுள்ளது. மாயை கன்மங்கள் ஆகந்துகம் எனப் படுதலால் உயிரை இடையே கூடின. ஆதலால், **காலத்** தாலும் வேறுபாடிருத்தல் தெரியலாம். மற்றும் ஆணவ மலம் உயிரின் இருப்பே தெரியாதபடி உயிரறிவை மறைத்து நிற்கும் தொழிலுடையது. ஆனல் மாயை கன்மங்கள் கருவிகரணங்களாகியும் நுகர்ச்சியாகியும் உயிர் அறிவை விளக்குதல் தொழிலுடையன. இதனல் **தொழிலால்** வேறுபாடிருத்தல் விளங்கும். இதுகாறும் கூறியவற்ருல் இருக்கும் இடத்தாலும், பற்றும் காலத் தாலும், விளக்கும் தொழிலாலும் இவை வேறுபா-டுடையன எனத் தேறலாம்.

## முடிபு

உயிருக்கு மலம் அநாதியே இருப்பினும் உயிருக்குக் குணம் மலம் ஆகாது. உயிரின் குணம் அறிவு ஆகும்.

உயிருக்குக் குற்றம் பற்றும் தன்மை. செம்பிற்குக் குணம் பிரகாசம். அதற்குக் குற்றம் களிம்பைப் பற்றும் தன்மை. ஆகவே அறிவுக்கு எதிரிடையான பாசத்தைப் பற்றிக் கிடத்தல் உயிரின் குற்றமாதல் காண்க. இக் குற்றம் இறைவற்கு இன்மையின் "இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் இறைவன்" எனப் படலானுர். இறைவன் எண்குணன். உயிர்கள் பாசப் பற்றுடைமையால் சுதந்தரமின்மையாதி குற்றங்களை உடையனவாம். இறையருளுக்குள்ளாகிப் பாசப்பற்று நீங்கப்பெறுதலே உயிருக்கு விடுதலை. இதுவே இன்பநிலை. முடித்துக் கூறுமிடத்து நமக்கு வேண்டுவது பற்றற்றுன் பற்ருகும். நமக்கு வேண்டாதது பாசப்பற்ரும். "பற்றுக பற்றற்றுன் பற்றினை; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" என்ற திருக்குறள் உயிர்க்குறுதி கூறுவதாகும். இதனுல், நாம் பற்றின்றி நல்வினை ஆற்றிப் பக்குவம் எய்தி, சிவம் எனப் படும் குரு திருவருள் பெற்றுத் தீக்கையாதிகளால் புனிதமடைந்து அவனருளியவழி நின்று சுகப்பேறு அடைதலே முத்திபெறு முறையெனத் தெரிந்து நடத்தலே சிறந்த வாழ்வாகும். இந்த வழியை நம் ஸ்ரீ அருணந்தி நாயனுர் வாழ்வு கண்கூடாகக் காட்டுகின்றது. நமக்கெல்லாம் பாசப்பிரக்ஞை முதற்கண் உண்டாகவேண்டியே இந்த இருபா இருபஃது நூலினை இவ்வாசிரியர் கேள்வி முறையால் யாத்தருளினர். மலமே நோய். உயிரே நோயாளி. மாயையே மருந்துள்ள இடம். வினையே மருந்து. குருவே மருத்துவன். நோய் மருத்துவனுக்குப்பகை. நோயகற்றி நோயாளியை நலப்படுத்துதல் மருத்துவன் பால் உள்ள பேரிரக்கமாம். இதுவே இறை திருவருள்.

**" இல்லக விளக்கது இருள் கெடுப்பது<br>சொல்லக விளக்கது சோதி உள்ளது<br>பல்லக விளக்கது பலருங் காண்பது<br>நல்லக விளக்கது *நமச்சி வாய*வே "**

உலகுயிர்கள்வாழ்க.

**தே. ஆ. ஸ்ரீ.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருத்துறையூர்

# ஸ்ரீ அருணந்திதேவ நாயனுர்

அருளிச்செய்த

# இருபா இருபஃது

நூலின்

## பொழிப்பும், விரிவுரையும்.

---

### செய்யுள்—1

வெண்பா

*பதிப்பொருள் வணக்கம்*

குருவே சிவம்

**குருவணக்கம்**

கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் — வெண்ணெய்
நல்லூர்
*மெய்கண்டான்* என்ருெருகால் மேவுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்துக் கண்.

## பொழிப்புரை

*ஸ்ரீகண்ட சரீரியாகிய* ***பரமசிவன்*** *நெற்றியிற் கொண்ட கண்ணையும் மிடற்றில் தரித்த விடத்தினையும் மறைத்தருளி, பூமியின்கண்ணே பரிபக்குவராது பாசத்தைத் தீக்ஷாக்கிரமத்தினுலே மோசனம் செய்கின்ற, திருவெண்ணெய்நல்லூரில்* ***மெய்கண்டதேவர்*** *என்னும் திருநாமத்தை உடைய குருமூர்த்தியாய் எழுந்தருளினுரென்று ஒருகாற் பொருந்த அவரைக் கருதினவர், உயிர்க்குயிராகிய சொரூபசிவனை அத்துவிதமாகத் தம்மிடத்தே புலப்படக் கண்டவராவர்.*

## விரிவுரை

இப்பாடல் குருவணக்கமே சிவ வணக்கமாகும் என்பதை நமக்கு அறிவுறுத்துகின்றது. சிவமே குரு வடிவாக எழுந்தருளிப் பக்குவான்மாக்களை ஆட்கொள்ளுகின்றுர் என்பதே சித்தாந்த சைவ உண்மை. இவ்வுண்மையை இப்பாடல் நன்கு புலப்படுத்துவதாகும். ஸ்ரீ மெய்கண்டதேவர் தம்பால் வந்த ஸ்ரீ அருணந்திதேவ நாயனுரை ஆணவமகற்றி ஆட்கொண்டருளினர். ஆணவம் நீங்குவதற்கு முன்னிருந்த நிலையில் சதாசிவசிவாசாரியர் விழிகட்கு நம் மெய்கண்டதேவர் சாமானிய மானிட வடிவராகக் காணப்பட்டார். ஞானுசாரியருடைய திருநோக்கக் கதிரால் தமது ஆணவ இருள் அகலப்பெற்றபின், படலம் நீங்கப் பெற்ற கண்ணுடையானுக்குக் கதிரோன் காட்சிப் படுவதுபோன்று, ஸ்ரீ மெய்கண்டதேவர் சிவபிரா-னுகவே ஸ்ரீ அருணந்தியாருக்குக் காட்சிப்படலானுர். இந்தத் தம்முடைய அநுபவத்தையே மண்-ணிடை மாக்கட்கு அறிவுறுத்தக்கருதி இப்பாடலை

அருளிச்செய்தனர் ஆசிரியர் என்னலாம். வெளிச்சம் நிரம்ப உள்ள ஓரிடத்திலே ஒரு குருடன் இருப்பதாகக் கருதுவோம். இதனால், குருடன் வெளிச்சத்திலேயே தங்கியிருக்கிறான் என்பதில் ஐயம் ஏதும் இல்லை. ஆனால், இந்த ஐயமற்ற நிலை விழி-யுடையாருக்கே விளங்குகிறது. எனினும், குருட-னுடைய குருட்டுவிழிக்கு இவ்வையப்பாடு அகல வில்லை. இப்படித்தான் நாம் யாவருமே (ஆத்திகரா யினும் சரி, நாத்திகராயினும்சரி, எச்சமயத்தவராயினும் சரி) சிவத்தினுடைய வரம்பற்ற வியாபகத்திலேதான் எப்போதும் தங்கியிருக்கிறோம் என்றாலும், ஞானி களல்லாத பிறர் யாவரும் இங்ஙனம் தங்கியிருக்கும் தமது சிறந்த நிலையைச் சற்றும் உணர்ந்திலர். இது தான், படலத்தால் மறைப்புண்ட விழியுடைய குருடர் நிலையை நிகர்ப்பது. குருடனுடைய விழிப்படலம் உரித்தற்குரிய பக்குவமடைந்தபிறகு உரித்தெடுக்கப் படுகிறது. அப்பால் படலமகன்ற விழிபெற்ற குருடன் குருட்டியல்பு நீங்கப்பெற்றுத் தன்னிருப்பின் (வெளிச் சத்திடையே இருப்பதாகிய) உண்மை இயல்பை ஐயமறத் தானே விழி வழியால் அறியலுறுகிறான். இங்ஙனமே, நாம் இருவினை ஒப்பு, மலபரிபாகம், அருள் வீழ்ச்சிநிலை எனப்படும் அவதரம் (பக்குவகாலம்) எய்தியபின்னர் ஞானசாரிய கோலத்தரால் தீக்ஷிக்கப் பட்டு உண்மை அறிவிக்கப்படுகிறோம். இவ்வுண்மை யறிவு நமது பக்குவப்பேற்றினால், சிவத்துதவிகொண்டு நமக்கு விளங்குகிறது. இப்படிப்பட்ட நிலைமை நாம் அடைந்தபிறகுதான் சகலத்தையும் சிவமாகக் காணும் தன்மை பெறுவோம். இந்த உயர்ந்த நிலைமைக்கு நாம் ஏறப் பாடுபடவேண்டும். இதன்

பொருட்டுத்தான் இந்த மானிடப் பிறப்பு நமக்கு வாய்த்துள்ளது. மனிதப் பிறவியின் குறிக்கோள் இதுவேயாம்.

ஒரு மேஜையின் மேல் பல்வகைச் சித்திரங்களை உடைய விரிப்பு விரிக்கப்பட்டுள்ளது. அவ்விரிப் பின்மேல் ஒரு புத்தகம் வைக்கப் பட்டுள்ளது. புத்தகம் எங்குள்ளது என்று கேட்பானுக்குப் புத்தகம் மேஜைமேல் உள்ளது என்றுதான் கூறுவோம்; விரிப்பின்மீதுள்ளதென்று கூறமாட்டோம்; அல்லது சித்திரத்தின் மேலுள்ளதென்றும் செப்பமாட்டோம். வெளிப்பார்வைக்குப் புத்தகம் விரிப்பின் சித்திரத்தின் மேலேதான் இருக்கின்றதெனத் தெரிகின்றது. என்-ருலும், புத்தகத்தைச் சித்திரமோ, விரிப்போ ஆதார-மாயிருந்து தாங்கவில்லை. அதனுல்தான் ஆதாரமான மேஜையை நாம் கூறுகின்ருேம். மேஜையின் வியாபகமே புத்தகத்துக்கு ஆதாரமாயுள்ள தென்ற உண்மை நமக்கு இயற்கையிலேயே புத்திக்குப் படுகிறது. இவ்வாறே நாம் உலகில் உடம்புள் இருப்-பினும், சிவ வியாபகத்துள்ளே தான் இருக்கின்ருேம் என்பதை உணர வேண்டும். மேஜை சுட்டுப்பொரு-ளாதலால் கண்ணுக்குத் தெரிகிறது. சிவம் சித்துப் பொருளாதலால் கண்ணுல் அறிய முடிவதில்லை. அறிவு கண்ணுக்குப் புலப்படும் உருவுடைத்தன்று. மேஜைக்கும் புத்தகத்துமுள்ளது போன்ற 'வேறின்-மைத் தன்மை' நமக்கும் சிவத்துக்கும் நீங்காமல் எப்போதும் உள்ளதென்ற உணர்வு நமக்கு வாய்க்க வேண்டும். இந்த உணர்ச்சியே ***சித்தாந்த சைவத்தின் அடிப்படை.*** முந்த இந்த உணர்வை நாம் அடைவோ மாக! "கண்டன எலாம் மோன உருவெளியதாகவும்

கருதி அஞ்சலி செய்குவோம் " என்ற தாயுமானுர் பாடல் இப் பழக்கமேற்கொள்ள நம்மைத் தூண்டு கின்றது. இங்ஙனம் சிவ பரம்பொருள் யாவற்றுக்கும் யாவர் நலத்துக்கும் ***அடி***ப்படையாயிருத்தலே நமக்கு நினைப்பூட்டவும், அப்பரம்பொருளே நம்மைத் ***தாங்***கும் ஆதாரமாயிருத்தலே அறிவுறுத்தவும் கருதியே தமது தெய்வத் தமிழ்மறை எனப்படும் திருக்குறளிலே வள்ளுவர் பெருமான், முதலதிகாரத்திலே முதற் குறளிலே பகவன் என வாளா கூறியவர், பின்னர் உள்ள குறட்பாக்களிலே மூன்று முறை ***அடி*** எனவும், நான்கு முறை ***தாள்*** எனவும் கூறிப் போந்துளர். ***அடி*** என்னுஞ் சொல் மூலமாயிருக்கும் இயல்பையும், ***தாள்*** என்னும் சொல் தாங்கும் தன்மையையும் உணர்த்தும் குறிப்புடையன என்னலாம். இவ்வுண்மையையே சிவஞானபோத நூலும், குருவாய் உணர்த்துமுறை கூறவந்த எட்டாம் சூத்திரத்திலே அரன் ***கழல்*** எனவும், சிவப் பேறு செப்பவந்த பதினோராம் சூத்திரத்திலே மீளவும் அரன் ***கழல்*** எனவும், சீவன் முத்த வாழ்வு நிலே இசைக்க எழுந்த பன்னிரண்டாஞ் சூத்திரத்திலே நோன்***தாள்*** எனவும் குறித்து உபதேசித்தலால் அறியலாம். " மல***ரடி***க் கீழ் வைப்பன் " என்பது சித்தியார் செப்பு முறை.

உயிர்கள் பக்குவ வகையால் மூவகையாக உரைக்கப்படும். அவை விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பன. இம் மூவகை உயிர்களேயும் சிவமே குருவாகி உணர்த்தித் தத்துவ ஞானத்தை உதிப்பித்து ஈடேற்றுவர். எவ்வகையினுலும் குருவின்றி ஞானம் நிகழாது. ஞானமின்றேல் முத்திப் பேறும் இல்லையாம்.

இந்த ஞானம் பிறப்பறுக்கும் ஞானமாம். "பிறப் பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது *அறிவு*" என்பது வள்ளுவர் தெள்ளுரை. சாமானிய ஆசிரியர் விளக்கும் அறிவு நூலுணர்வு எனப்படும். இத்தகைய ஆசிரியரிடம் இறைவன் பொதுவான அதிட்டான நிலையில் நின்-றுணர்த்துவன். தூண்டித் தொழிற்படுத்துதல் அதிட்டித்தல் எனப்படும். இவர்கள்பால் இறைவன் பாலில் நெய்போல் மறைந்திருப்பன். ஆதலால் அறியப்படமாட்டான். ஆனால் ஞானசாரியரிடம் இறைவன் தயிரில் நெய்போல் வெளிப்படத் தோன்றுவன். தயிரில், தயிரும் மோரும் உள்ளடங்கிக் கிடக்க நெய் மேலோங்கிப் பிரிப்பின்றிப் பரந்து காணப்படும். ஞான குரவர்கள் ஒழிவின்றி இறைவனை அவனருளால் உணர்வில் உணரும் ஒண்மை யுடையவர்கள். ஆதலால் இவர்களிடம் இறைவிளக்கம் காணப்படும். இந்த நிலைமையை ஆவேச பக்கம் அல்லது ***சிறப்பு அதிட்டானம்*** என்பர். இவர்களிடம் விளங்கும் முதல்வனை மாசிலாமணி என்பர். இவர்கள் திருமேனியும் அருட்டிருமேனியேயாம். கருவி கரணங்கள் சிவவயப்பட்ட இயல்பினவாம். இதனால் ஞானசாரியனும் மாசிலாமணியே ஆம். இக் குறிப்பு நமக்கு நன்கு தெரிதற்பொருட்டுப் போலும், நம் *திருவாவடுதுறைத் தலத்துப் பெருமான் திருப் பெயர் மாசிலாமணி ஈசுவரர்* என்றமைந்திருப்பது. ஆகையால் ஈண்டுள்ள திருமடத்து ஞானசாரியர் ***மாசிலாமணி***யேயாவர் என்க. இவ்வாசாரியர் திரு வுருவும் சிவத் திருவுருவேயாகும். இது நிற்க,

முற் கூறப்பட்ட உயிர்களில் ***ஆணவம்*** என்னும் ஒரு மலம் உடையவரை *விஞ்ஞானகலர்* என்பர். இவர்களை இறைவன் ஆட்கொள்ளுங்கால் அறிவுக்கறிவாய் உள்நின்றே மெய்யுணர்த்தி வீடுபேறு அளிப்பன். ஆதலால், இவர்கள் தரிசிப்பது சிவத்தின் அறிவுத் திருவுருவாகிய ***அருவுரு***வாம். இதனைத் ***தன்மையிட***மாக நின்றருள் புரிதல் என்பர். இதுபற்றியே திருக்குறள் நூலில் இறைவனை ***'வாலறிவன்'*** என்றார் ஆசிரியர். "உள்ளத்தின் உள்ளிருந்தங் குறுதி காட்டி" என்பது நாலாந் திருமுறை.

ஆணவம், கன்மம் என்னும் இருமலமுடையவர் *பிரளயாகலர்* ஆவர். இவர்கட்கு இறைவன் ***முன்னிலை***யில் நின்று உணர்த்துவன். இவர்கட்கு உணர்த்துகையில் இறைவன் தனது இயற்கை வடிவே குருவடிவாகக் காட்டியருளுவன். அதாவது, நான்கு தோளும், மூன்று கண்ணும், காளகண்டமும் முதலிய உறுப்புகளுடன் முத்தொழில் நடாத்தும் உருவாகும். சரியையாதி நான்கு நெறிகளை நாற்றோள் குறிக்கும். இச்சையாதி முப்பண்புகளைத் திரிநேத்திரம் குறிக்கும். காளகண்டம் பிழைபொறுத்தடக்கும் அருட்குறிப்புடையதாகும். பாசம் இறைவனை ஏதும் செய்யாதடங்கும் என்பதைக் கறைமிடறு காட்டவல்லதாம். "கறைமிடறணியலும் அணிந்தன்று; அக்கறை மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே" என்பது புறநானூறு. "விடமும் வந்தீசன் கோலமிடற்றினில் நீலவண்ண வடிவுபெற்று அணியதாகி வயங்கிற்றுப் பெரிதும் என்றால்—***கொடியரும் பெருமையோரைக் கூடின் வெங்கோது நீங்கி, ஒடிவறு நலம்பெற்றுய்தல்*** உரைப்பதென் உலகின் அம்மா" என்பது பாகவதம்.

" மையணி கண்டத்தானே மான்மறி மழுவொன் றேந்தும் சைவனே " என்பது நான்காம் திருமுறை. எனவே, பிரளயாகலர் நிலையில் சிவத்தின் இயற்கை உருவெளிப்பாட்டினைக் காண்டல் கூடும் என்பது இதனுல் தெரிவதாம். நீரானது ஆவி நிலையில் இருக்கையில் கட்புலனுவதில்லை. அதுபோல்வது விஞ்ஞானகலர் சிவத்தைக் குருவாகக் காணுதல் ஆகும். நீராவி மேகமாகி மழையாப் பொழியும்போது தூய நீர்வடிவாக (நீரின் இயற்கை வடிவில்) கண்ணுல் காணப்படுகிறது. இதுபோல்வது பிரளயாகலரின் சிவகுருக் காட்சி. சிவத்தை உருவாகக் காண வேண்டின் நாம் பிரளயாகலர் நிலை எய்துதல் வேண்டும். சகலர் நிலையிலிருந்துகொண்டு காண்டல் அரிது. இந்த உண்மையினையே ***" கண்ணுதலும் கண்டக்கறையும் கரந்தருளி "*** என்ற இப் பாடலின் முதல்வரி தெரியச் செய்கின்றது. சகலர் நிலையிலுள்ள நாம், தூய்மைப் பேற்றினுல் பிரளயாகலர் நிலையினையும் இப் பிறப்பிலே எய்தலாம். அங்ஙனம் எய்துகையில் இக் காட்சியினை நாமும் கண்டு களித்தல் கூடும். இத்தகைய காட்சி நிலையினை நம் திருவள்ளுவர், " மலர்மிசை *ஏகினுன்* " என்ற மொழியால் புலப் படுத்தியுள்ளார். இருந்தாங்கிருக்கும் புடைபெயர்ச்சி யற்ற முழு முதல்வனுக்கு, ***" ஏகினுன் "*** என்ற சொல் தந்து, ***புடைபெயர்ச்சி*** ஏற்படுதலை இக் குறளில் ஆசிரியர் குறித்துள்ளமை காணலாகும். அன்பால் இடையறுது நினையும் பெற்றியராகிய பிரளயாகலர்க்கு முழுமுதல்வன் வடிவோடு விரைந்துசென்று காட்சி தருதலை இக் குறளுரை குறிப்பாகப் புலப்படுத்தல் ஊகிக்கத் தக்கதாகும் என்க! விஞ்ஞானகலர்க்குக்

கொள்ளும் முதல்வனுடைய ***அறிவுத்திருமேனி***யும், பிரளயாகலர்க்குக் கொள்ளும் ***உருவத்திருமேனி***யும் சுதந்திர வடிவாவனவாதலால் இவை ***நிராதாரம்*** எனப்படும். இதுவரையில் விஞ்ஞானத்தால் கலை யற்றவர், பிரளயத்தால் கலையற்றவர் இவர்கட்கு இறைவன் மலமகற்றும் பொருட்டுக் காட்சியளிக்கும் விதம் கூறப்பட்டது. இனிச் ***சகலர்*** எனப்படும் நம்மனோர்க்கு எங்ஙனம் இறைவன் காட்சிப்படும் என்பதை இப் பாடல் கூறத் தொடங்குகின்றது.

***சகலர்*** எனப்படும் நாம் மும்மாயாகாரியங்களிலும் முயங்கிக் கிடப்பவராவோம். நாம் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் உடையோம். இவற்றை நீக்குதற்கு இறைவெளிப்பாடு நிகழும். இந்த நிகழ்ச்சி, நமது. சரியை, கிரியை, யோகம் எனப் படும் மெய்த்தவத்தின் பின்னர் ஏற்படும் முதிர்வு காரணமாக மலபரிபாகம், சத்திநிபாதம், தத்துவஞான அவாவின் பின்னர் விளையும், விறகில் தீயானது வலிந்து இழுத்துக் கடைய முன்னிற்பதுபோல ஆண்டவன் அருளால் ஆசிரியத் திருக்கோலங் கொண்டு மெய்ஞ்ஞானமூட்டும். அன்பு எழுந்து முருகியதும், முலைப்பாலும், கண்ணீரும் தமது அடங்கி யிருந்த அருவத்தன்மையினின்று வெளிப்படுவது போலவே ஆசாரிய வெளிப்பாடு சகலர்க்கு நிகழ்வ தாகும். மானிடப் போர்வையின் மறைந்து நின்று சிவம் நமக்கு அருள்புரிதலைப் பின்னிலையாகிய ***படர்க்கையில்*** நின்று அருள்புரிதல் என்பர். மான் காட்டி மான் பிடிப்பது போல்வது இவ்வருட் செயல். கண்ணினிடம் ஒளி இருப்பினும், பேரொளிப் பிழம் பாகிய சூரியனைக் கண்ணானது காண இயலாது

கூசுதலடையும் ; பார்வையை இழக்கும். இது-போலவே, இறைவன் பிரளயாகலர்க்குக் காட்சி கொடுக்கும் தெய்வவுருவே காட்டி நமக்குங் காட்சி கொடுப்பின் நமது அமைப்பு அத்தேசுடைய காட்சியை ஏலாது பயனிழக்கும். இதுபொருட்டே, மனிதக் கோலத்தை இறைவன் மேற்கொள்ளுகின்ருனவன். இதுபற்றியே, முருகன் வெளிப்பாடு கூற வந்த இடத்தே திருமுருகாற்றுப்படை நூலிலே, "தெய்வம் சான்ற திறல்விளங்குருவின் வான்தோய் நிவப்பின் தான் வந்து எய்தி அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன் மணங்கமழ் ***தெய்வத்து இளநலம் காட்டி*** அஞ்சல்......என " என்று கூறப்பட்டிருத்தல் காணலாம். சிவ சைதன்யமும் ஆன்ம சைதன்னியமும் விரவிப் புலப்படாதிருந்த தன்மை, நீரும் வெளியும் (நிழலும்) விரவி நிற்பதுபோலாம். இச் சிவசைதன்யமே ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளுகின்றதென்க. இத் திருவுருவிலே சிவத்திற்குரிய கண்ணுதல் இல்லை ; கறைக்கண்டமும் இல்லை. இல்லாதிருப்பினும் இம் மானிடத் திருவுரு சிவத்தினுருவேயாமென நாம் தெளிதல் வேண்டும். இங்ஙனம் தெளிந்தொழுகுதலே ஞானமுடைமைக்கு அறிகுறியாம். மறைந்து அரன் குருவாய் வந்த தன்மையை அறிந்த நிலைமைபற்றிப் பிரபுலிங்க லீலை நூலில், "குறில் வழி ***லகரம் தனிநிலை ஆயும்*** கூடிய தகரம் முன் எழுத்தென்று அறிகுறி ***வடிவம் திரிதல்***போல் நந்தி அடல் விடை மெய்திரிந்துறினும் நறுமலர் விழியிற் கண்டவரெல்லாம் நந்தியே என்றுளம் மகிழ்ந்தார் " எனக் கூறப்படுதலும் ஈண்டைக்கு ஒப்புநோக்கிக் கொள்ளலாகும். இருளைக்கெடச் செய்தற்கும், பொருளைப்

பிண்டமாய்க் காணும் நிருவிகற்பக் காட்சிக்கும், பெயர், குலம் முதலிய வகையால் பகுத்துக் காணும் சவிகற்பக் காட்சிக்கும் சூரியன் கண்ணுக்கு வேண்டியிருத்தல்போலவே, சகலராகிய நமக்கு மலநீக்கம், ஆராய்ச்சி அநுபவ அறிவுகட்கு ஞானசாரியன் காட்சி இன்றியமையாததாகும். இதுவரை சொல்லிவந்த செய்திகளால், மானிடராகிய நமக்கு மான் இடராகிய சிவ பரம்பொருள் ஆசிரியராக எழுந்தருளி ஆட்கொள்கின்றார் என்பதையும், வேறு எவரும் இங்ஙனம் செய்ய இயலாதெனவும் கொள்ளவேண்டும். ஆதலால், குருவே சிவம்; சிவமே குரு என்ற திண்ணம் நமக்குத் தேவை ஆகும். இப்பாடலில் ஸ்ரீ மெய்கண்ட தேவரை அங்ஙனம் கருதி ஆட்படுமாறு இந் நூலாசிரியர் நம்மை ஆற்றுப்படுத்துகின்றாராவர். இனிச் செய்யுளில் உள்ள சிற்சில விசேடங்களையும் கருதுவோம்.

*கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி*- ஸ்ரீ மெய்கண்ட தேவர் சிவபெருமானேயாவர். ஸ்ரீகண்ட சரீரியாகிய பரமசிவனே பரத்துவம் உடையவர். அவரே அந்தமும் ஆதியுமாவர். சிவத்திற் சிறந்த தெய்வம் வேறில்லை. அவரால் ஆக்கவும் காக்கவும் அழிக்கவும் இயலும். அவருக்குத் தோற்றக் கேடுகள் இல்லை. "முக்கண் படைத்தவனாலும் இது முடியாது" என்பது ஒரு பழமொழி. இப் பழமொழி சிவத்தின் ஏற்றம் உணர்த்தும். இந்த நெற்றிக்கண் பண்டு மன்மதனைச் சுட்டது அதாவது காமனை வென்றது என்பதாம். புலவர் பெருமானாகிய நக்கீரரையும் முனிந்தது. அதாவது செருக்கினைச் செற்றது என்பதாம். இவ்வரலாறுகளால் காமத்தையும் கருவத்தையும் கடியும் இயல்பினது நுதற்கண் என

நாம் அறியலாம். நம் பிறப்பு ஒழிவதற்குக் காமநோய் கழலவேண்டும்; ஆணவம் அழியவேண்டும். இவ் வுதவிக்குரிய ஆற்றல் பரமனிடம் இருத்தலைக் ***கண்ணுதல்*** காட்டும். மற்றும் இவ்விழி, ஏனை இரு விழிகள் போன்று படுக்கை வாட்டத்தில் இல்லை. நின்ற வாட்டத்தில் நெற்றியிடை இருப்பது. இவ் விருக்கை, புருவ மத்தியத் தானம், ஞானநாட்டம் இவற்றின் முக்கியத்தையும் நமக்கு நினைப்பூட்டுவ தாகும். நாற்றேனைக் கூருமல் கண்ணுதலை ஆசிரியர் குறித்திருப்பதால், நாற்றேன் வேறு சில தெய்வங்கட்கு மிருத்தலையும் இவற்ருல் தனிச்சிறப்பில்லாமையையும் உணரலாம். மற்றும் நமக்கு வேண்டுவது பாசநீக்கம். அதற்கு வழிகாட்டுவது கண் (ஞானம்). ஆதலாலும் கண் என இந்நூல் தொடங்கி நமக்கு வழி காட்டு-கின்றது என்னலாம். மேலும் கண்ணிற் சிறந்த உறுப்பின்மை யாவரும் அறிவர். நுதலும் உத்தம அங்கமாகும். இவ்விரு சிறப்புடைச் சொற்களும் சேர்ந்து இந்நூற்கு மங்கல மொழியாக அமைந்தன எனவும் கூடும். ஸ்ரீ மெய்கண்டதேவர் உலக மக்கட் கெல்லாம் ***வழி***காட்டவல்ல பரமாசாரியன். ***ஞானமே*** திருமேனியர். ***காமங் கடிந்த*** இயல்பினர். ***ஆணவத்தை அகற்றும்*** திரு நோக்கினர். இவ்விறன்மைகளால் இவர் சிவமேயாவர் என நமக்குணர்த்துமாறு ***கண்ணுதலும்*** என்ருர் ஆசிரியர்.

பாற்கடலில் முதலில் எழுந்தது காளகூடவிடம். தேவர்கள் அஞ்சினர். கெஞ்சினர் சிவபிரானை. மன்ருடியாகிய பரமன் அவர்கள் மன்ருட்டினைக்-கண்டு இரங்கினன். யாவரும் உட்கொள்ளமாட்-டாத நஞ்சினை உட்கொண்டான். "பெயக்கண்டும்

நஞ்சுண்டமைவர் " என்னும் நயத்தக்க நாகரிகத்தின் சான்றாகும் சான்றோனாக விளங்கினான். இது செயற்கரும் செயல். இரக்கத்தால் எழுந்த செயல். தன்னுயிரை மதியாதசெயல். பிறர்க்குரியாளராம் செயல். இத்தகைய செயலை அவ்விடத்திருந்த எத்தேவரும் செய்திலர். இதனால் சிவபிரான் யாவரினும் பெரியோன் என அறியலாம். உண்டவிடம் பெருமானை ஏதும் செய்திலது. தனது கொல்லுமியல்பும் நீங்கி அஞ்சி அடங்கியது. இருட்கூட்டம் சூரியனை எதிர்த்து என்செய்ய இயலும் ? இதனால் கண்ணுதலோன் எல்லாம் வல்ல பரமன் எனத் தெரியலாம். மேலும், இக் கரியவிடத்தைச் சிவபிரான் வாயினிடமும் வைத்திருக்கவில்லை. விழுங்கி வயிற்றுட் செலுத்திச் சீரணிக்கச் செய்திடவுமில்லை. கண்டத்தே நிறுத்திக் கொண்டனன். எந்தப்பண்டத்தையும் நாம் கண்டத்தில் நிறுத்திக்கொள்ள இயலாது. நிறுத்தமுயன்றால் முடிவடைவோம். ஆதலால் பரமன் அழிவற்றவன்; பேராற்றலுடையவன் என்பதை நாமறியலாம். இதனால், முழுமுதல்வனுடைய பெருங்கருணையை இவ் விடம் இன்றும் நமக்குக் கரியாக நின்று காட்டுகின்ற தென்னல்மிகையாகாது. சிவமும் பெருங்கருணைப் பரம்பொருள். ஆசாரியனும் பெருங்கருணைத் திறமுடையவன். ஆகையால் ஆசாரியனியல்புக்கு எடுத் துக்காட்டாகக் ***கண்டக் கறையும்*** கூறப்பட்ட தென்னலாம், ஸ்ரீ மெய்கண்டதேவர் கருணைத்திறத் தினைப் புலப்படுப்பது இச்சொற்றொடர் எனக்கோடல் அமையும்.

கண்டக்கறை, கண்ணுதல் இவற்றோடே நமக்குக் காட்சியளிப்பின் நாம் அவனடி அடைதற்கு மாறாக

அஞ்சி அகன்றேடுவோம். ஆதலால், அவ்வுறுப்புச் சிறப்புகளை நாம் காணவொண்ணு வண்ணம் மறைத்து வெளிப்பட வேண்டுவதாஞன் பரமன். இங்ஙனம் இவ்வுறுப்புக்களை மறைத்ததே ஒரு அருட் செயலாம். ஆதலின் *கரந்தருளி* என்றூர். சிங்கமொன்று நமக்கு உதவி செய்யும் நோக்கோடு நம்மை அணுகினுலும் நாம் அஞ்சி ஓடுவது ஒருதலை, ஆஞல் நோக்கத்திற் குறைபாடின்றி ஒரு மானுருவோடு வருமாயின் அதன் பால் நாம் அஞ்சாமல் அணுகுவோம். மதிப்புயர்ந்த பொன்ஞல் சிங்க உருவும் சமைக்கப்படலாம். அதே பொன் உருக்கி மானுருவாகவும் அமைக்கப்படலாம். உருமாற்றம் அன்றிப் பொன்னுகிய பொருளிலும் மாற்றிலும் மாற்றமில்லை. இவ்வாறே சிவம், திரிநேத்திர காளகண்டனுகவும் வெளிப்படுவன். நமக்காகச் சுத்த சைதன்னிய மானிடத் திருமேனியனுகவும் வெளிப்படுவன். இதிலும் உருவமாறுபாடேயன்றிப் பொருளில் மாறுபாடில்லை. காமத்தைத் தெறுதலாதி இயல்பிலும் மாறுபாடில்லை. இது பற்றியே, "மறி-மறைத்தாலும். மழுமறைத்தாலும், ***மணிமிடற்றின் குறிமறைத்தாலும்,*** மதிமறைத்தாலும், மென்கொன்-றைமலர் வெறிமறைத்தாலும், அறிவேன் உன்னை; ***மதன்மேல் பகைமை நெறிமறைத்தாயிலேயே*** சிவ ஞான நெடுந்தகையே" என்றூர் ஒரு தவப்பெரியார். இங்குள்ள கருத்து ஈண்டுள்ள கருத்தினையே புலப் படுத்தி நிற்றல் காணலாம். இதஞல், ஞானுசாரியராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் திருமேனியகத்தே கண்ணுதலும் கறைக்கண்டமும் நாம் காணுவிடினும் சிவத்தினியல் பெல்லாம் விளங்கக்காண்டலால் அப்பரமாசாரியனை நாம் சிவமெனவே கருதி வழிபட்டுய்யவேண்டுமென்

பது தேற்றமாம். பொன்வைக்கப்பட்டுள்ள இரும்புப் பெட்டியை நாம்பொற்பெட்டி என்றே அழைத்தல் இயல்பாம். "உருவுகண்டு எள்ளாமை வேண்டும்" என்பது உறுதியுரையன்றே !

## மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்...மெய்கண்டான்

கைகால் முடங்கிய நோயாளி ஒருவன் தெருவிலே கிடந்து தவிக்கின்றான். அவ்வழியே போவாரும் வருவாரும் பார்த்துப் போகின்றனரேயன்றி அவனுக்கு ஏதும் செய்ய முடிந்திலர் இவ்வாறு போக்குவரவு புரிவோரால் நோயாளனுக்கு ஏது பயன்? இந்த நோயாளி விழுந்துகிடக்கும் இடத்துக்கருகே உள்ளது ஒரு மாளிகை. அது லேவாதேவி செய்யும் ஒரு பெருத்த செல்வந்தனிருப்பிடம். இவ்விருக்கை யாலோ, செல்வத்தாலோ, செல்வந்தனாலோ நோயாளிக்கு என்ன பயன் உண்டு? ஆனால் அவ் வூராருக்கு மருத்துவம் புரியும் மருத்துவக் கோட்டம் சற்றுத் தூரத்தில் உள்ளது. அதனில் உள்ள மருத்துவர், 'நோய் நாடி, நோயின் முதல்நாடி, அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செய்யும்' பேரிரக்க முடையவர். இப்படி ஒரு நோயாளி கேட்பாரற்றுக் கேளிரற்று அல்லலுழப்பதை அறிந்தார். அறிந்த மாத்திரத்தே அவசர அவசரமாக, மருத்துவர்க்குரிய ஆடம்பர அடையாள உடுப்புகளைக் கூட அணியாமல், வேண்டும் மருந்து கருவிகளோடு அந் நோயாளி கிடக்குமிடம் வந்தார். இவரால்தானே நோயாளி சுகமடைய முடியும். மற்றையோரால் அவனுக்கு நன்மை ஏது? தக்க கருவியால் பரிசித்து, தக்க மருந்தை வார்த்து, தக்க முறைகள் சொல்லிச்

செய்து, மருத்துவ நிலையத்தே கொண்டு கிடத்தி முடக்கும் இடக்கும் நீங்கச்செய்து குணப்படுத்தினர் மருத்துவர்.! இதனால் அம் மருத்துவர் செயல் அந் நோயாளனுக்கு எத்தகைய பெருஞ் செயலாகப் புலப்படும் ! அந்த மருத்துவன், அந்த நோயாளியை நோயகற்றிய பின் தனது மருத்துவ நிலையத்திலே பணியலமர்த்தி யாதரித்தும் வருவனாயின் பின்னர் அவற்கு ஏது குறை ? இதுபற்றியே " தாயே தந்தை என்றும் தாரமே கிளைமக்கள் என்றும் ***நோயே பட்டொழிந்தேன்;*** நுன்னைக் காண்பதோர் ஆசையினால் .........வந்தடைந்தேன் " என்றுள்ளார் பெரியோர். காரணம் இறைவன் நோய்க்குப் பகைவன் என்பதே. இது குறித்தே நம் திருவாவடுதுறைத் திருமடம் சிவத்தைப் பவத்தை நீக்கும் ***வயித்தியநாத***னைக் கொண்டும் வழிபாடாற்றி வருகின்றதென்னலாம் !

நாம், இந்தப் பிரகிருதி மாயாவுலகில் ஓரிடத்தே பிறப்பிறப்பு நோயுற்று அல்லற்பட்டுக்கொண்டு கிடக்கிறோம். நம் பக்கலிலேயே பெற்றோர் உற்றோர் முதலான பலர் உளர். அவர்களும் இதே நோயாளர்கள் தாம். குருடனுக்குக் குருடன் எப்படி வழிகாட்ட முடியும் ? இவர்கள் நம் அண்மையிலிருப்பினும் சேய்மையிலிருப்பினும் யாது பயன் ? முப்பது வயதில் செத்துக்கொண்டிருக்கும் ஒருவனருகில் தொண்ணூறு வயதுடைய பெரியவரொருவர் வாழ்ந்துகொண்டிருப்பதால் என்ன அநுகூலம் ? ஆனால் சஞ்சீவி மூலிகை உடைய இளைஞன் ஒருவனால் நன்மை அடையலாம். அப்போதும் அச் சஞ்சீவி மூலிகைக்கார இளைஞன் அயல் நாடொன்றில் பிரபலமாக இருப்பவனானால் இறப்பவனுக்கேது நலன் ? சாவா மருந்தும் அழியா

உடம்பும் பேராதரவும் உடைய அவ்வென்றும் இளையோன் செத்துக்கொண்டிருப்பவன் பக்கலில் வந்தாலே போதும்! சாவு நீங்கும். ஆதலால், நமக்குள்ள இத்தீரா நோயைப் பக்கத்தே உள்ள யாவரும், தூரத்தே உள்ள அதிகாரதேவரும் நீக்க இயலாது. நமக்கு உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கு மவனே நீக்கஇயலும். அவனும் தத்துவ உலகுகட்கு அப்பாலிருப்பானாயின் என்செய்வது? அப்படி இல்லாமல் அல்கு கழியினும் கடல் செல்குவதுபோல நாமுள்ள இந்த மண்ணுலகத்தே வந்தருளினால் நல்லதாம். எந்த எந்த உலகையும் தனக்குச் சொந்தமாக உடைய அவன் இந்த மண்ணுலகின் வருவதற்கும் உரிமை உடையவன். அவனைத் தகைவார் யாருமிலர். இத்தகையவன் சிவன். இவன் நம் உள்ளுறு நோயினை யறிந்து நீக்கும் பக்குவ வேளை தெரிந்து நாமிருக்கும் இம் மண்ணகத்தே வந்தருளுகின்றான். இதனையே "***நிலந்தன்மேல் வந்து*** நீள்கழல்கள் காட்டி" எனவும், "***மண்ணகத்தே வந்து*** வாழச் செய்தானே" எனவும் மணிவாசகர் அருளிச்செய்துள்ளார். அவனிருக்குமிடம்தேடி நாம் செல்லவேண்டாமல், நாமிருக்குமிடம் கண்டு அவனே வருதல் "சென்று பொருள்கொடுக்கும் தீதற்றோர்" செயற்குதாரணமாகுமன்றோ! இதனைத் தெரிவிப்பதற்கே ***மண்ணிடையின்*** என்றார் ஆசிரியர். அழுக்கடைந்த உடம்புடைய குழந்தையைத் தூய்மை செய்யக் கருதுவோர் கழுவுதற்குரிய தண்ணீருள்ள இடத்தே அமைத்தே ஆட்டுவர். நீரில்லா இடத்தே கொண்டு நிறுத்தி என் பயன்? அதுபோலவே நம் மலத்தினை அகற்றுவதற்குக் கருவியாகப் பயன்படுவது இந்த மண் உலகு. மண்ணுதல் என்ற சொல் கழுவுதல்

என்னும் பொருளுடையது. இதனால்தான் ***மண்ணிடையே*** வந்தருளுகின்றான் நமக்குத் தூய்மை புரிய விரும்பும் முதல்வன் என்க. மண்ணிலே வந்த பிறவியை வாலிதாமென நாயன்மார் வியந்து பாராட்டியிருத்தல், நம்மை வெம்மை களைந்து புனிதப்படுத்தும் நிலையமாக இம் மண்ணுலகம் இருப்பது பற்றியே யாம் என்னலாம்.

"மாக்கள் தாமே ஐயறிவினவே" என்பது தமிழிலக்கணம். மக்கள் என்றழைக்கப்படத் தக்கவர் பகுத்தறிவோடு ஆறறிவுடையராவர். பகுத்தறிவாவது நித்த அநித்த வஸ்து விவேகமாம். பிறப்பு முத்திகளின் துன்பமும் இன்பமும் பற்றிய அறிவு எனினும் பொருந்தும். மக்களிற் பெரும்பாலார் மேற்குறித்த அறிவுக் குறைபாடுடையராகவே காணக் கிடத்தலின் ஆசிரியர் ***மாக்கள்*** என்ற சொல்லால் இங்கு மக்களைக் குறிக்கலுற்றாராவர். உண்டு உடுத்து இன்ப மனுபவிப்பதே போந்த நெறியாகக் கொண்டு முத்திக்குரிய முயற்சியொன்றும் கைக்கொள்ளாதிருப்பது மாக்கள் தன்மை எனப்படும். ஸ்ரீ மெய்கண்ட சிவத்தினால் ஆட்கொள்ளப்பட்ட பின்னர் ஸ்ரீ அருணந்திதேவ நாயனார் கண்ணுக்கு எல்லா நன்முயற்சியற்ற மாந்தரும் மாக்கள் நிலையினராகத் தோன்றலால் இங்ஙனம் கூறலுற்றாராவர். மேலும், தமக்கு வேண்டிய நன்மையையே தாமறியாத அறிவுக் குறைபாடுடையாரை மாக்கள் என்று குறித்தல் தீதுமன்று. ஏனெனில், மக்கள் இச் செய்யுளில் தம்மைக் குறிக்கும் இச் சொல்லைப் படிக்குங்கால் தமது இழி தகைமையை ஒருவாறு உணர நேரிட்டுத் திருந்துமுயற்சிக் குட்படலுங் கூடும். இடித்துக்

கூறித் திருத்தல் மெய்யருளுடையோர் செயலாதலால் இவ்வாறுரைத்து நம்மை நல்வழிப் படுத்துகின்றார் இவ் வாசிரியர் எனலும் பொருத்தமுடையதாம். மாக்கள் நிலையில் நாமிருத்தலை ஆலய வழிபாட்டிலும் நமக்கு முதற்கண் விநாயக வணக்கம் அறிவுறுத்துகின்றது. கஜானனர் வழிபாடும், அவரது திருவுருவும் மிகச்சிறந்த தத்துவக் கோட்பாடுகளை உட்கொண்டிருப்பினும், தூல அறிவுடைய மாந்தர்க்கு அவர்தம் திருவுருவம் மாக்கட் பிறப்பினை நினைவூட்டாமற் போகவில்லை. அதிலும் மும்மதங்கொண்ட மதமாவின் முகம், நமக்கு மும்மலம் இருத்தலைக் காட்டுங் குறிப்புடையதென்னல் தவறன்று. அன்றி, வேழ முகத்தர் இருவகை மதங்களையே உடையர் என்று கொள்ளினும், நமது மலங்கள் மூன்றும் சகஜம், ஆகந்துகம் என்ற இரண்டேயாக அமைதலைப் பொருத்திக் கோடல் ஏற்புடையதே. மலநீங்கிப் பாச விடுதலையை மக்கள் அடையவேண்டுமென்பதை அவர்தம் திருக்கரந் தாங்கும் பாசமும் உணர்த்திக்கொண்டே இருத்தல் அழகிதாம். இவ்வழகு கருதிப்போலும் ***அழகிய விநாயகர்*** என்ற திருப்பெயர், திருவாவடுதுறைப் பிள்ளையார்க்கு வழங்கி வருவது! நிற்க, உலகில் அறிவுநிறைதான் எப்போதுமே அறிவுக்குறையை ஆண்டு அடிப்படுத்தி வருகின்றதென்பது கூர்ந்து காண்பார்க்கு விளங்கும். மக்கள், அறிவு அதிக-முடையவராதல் வேண்டும். அறிவுக் குறைக்கு மாக்கள் உருவே அறிகுறியாகக் காட்டப்படும். இவ் வுண்மை கொண்டு காணின் ***மாக்கள்*** என்னும் இச் செய்யுட் சொல்லானது, நமக்கு அறிவுக்குறை இருத்தலை ஒருவாற்றால் உணர்த்தி, அறிவு மிகப் பெற

வேண்டும் என்ற நமது ***கடமையையும் உரிமையையும்*** ஞாபகப்படுத்துகின்றது எனலும் தரும். மனிதரால் வளர்த்துப் பழக்கப்படும் அரிமா முதலான எம் மிருகமும் தமது, மிருகத் தன்மை நீங்கப்பெற்று நல் வழிப்படுதல் கண்கூடான செய்தியே. இவ்வாறே நாமும் பரமாசாரியன் பார்வைக்குட்பட்டால் நற்பண்-புடைய மக்கள் ஆகிவிடுவோமென்பதில் ஐயமில்லை என்ற கருத்தையும் இச் சொல் தன்னுட் பொதிந்து கொண்டுள்ளதாகும்.

'மாக்கள்' சொல்லை அடுத்துப் பாடலில் நிற்பது ***'மலம் அகற்றும்'*** என்ற தொடராகும். ஏழையின் வறுமையைப் போக்கி வளமுடையவ னுக்கும் ***செல்வந்தனே சிறந்தவன்.*** பட்டினியாளனின் பசியைப் போக்க ***உணவளிப்பவனே ஏற்றமுடையவன்.*** மந்த மதியுடைய மாணவனையும் அவனதறியாமையை அகற்றி அறிவாளனுக்கும் திறனுடையானே ***நல் லாசிரியன்.*** கலகத்தை அடக்கி அமைதியை நாட்டு பவனே ***சிறந்த வீரன்.*** குடிமக்களின் குறை களைந்து அவரை நன்னடையாளராகச் செய்யவல்லதே ***சிறந்த அரசு.*** பிணியாளனின் நோயை நீக்கும் மருத்துவனதே ***சிறப்புடை மருத்துவம்.*** இவையெல்லாம் உலகியலில் நாம் காண்பன. இங்ஙனமாவதே, மாக்கள் நிலைக்கு மக்களாகிய நம்மனோரைத் தாழ்த்திச் சதா காலமும் துயரில் ஆழ்த்தி அல்லற்படுத்தும் மலத்தைப் பரிகரிக்-கும் சிறந்த வல்லபம். மலமற்றாலல்லது பிறவியறாது; பேரின்பம் உறாது. மலம், தானாக நீங்காது. மல முடைய உயிர், சிற்றறிவுடையதாதலால் தானாக நீக்காது. சேற்றுள் வீழ்ந்துவிட்டவன் அச் சேற்றையே கால்களால்—கைகளால் மாறி மாறி

மிதித்தும் பற்றியும் கரை ஏற முயன்ருல் இயலாது. அவனை வன்னிலத்தே நிற்பானெருவன் கைகொடுத்துத் தான் ஏற்றவேண்டும். இவ்வாறே பாசப் படுகரில் வீழ்ந்து பதைத்துக்கொண்டிருக்கும் நம்மைப் பாசங்கள் இயல்பாகவே நீங்கப்பெற்ற (இல்லாத) ஒருவனே அடிதந்து ஆதரித்தாகவேண்டும். எவராலும் ஆகாததும், நம்மாலும் முடியாததுமான இப் பேருதவியைப் பரமாசாரியன் கோலத்தில் நின்று சிவமே செய்தாளுகின்ருன். தொகுத்துரைப்பின் சிவம் நமக்குப் புரியும் உதவிகள் இரண்டே, ஒன்று ***மலமகற்றல்.*** (பாசநீக்கம்) ; மற்ருென்று தன்னையே தருதல், (சிவப்பேறு). இவற்றுள் முன்னது நிகழாமல் பின்னது நிலையாது. மருத்துவத்தில் (First aid) முதலுதவி போல்வது மலமகற்றல். இதனைச் செய் தளிப்பவர் ஸ்ரீ மெய்கண்டதேவர் என இவ்வாசிரியர் இங்குக் குறிக்கலுற்ருர் ஆவர். எல்லாவித நோய்-களுக்கும் சிகிச்சை செய்யும் ஒரே மருத்துவ நிலைய மானது, அந்த அந்த நோய்க்கும் தனித்தனியே சிகிச்சை யாற்றும் பற்பல மருத்துவக் கோட்டங்களினும் சிறப்பும், அடைதற்கு எளிமையும் உடையதென்பதை எவரே மறுப்பர்! இன்னதகையதே நம் ஸ்ரீ மெய்கண்ட சிவத்தின் திருவடி என்க! பொன், நெருப்பினுல் மாற்றுயர்ந்து மதிப்புறுகின்றது. இவ்வாறே தீக்ஷைக் கிரமமானது பரமாசாரியனுல் புரியப்பட்டு உயிர், மலமகன்று உறுதியடைகின்றது. ஞான கிரியைத் தீக்ஷைகளின் விவரம் சாத்திரங்களால் அறிக !

**வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் என்று**

ஸ்ரீ மெய்கண்டதேவர் திவ்விய சரிதம் நம்மனோர்க்குத் தெரிந்த ஒன்ரும். இவராவார், " ஈண்டிய பெரும்

பெயர்க் கடவுளிற் கண்டவர்; உயர் சிவஞானபோதம் உரைத்தோர் ; பொய் கண்டகன்றவர் ; பவம்நனிவன் பகை கடந்ததவர் அடி புனைந்த தலைமையோர் ; "வெண்ணெய்ச் சுவேதவனர்" என்று பாராட்டப் பட்ட பரமாசாரியராவர். இவரைத் தரிசிக்க நாம் அடையவேண்டுவதே ***வெண்ணெய்நல்லூர்ப்*** பழம் பதியாகும். குற்றம் செய்தபின் தண்டித்துத் திருத்துவதைவிடக் குற்றம் செய்யுமுன் குற்றமென்பதை உணர்த்தித் திருத்துதல் சாலச் சிறப்புடையதாகும். ஊர்க் காவலர் கடமை இஃதென உலகியல் நெறியும் உணர்த்துகின்றது. இங்ஙனம் புரிதலே ***தடுத்தாட்கொள்ளல்*** எனப்படும். இங்ஙனம் முழுமுதல்வனே ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் விஷயத்தில் தடுத்தாட்கொண்டு நடந்து காட்டினன். இங்ஙனம் எவரையும் குற்றம் புரியாமே தடுத்தாட்கொள்ளும் தன்மை இவ்வூர்க்கே உள்ளதென்று பெருமைப் படுத்தும் பொருட்டு ஊர்ப் பெயரை ஆவலோடு கூறியுள்ளார் ஆவர். அன்றியும், சிவபெருமான் சுந்தரரைத் தடுத்தாட்கொண்டது போலவே ஸ்ரீ மெய்கண்டார், (ஸ்ரீ அருணந்தியாராகிய) தன்னைத் தடுத்தாட்கொண்டதும் இப்பதியிலே ஆதலால் இவ் வூர்ப் பெயரை நம் நெஞ்சிற் பதியவைக்க ***வெண்ணெய் நல்லூர்*** என்று கூறியுள்ளார் எனவும் கூடும். மற்றும், ஸ்ரீ மெய்கண்டதேவரைப் பரஞ்சோதியார் வலிய ஆட்கொண்டதும் இவ்வூரிலேதான். ***கடந்தைப்*** பதியாகிய கடத்திலேஉள்ள ஆகமமாகிய ஆன்பாலினைமத்தித்துச் சிவஞானபோதம் என்கிற ***வெண்ணெய்*** ஆக்கித் தந்த ***நல்லூர்*** இஃதாதலால் இதன்பெயரை உறுதிப்படுத்திய செயலாக இங்ஙனம் நிகழலுற்றதென்னலாம். இக்

கருத்து இவ்வாதினத்து 47-ஆம் வெளியீட்டிலே "மறை ஆன் தருபால் கடத்தகம் மறந்தே—மண்ணை உண்டொழி மாசுஅறக் கழிப்பான்—*வெண்ணெய்* உணர்த்துபு விடருள் விழுப்*பதி*" என்னும் பாடலடிகளின் குறிப்பாலறிபலாம். கம்பரை மகாகவியாக்கிய மாண்புடைப் பதி இதுவே ஸ்ரீ மெய்கண்டதேவர் தமது இரண்டாம் ஆண்டு தொட்டு இருபதாம் ஆண்டு முடிய இவ்வூரிலே எழுந்தருளியிருந்தனர். தமது பதினைும் அகவையளவிலே ஸ்ரீ அருணந்தியாரை ஆட்கொண்டருளியதோடு நாற்பத்தொன்பது சீடர்கட்குச் சிவஞான உபதேசம் தமது திருவாயினலேயே நிகழ்த்தியருளினர். ஆதலால் இவ்வூரினைச் ***சித்தாந்தத் தாயகம்*** என நாம் மதித்தல் தகும். ***மெய்கண்டான்*** என்ற திருப்பெயரே ஸ்ரீ சுவேதனப் பெருமான் பெருமையை உணர்த்தும். மக்கள் மனத்தே குழப்பம் விளையாதபடிச் சித்தாந்தமே மெய் எனக் கண்டு தருக்க ரீதியாக உபதேசித்தருளிய பரமாசாரியராவர் இவர். சிவமே மெய்ப்பொருள் என்பது இவரால் தெளிந்தருளப்பட்ட உண்மையாகும். மேலும், ஸ்ரீ மெய்கண்டதேவரை ஆட்கொண்டருளியவர் பரஞ்சோதி முனிவராவர். இவரை ஆட்கொண்டவர் சத்தியஞான தரிசனிகள் ஆவர். இந்தத் திருப்பெயரே தமிழால் மெய்கண்டார் எனச் சுவேதனப் பெருமானுக்குப் பரஞ்சோதியாரால் இடப்பட்டது. ஆதலால் இவர் திருப்பெயர், பரம்பரைப் பெயராகும் பெருமை படைத்ததாகும். ***மெய்*** என்னும் சொல் ***சத்தியம் ஞானம்*** இரண்டையும் உணர்த்தும்; ***தரிசனி***கள் என்பது ***கண்டார்*** என்னும் பொருளது. சத்து, சித்து, ஆனந்தம் என்னும் சிவத்தினது இயல்புப்

பெயரை மெய்கண்டார் என்னும் திருப்பெயர் அடக்கிக்கொண்டிருத்தலும் அறியலாகும். இப்பெயர் வாசியாலும் ஸ்ரீ மெய்கண்டதேவர் சிவமேயாவர் என்னத் தடையிலது. புறச் சந்தான குரவர்கள் நால்வருள் இவர் முதல்வராவர். இந்த நால்வர் திருப் பெயர்களையும் (*மெய்*கண்டார், அருணந்தியார், மறை-ஞானசம்பந்தர், உமாபதி*சிவம்*) வரிசையாகச் சிந்தித்தால் முதலில் ***மெய்*** என்ற சொல்லும் இறுதியில் ***சிவம்*** என்ற சொல்லும் நிற்பதைக் காணலாம். இவ்விரு சொற்களும் உண்மைப் பொருள் சிவமே என உணர்த்துவதை அறிந்து மகிழலா மன்றே! ***மெய்கண்டு, அருள்நந்தி மறைஞானத் தொடர்புற்றுச் சிவத்திலே பதிந்து*** கிடத்தல்தானே நமக்கு வேண்டுவது. இதனை முறையே இத் திருப் பெயர்கள் அறிவிக்கும் பெற்றிதான் செப்பும் தரத்ததோ! ஆகையால் இவர்தம் திருப்பெயரை எத்துணை முறைதானும் ஓதலாம்! கருதலாம்! ஒருகால் கருதினும் அமையும் என்பார், ***ஒருகால் மேவுவரால்*** என இசைத்துள்ளார் ஆசிரியர். உண்மையன்போடு கருதுதலே ***மேவுதல்*** ஆகும். மேவு நசைப் பொருட்டது

இனி, ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாரை ஒருகால் மேவுவார் எய்தும் பேறு யாது என்பார்க்கு விடையாக, மேலுள்ள சொல்தொடரை அருளிச் செய்துள்ளார் ஆசிரியர் எனலுமாம். சாமானியமான ஒரு விதை நிலத்தே விழுமாயின் அவ்வொன்று பலவாக விளைதலை நாமறிவோம். இவ்வாறே, நம் நாயனார் திருப்பெயரை ஒருமுறை தம் உள்ளத்தே கருதுபவர், பெரும் பேற்றினை அடைதலில் தடையில்லை. "தொடுவுழித்

தொடுவுழிப் பயலை நோய் நீங்கி, விடுவுழி விடுவுழிப் படரப் பெறுதல் சாதாரணத் தலைவனின் கரத்து விசேடம் " என்பது அகப்பொருள் நூல். வெண்ணெய் நல்லூரார் திருப்பெயரை ஒருகால் ஓதுதலும், திருவடியைத் தரிசித்தலும் நிரந்தரமாகப் பாசநோயை அகற்றியே தீரும் என்பதை நாம் உறுதியாக நம்பலாம். சிவம் யாண்டும் நீக்கமற நிற்பது. நம் உள்ளத்தும் உள்ளது. இதனை நாம் உணர ஒட்டாமற் செய்வது பாசத் திரையே. இத் திரை, ஒருகால் மேவுதலால் சிதைகிறது. திரையகன்றதும் நடிகர் காட்சி புலப்படுகிறது. இவ்வாறே பாசமகன்றதும் பரனுண்மை புலப்படுகின்றது இவ்வுண்மையினை இவ்வாசிரியர் ***வேறின்மை*** என்ற சொல்லால் குறித்துள்ளார். இதுவே ***அத்துவித உண்மை*** எனப்படும். இச் சொற்பொருளை அபேதம் முதலாகப் பொருள்படுத்துவார் பிறர். ஆனால் நம் சுத்த அத்வைத சித்தாந்தம் அபேத முதலான மூன்றையுமே பொருளாகக் கொள்வது இறைவன் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்பன். ஒன்றாய் வேறாய் உடனாய் இருப்பன். உயிர்களுக்குக் காட்டுமுபகாரம் காணுமுபகாரம் என்ற இரண்டையும் உயிர்களின் பெத்தம் முத்தி இரண்டினும் இறைவன் புரியும். ஒரு பொருள் குணம் குணி என இரண்டு தன்மைப்பட்டு நிற்பதுண்டு. இரு பொருள்கள் பிரிக்கமுடியாத கலப்பால் ஒரு தன்மைப்பட்டு நிற்றலும் உண்டு. இவ்விரண்டுக்கும் பொதுவாகத் தாதான்மியம் என்பது பெயரேயாயினும், வேறுபாடும் உளது. நெருப்பு பொருளால் ஒன்றே. ஆனால் நெருப்பும் சூடும் என்ற இருதன்மைப் பட்டு நிற்கும். இது குண குணி சம்பந்தம். இதுவே ***தாதான்மியம்*** எனப்படுவது.

கண் ஒளியும் ஆன்மாவின் அறிவும் பொருளால் இரண்டாம். ஆனால் பிரிக்கமுடியாத கலப்புடையன. இக் கலப்பே ***அத்துவிதம்*** ஆம். இதனால், ***பேதப் பொருள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடமே அத்துவிதமாம்*** எனத் தெரியலாம் சிவனுக்கும் சீவனுக்குமுள்ள தொடர்பு இஃதாம். "அறிவிப்பான் தானே; அறிவாய் அறிகின்றான் தானே" என்ற செய்யுளும் இதனை நன்குணர்த்தும். காட்டுமுபகாரம் முன்னையது; காணுமுபகாரம் பின்னையது. பெத்தத்தில் இவ்வத்துவித நிலை விளங்குவதில்லை. சற்குருவாகிய சிவத்தருளால் முத்தியில் இது நன்கு விளங்குவதாம். இந்த எப்போதும் பிரிப்பற்றிருக்கும் சுத்த அத்வைத நிலையை இங்கு ***வேறு இன்மை*** என்ற சொல்லால் பயனுரைக்குமுகமாக அறிவித்துள்ளார் ஆசிரியர் என்ப. இந்த உண்மையை, முற்கூறப்பட்ட ***மேவுவார்*** எள்ளளவும் ஐயமறத் தெளிவர். இதனைக் ***கைகண்டார்*** என்ற சொல்லால் உணர்த்தியுள்ளார். கைகாணுதல் என்பது தேர்ச்சித் தெளிவை உணர்த்தும் சொல்லாம். கையிலுள்ள பொருளைக் கண்ணுடையான் கையின் பரிச உணர்வாலும், கண்ணில் பார்வையுணர்வாலும் ஐயமற அறிகிறான். இவ்வாறே உயிரறிவாதியவும் இறை அறிவாதியவும் பிரித்தறிய வாரா நிலையில் ஒன்றுபட்டுணர்வதே கைகாணுதற் பொருளாம். "உள்ளங்கை நெல்லிக் கனிபோல" என்ற பழமொழியும் இக் கருத்துணர்த்தும். மற்றும் இக் கருத்தை வலியுறுத்தவே ***உள்ளத்தின்கண்*** என்றும் கூறியுள்ளார். ஐயக் காட்சியும் திரிவுக் காட்சியும் அற்ற மனநிலையே

உள்ளம் எனப்படும். எனவே உண்மைக் காட்சியதே உள்ள நிலையாம். இதுபற்றியே உள்ளத்தின்கண் என்றூர் ஆசிரியர்.

மற்றும், இப் பாடலும், இந் நூலும் ***கண்*** என்று தொடங்கிக் ***கண்*** என்றே முடிவுபெறுகின்றன. சொல்லால் இரண்டும் ஒன்றே ; ஆனுல் பொருளாலும் இலக்கணத்தாலும் வேரும். இவ்வாறு பொருளால் இரண்டுபட்ட இவை சொல்லால் ஒன்ருய் நிற்பதும் சுத்த அத்துவித நிலை காட்டும். பின்னும் இச் செய்யுள், நூல் இவற்றின் முதலெழுத்தையும், கடைசி எழுத்தையும் கூட்டிப் படிப்பினும் ***கண்*** என்றே அமைந்திருப்பதும் இதனை உறுதி செய்யவல்லதே. யாவும் சிவமேயாம். சிவ வியாபகத்துள்ளதேயாம். எனவே சொரூப சிவத்தைத் தம்மிடத்தே அத்துவித மாகப் புலப்படக் காண்பர் ***மேவுவார்*** என்பதே பயனுரையாம். ***மேவுவர்*** என்று தொடங்கிக் ***கைகண்டார்*** என்று இறந்தகாலத்துப் பொருளால் முடித்திருப்பது நிச்சயத்தை உணர்த்தும். விரைந்து காண்பர் எனவும் கூடும். இவ்வாறேயல்லாமல், கைகண்டார் யாரும் மெய்கண்டாரைக் கரந்தருளி மலமகற்றும் சிவம் என மேவுவர் எனவும் கொள்ள லாகும். எவ்வாருயினும், ***பரமசிவனே ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து ஆன்மாக்களை இரட்சித்தருளுவன்*** என்பது கருத்தாம் இதனுல் மயக்கமறுத்துப் பொருள் நிச்சயம் பெற்று நிட்டை கூடுதல் உணர்த்தப்பட்டது. To see Paramacharya is to see God and become one with Him. என்பர் ஆங்கிலத்தில் இதனை. பரமாசாரியர் பிறப்பு ஞான வடிவுடையது. அது அறத்தால் அமைவது

என்பதும் தெளியப்படவேண்டும். இதனை, "*தீரா அறவா* நினைக்கின் அடியேன் பொருட்டுப் பிறவா நினக்குப் பிறப்பு" என்பார் கருத்துடன் ஒப்புநோக்கத் தக்கது. இப் பிறவாப் பிறப்பு நம் ஓயாப் பிறப்பை அறுப்பதாம். ஸ்ரீ மெய்கண்ட பரமாசாரியர் பதமலர் வாழ்க! ஸ்ரீ அருணந்திதேவர் திருவடிகள் வாழ்க! அபிடேக பரம்பராசாரியர்கள் பாத அரவிந்தம் வெல்க! வாழ்க! என இங்கு வழுத்திக்கொண்டு மேல்வரும் செய்யுட் கருத்துக்களைக் காண்போம்.

---

## செய்யுள்—2

*நிலைமண்டில ஆசிரியப்பா*

எல்லாம் சிவன் தொழில்

**ஆன்மாவின் அறியாமை வரலாறு**

கர்த்தாவே அறிவிப்போன்

### பதியியல்பு

**கண்ணகல் ஞாலத்துக் கதிரவன் தானென**
**வெண்ணெய்த் தோன்றிய *மெய்கண்ட தேவ !***
**காரா கிருகக் கலிஆழ் வேலைநின்**
**பேரா இன்பத் திருத்திய *பெரும !***

**5 வினவல் ஆனு துடையேன்; எனதுளம்**
**நீங்கா நிலைமை ஊங்கும் உளையால்;**
**அறிவின் மைமலம் பிறிவின் மைஎனின்,**
**ஒராலினை உணர்த்தும்; விராய்நின் றனையேல்,**
**திப்பியம் அந்தோ! பொய்ப்பகை ஆகாய்;**

10 சுத்தன் அமலன் சோதி நாயகன்
முத்தன் பரம்பரன் எனும்பெயர் முடியா ;
வேறுநின் றுணர்த்தின் வியாபகம் இன்றாய்ப்
பேறும் இன்றும் எமக்கெம் *பெரும !*
இருநிலம் தீநீர் இயமானன் கால்எனும்

15 பெருநிலைத் தாண்டவம் பெருமாற் கில்ஆதலின்,
வேறா உடனா விளம்பல் வேண்டும் ;
சீறி யருளல் ; சிறுமை உடைத்தால் ;
அறியாது கூறினை அபக்குவ பக்குவக்
குறிபார்த் தருளினம் குருமுத லாயெனின்.

20 அபக்குவம் அருளினும் அறியேன் ; மிகத்தகும்
பக்குவம் வேண்டின் பயன்இலை நின்னால் ;
பக்குவம் அதனால் பயன்நீ வரினே
நின்னைப் பருவம் நிகழ்த்தா தன்றே !
தன்னைப் பாரிலி என்பதும் தகுமே !

25 மும்மலம் சடமணு மூப்பிள மையின்நீ
நின்மலன் பருவம் நிகழ்த்திய தார்க்கோ ?
உணர்வெழு நீக்கத்தை ஓதிய தெனினே
இணையிலி யாயினை என்பதை அறியேன் !
யானே நீக்கினும் தானே நீங்கினும்

30 கோனே வேண்டா கூறல் வேண்டும் ;
காண்பார் யார்கொல் காட்டாக் கால்எனும்
மாண்புரை உணர்ந்திலை ; மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்கு மெய்ஞ்ஞா னத்தின்
ஆட்பா லவர்க்கருள் என்பதை அறியே.

## பொழிப்புரை

*விசாலமான பூமியிலுண்டாகிய இருட்டை நீக்குவ-தற்காக வானவெளியிலே தோன்றும் சூரியன்போல,*

ஆன்மாக்களுக்குண்டாகிய அஞ்ஞான இருளை நீக்கும் பொருட்டுத் திருவெண்ணெய்நல்லூர் என்கிற திருப்படை விட்டிலே எழுந்தருளிய **ஸ்ரீ மெய்கண்டதேவரே.**

அறியாமை என்கிற சிறைச்சாலையுள் விலங்கு எனப் படும் உடம்பிற்கிடந்து அழுந்துகின்ற அடியேனை உம்முடைய அசைவற்ற பேரின்ப அநுபவத்திலே இருத்திய **பெருமானே !**

தேவரீர் திருமுன் ஒன்று **கேட்க**வேண்டுமென்று எப் போதும் எண்ணுகின்றேன். அது யாது என்ருல்,

அடியேன் உள்ளத்தைவிட்டு ஒருபோதும் நீங்கா நிலைமை அநாதிமுதலே தேவரீருக்குண்டு; அப்படி இருந் தும், அடியேனுக்கு **அறியாமை** ஏன் வந்தது ?

**ஆணவமலம்** உன்னைவிட்டு நீங்காத நிலைமையால் வந்தது என்பீராயின், அடியேனை விட்டுத் தேவரீர் நீங்கி நிற்கின்றதாக அஃதறிவிக்குமே ?

அப்படியில்லை ; **கூடி**த்தான் **நிற்போம்** என்று அருளிச் செய்வீராயின் அது தெய்விகமான ஆச்சரியமே ஆகும். எப்படி என்ருல்,

அப்படி அஞ்ஞானத்தோடு கூடி அடியேனுடு தேவரீரும் கூடியிருந்தால் பொய்யான அஞ்ஞானத்துக்குப் பகை எனத் தேவரீரைச் சொல்ல இயலாமற் போகுமே ; அதுவுமல்லாமல், அநாதியே **சுத்தராயிருப்பவர்** என்றும், **நின்மலர்** என்றும், ஆதியந்தமற்ற **பேரொளி யான கருத்தா** என்றும், **உபாதியற்றவர்** என்றும், எல்லாப் பொருள்களுக்கும் **மேலான பொருள்** என்றும், சொல்லப்படும் திருப்பெயர்கள் தேவரீருக்குண்டாயிருக்க மாட்டாவே !

நாம் உன்னோடு கூடி நிற்பதில்லை ; உன் அறிவுக் கறிவாக **வேருக** நின்றே உன்னை அறிவித்து **நிற்போம்** என்பீராயின், எம்பெருமானே ! தேவரீருக்குச் **சர்வ வியாபகர்** என்கிற நிலைமையும் இல்லையாய், அடியே னுக்குச் சாயுச்சியப் பேறும் இல்லையாகிவிடுமே ! அல்லா மலும்,

"இருநிலனய்த் தீயாகி நீருமாகி இயமானனய் எறியும் காற்றுமாகி—அருநிலைய திங்களாய் ஞாயிறுகி ஆகாயமாய் அட்டமூர்த்தியாகி"—என்கிற திருத் தாண்டகத்தின்படி **பூரண நிலை**யாகிய திருக்கூத்தும் தேவரீருக்கில்லையாகிவிடுமன்றே ! ஆகையால்,

தேவரீர் அடியேனுக்கு அறிவிக்கும்போது வேருய் நின்ரு கூடிநின்ரு இரண்டில் ஒன்றைத் தீர அருளிச் செய்யவேண்டும். அடியேன் கேட்கும் இவ் வினவுக்குக் கோபங் கொள்ளவேண்டாம். ஏனெனில், அடியேன் போதம் சிறுமை உடையது ; ஆதலால் அவ்வாறு கூறினேன்.

இப்படி நான் சொன்னபோது, தேவரீர், நாம் **குருமூர்த்தி**யாகையால் **அபக்குவனைக் கோபிப்பதும், பக்குவனை விரும்புவதும் முறை ;** நாம் சொன்ன உபதேசப் பொருளை நீ மாறுபடக் கொள்வதால் நாம் கோபித்தோம் என்பீராயின்,

அடியேன் அபக்குவனதலாலே தேவரீருபதேச அர்த்தங்களை மாறுபடாமல் அறியப்போகிறதில்லை ; மிகுந்த **சத்திநிபாதத்**துக்கான பக்குவம் வேண்டு மாயின், தேவரீரால் ஒரு பிரயோசனமும் இல்லையாய் விடும். இவ்வாறன்றி அடியேனுடைய பக்குவத்துக் கேற்பத் தேவரீர் எழுந்தருளுவதானல், அந்தப் பக்குவம் என்பது சடம் ஆனபடியால் அது தேவரீரை அடியேனுக்கு

உண்டாக்காது. இல்லை! அந்தப் பக்குவம்தான் உண்டாக்கும் என்பீரானல், தேவரீரை ஒப்புயர்வற்றவர் என்று சிவாகமங்கள் சொல்லுவது பொருந்தாதாகும். அல்லாமலும்,

ஆணவம், மாயை, காமியம் என்கிற மூன்று மலங்களும் ஜடமானவை; ஆதலால் அவற்றிற்குப் பக்குவம் வேண்டுவதில்லை. நானே (உயிரோ) அச்சு மாறி எடுத்த உடல்தோறும் அடுத்த தன்மையாக இருப்பதனுலே எனக்கு மூப்பு, இளமை இல்லை. ஆதலால் எனக்கும் (உயிருக்கும்) பக்குவங் கூடாது. பதிப்பொருளாகிய தேவரீரோ தேகத் தொடர்பே இல்லாதவர்; நிருமலர்; ஆகையினுலே உமக்கும் பக்குவம் சொல்ல ஒண்ணுது. ஆகவே, பக்குவம் என்பது யாருக்கு விளைவது?

உனக்கு ஓரறிவு உண்டாம்போது அந்த **மலங்கள் நீங்கலுறும்**; அப்போது **புண்ணிய பாவ**த்துலே **ஒப்பு** உண்டாம். இதனுல் பாசம் நீங்கினதே பக்குவம் என்று தேவரீர் சொல்வதாயின்,

தேவரீர் **ஒப்புயர் வற்றவர்** என்பதை எப்படி அடியேன் ஒப்புதல் கூடும்?

அந்த மலங்களை அடியேனே நீக்கிக்கொண்டாலும் அல்லது அவைகள் தாமே நீங்கினுலும், தேவரீர் நீக்க **விகாரியல்லீர்** என்றெண்ணுமிடத்து, அடியேன் மற்றொன்றும் விண்ணப்பம் செய்ய வேண்டியுள்ளது. அது என்ன என்றால்,

காண்பார் யார்கொல் காட்டாக்கால் என்னும் பொருள் பயக்கும் "காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்கால்" என்னும் அழகிய திருத்தாண்டகத்தின் உரையைத் தேவரீர் உணர்ந்திலீர் போலும்! எனக்குத் தெளிவாகத் தெரிவது —

*பாண்டியன் கேட்கத் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த "ஆட்பாலவர்க்கருள்" என்னும் திருப் பாட்டில்* ***சிவஞானமே அறிவு*** *என்றும், அடியார் களுக்குத்* ***தேவரீரே நாயன்*** *என்றும் கண்டிருக்கிறது; இதைத்தவிர வேறெதுவும் விகற்பித்துக் கேட்க வழக்-கில்லை; இந்த முறைமையே அறிவாம். ஆகையால், யான் கேள்வி ஒழிந்தேன்.*

## விரிவுரை

பரமசிவனே பரமபதியாவர்; அவரே எவற்றையும் தொழிற் படுத்துபவர் என்ற கருத்தை இப்பாட்டின் செய்திகள் தெரிவிப்பனவாகும். இதனால் இச் செய்யுள் மூலமாகப் பதியிலக்கணம் நமக்கு உணர்த்தப் படுகின்றது என்னலாம் கடவுள் எங்கும் நிறைந் திருப்பவர். ஒன்றிலும் தோய்வில்லாதவர். உயிர் கட்கு வீடுபேற்றினை அருளுபவர். இம் மூன்றும் நம் நினைவில் நிலைத்திருக்கவேண்டும் இந்த அடிப் படையைத் தருக்க ரீதியிலே சித்தாந்த நூல்கள் செப்புகின்றன. அவற்றைத் தெரிந்து தெளிதல் நம்பிக்கை யற்றோர்க்கு நலம் பயக்கும் என்ப. ***கண்ணகல் ஞாலத்துக் கதிரவன் தானென—வெண்-ணெய்த் தோன்றிய மெய்கண்டதேவ!*** இவ்வரிகள் ஸ்ரீ மெய்கண்டதேவரை ஸ்ரீ அருணந்திதேவராகிய அவரது மாணவர் விளிக்கும் பகுதியாம். ***பூமி, இருட்டு, சூரியன்*** என்ற மூன்று பொருள்களை நாம் கண்களால் காண்கிறோம். இவ்வாறே ***உயிர்கள், மலம், இறைவன்*** என மூன்று பொருள்கள் இருத்தலை நாம் ஞானத்தால் அறியவேண்டும். பூமி எனத் தொகுத்து ஒன்றாகக் கூறப்படினும், நானிலமாகவும், கண்டங்களாகவும்,

நாடுகளாகவும், ஊர்களாகவும் பலவேருக ஞாலம் உள்ளது. இவ்வாறே உயிர் என்று கூறப்படினும், பக்குவம், பிறப்பு முதலியவேறுபாடுகளால் அவைகள் பலவாம். ஞாலத்துக்குத் தரப்பட்டுள்ள ***கண்ணகல்*** என்ற அடைச்சொல் ஞாலத்துக் கூறுபாடுகள் பல என்பதை உணர்த்தும். இதுவே உவமேயப் பொருளைக் குறிக்கையில் உயிர்களின் பன்மை காட்டும். திருக்குறள் நூலின் முதற் குறளிலே **உலகு** என்ற சொல் இவ்வாருன பொருளில் அமைந்திருத்-தலையும் நாம் காணலாகும்.

***ஞாலம்*** என்ற சொல் உலகினை உணர்த்தும் சொல்லாம். அந்தரத்தே (வெளியிலே) நாலுவது தொங்கிக் கிடப்பது என்பது இதன் உறுப்புப் பொருளாம். தொங்குவதாதலால் ஏதோ ஓர் ஆதாரத்தைப் பற்றித் தங்குவதே ஞாலமாயிற்று. எனவே அருள்வெளியிலே இறைவன் இச்சையை ஆதாரமாகக்கொண்டு ஞாலம் இயங்குகின்றதெனல் மரபாம். ஆகவே, ஞாலம், ஒன்றை ஆதாரமாகக் கொண்டு கிடப்பதென்பது தெளிவாம். இவ்வாறே உயிர்களும் ஏதேனுமொரு பற்றுக்கோட்டினை ஆதாரமாகக் கொண்டே இயங்குகின்றன. இவற்றின் உண்மையான ஆதாரம் இறைவனே. ஞாலத்தின் ஆதாரம் அறியப்படாமை போலவே உயிர்களின் ஆதாரமும் எளிதில் அறியப்படுவதில்லை. கதிரோன் காணப்படாத ஞாலப் பகுதி இருளில் அழுந்திக் கிடக்கின்றது. ஆதலால் விளக்கமற்றுள்ளது இவ்வாறே உயிர்களும் இருள் எனப்படும் மலத்தால் விரவப்பட்டுள்ளன. ஆதலால் உயிர்களின் அறிவும் விளக்கம் பெற இல்லை. இதனுல் கண்ணுக்குத் தெரிகின்ற

ஞாலத்தின் நிலையும், காண இயலாத உயிர்களின் நிலையும் உவமான உவமேயங்களாகப் பொருந்தி நிற்றல் காணலாம். இதுபற்றியே, நம் ஆசிரியர் உலகினைக் குறிக்கும் வேறுபல சொற்களிலிருந்தும் ***ஞாலத்து*** என்ற சொல்லினைப் பிரயோகித்தாராவர் என்க.

***கதிரவன்*** பேரொளிப் பொருள். நம் கண்கள் சிற்றொளியுடையன. சூரிய னொளியின் உதவி கொண்டுதான் கண், பொருளைக் காணமுடிகிறது. அதாவது சூரியனொளி, கண்ணொளி இரண்டும் கூடியிருக்க, சூரியனொளி, கண்காணவேண்டிய பொருளின்மீதும்பட, கண்கள் பொருளைக் காண்கின்றன. கண், ஏனை இந்திரியங்களைப் போலல்லாமல் சென்றறியும் இயல்புடையது. மேலும் சூரியன் எல்லாச் சமயத்தார்க்கும், நாட்டாருக்கும் பொதுப் பட ஒருவனாகவே இருந்து உதவுகின்றான். சூரியன், அரும்புகளைப் பக்குவப்படுத்துகிறான்; பக்குவப் பட்டனவற்றை மலர்த்துகிறான்; மலர்ந்து செயல் முடித்தனவற்றைத் தன் கால நியதிப்படி வாடச் செய்கிறான். மற்றும், சூரியனை அதன் ஒளி கொண்டு தான் அறிகிறோம் சூரியனொளிப் பிழம்பினைக் கண் அண்மித்தறிய இயலாது. இவ்வாறே இறைவன் பேரறிவினன். நாம் சிற்றறிவும் சுட்டுணர்வும் உடையோம். இறைவனுடைய காட்டுதல், காணுதல் என்னும் உதவியின்றி நாம் ஏதொன்றையும் அறிந்தனுபவிக்க இயலாது. இறைவன், உயிர்க்குயிராக நின்று செலுத்திப் புவனப் பொருட்களுள்ளும் வியாபித்துநின்று நுகரவைக்கிறான். உயிர் ஜடப் பொருளன்று; சித்துப்பொருளாதலால் இறைவனை

யடைதற்கான உரிமையுடையது. சிவம், எல்லா வுயிர்கட்கும் பொதுவான முழுமுதல்வன் ஆவான். இறைவனே, உயிர்களை அவற்றின் இயல்புக்கேற்பப் பக்குவப்படுத்தி ஆட்கொள்ளுகின்றான். இறைவனை அவனுடைய அருளைக்கொண்டுதான் அறிய இயலுமே யன்றி, ஏனைச்சுட்டுப் பொருள்களைப்போல அறிய முடியாது. இறையின்பத்தை உயிர் அழுந்தி யனுபவிக்க வேண்டுமேயன்றித் தனித்திருந்து துய்த்தல் ஆகாது. மேலும், சூரியனை இருட்டுப்பற்றாது. பொருட்களின் செயற்பயனும் சூரியனை அடைய மாட்டாது. எனவே நன்மை தீமை; சுத்தம் அசுத்தம் என்பன சூரியனைப்பற்றமாட்டா. இங்ஙனமே, இறைவனை மலம் பற்றாது. உயிர்களின் வினைப் பயன்களும் இறைவனைப் பற்றா. இவ்வுண்மைக ளெல்லாம் நமக்கு விளங்குதற் பொருட்டே ஆசிரியர் ***கதிரவன் தானென*** என்று உவமை வகுக்கலுற்றார் இதனை, "மலர்தலை உலகின் மாயிருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல்" என்றவரிகளுடன் ஒப்பிட்டுக் காண்டல் தக்கது. மற்றும், 'உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி" என்ற பாட்டடிகளும் மேற்கூறப்பட்ட கருத்துக்குப் பொருத்தம் செய்வனவே. சூரியன் வானவெளியிலே உள்ளான். அவ்வாறே சிவமும், தத்துவங் கடந்த பேரம்பலத்தே விளங்குகின்றானவன். என்றாலும், இளஞாயிறாகக் காட்சிப்பட்டுத் தன் செங்கரங்களால் பொருள்களைப் பரிசித்துப் பக்குவமாக்குகிறான். இங்ஙனமே சிவம் ***பரமாசாரியனாக*** இவ்வுலகிலே

காட்சிக் கெட்டித் தன்கரத்தால் பரிசித்து மலங் கெடுத்து உயிர்களைப் புனிதச் செந்நெறிப் படுத்து கின்றான். சூரியன் வேறு கிரணம் வேறன்று. இரண்டும் ஒன்றுபட்டவையே. இதனாலேயே. *கதிரவன்* என்ற பெயரால் சூரியனைக் குறித்தனர் ஆசிரியர். இவ்வாறே பரமாசாரியன் வேறு. சிவம் வேறன்று. ஒன்றே; ஒருவனேயாம். இங்கு, நம்மை யெல்லாம் செந்நெறிச் செலுத்தவும், ஸ்ரீ அருணந்தி தேவரை யாட்கொண்டருளவும் சிவமே ஆசா-ரியனாய் இங்ஙனம் ஆகித் தோன்றியது திருவெண்ணெய்நல்லூரில் ஆம். சூரியன், தான் ஓரிடத்திருந்து கொண்டே எங்கும் தன் ஒளி பரப்பு வது போலவே ஸ்ரீ மெய்கண்டதேவரும் இடந்தோறும் தாம் ஏகாமே, திருவெண்ணெய்நல்லூரிலே என்றும் தங்கி ஞானம் நல்குவாராயினர். ஆனது பற்றியே *வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்டதேவ !* என ஆர்த்தியுடன் ஆசிரியர் அழைக்கலுற்றாராவர். நமக்கு மெய்(உடம்பு) கண்டோரை நாம் உபசரணைப்பெற் றோராக மதித்தல் போல, ஸ்ரீ மெய்கண்ட தேவரை உண்மைப் பெற்றோராக நாம் கருதி வழிபடவேண்டும் என்பதையும் இத் திருப்பெயர் உணர்த்தாநிற்றல் காணலாகும்.

*காரா கிருகக் கலியாழ் வேனை நின் — பேரா இன்பத்து இருத்திய பெரும ! — கேட்ட* ஒன்றைச் சொல்வதினும் *கண்ட* ஒன்றைச் செப்புவது ஒப்பக் கூடியதாம் கண்ட ஒன்றினும் *அறிவறிந்த* ஒன்றை உரைப்பது சிறப்புடையது. அறிந்த ஒன்றை விட *ஆய்ந்த* ஒன்றைக்கூறுதல் அமைவுடையது. ஆய்ந்த ஒன்றினும் *முடிந்த* ஒன்றைச் சொல்லுதல்

நல்லது. முடிந்தஒன்றினும் ***பிறர் அநுபவத்தைப்*** பிரமாணமாகக்காட்டல் சிறந்தது பிறர் அனுபவத்தினும் ***தாமனுபவித்ததைச்*** சான்ருகச் சாற்றுதல் சாலச் சிறந்ததாகும். இந்த முறையில் நம் ஸ்ரீ அருணந்திதேவர் நம்மை ஐயமறத் தெருட்டுதற் பொருட்டாகத் ***தம் முடைய அனுபவத்தையே*** இங்குச் சொல்லிக்காட்டு கின்ருராவர். இந்த இரண்டு அடிகளில் அவர் அறையும் விஷயம் அவரே சொந்தமாகக் கண்ட உண்மைச் செய்தியே ஆகும். ஆதலால், இவ்விஷயம் நம் யாவர்க்கும் பொருந்துவதே என்னல் ஐயமில்லை.

பெருத்த சொந்தமான மாளிகை உடைய ஒருவன் மகன் ஏதோ குற்றம்புரிந்து தண்டிக்கப்பட்டதனல் சிறைச்சாலைக்குள் அடைபட்டுக் கிடப்பதாகக் கொள்வோம். இவன் குற்ற மற்றவனுயின் தன்னுடைய தந்தையின் மாளிகையில் சுதந்தரமாகச் சுகமனுபவித்து வாழலாம். குற்றம் புரிந்த காரணத்தால் காராக்கிருகத்தில் அடைபட்டான். ஆகையால் உண்ணல், உலாவல் உடுத்தல், படுத்தல், உறங்குதல் முதலிய எத் தொழிலிலும் சுதந்தரமற்று இன்னலும் இடரும் படுகின்ருன். ஒவ்வொரு நாளும் புதுப்புதுத் துன்பம். இவ்வாறே உள்ளது ஆன்மா இவ்வுலகில் இவ்வுடம்புள் இருப்பது. இது ஜீவன் எனப்பட்டுப் பற்பல துன்பங்களுழப்பதாய்ச் சுதந்தரமும் சுகமும் இல்லாமல் கைதியைப்போல் கஷ்டப்படுகின்றது. ஒவ்வொரு நாளும் அவத்தைகள் அதிகரிக்கின்றன. பொருள் நிறைந்த கப்பல் கடலில் ஆழ்வதுபோன்றுள்ளது நம் வாழ்வு. இந்த நிலை நமக்கிருத்தலைத் தெரிவித்தற்பொருட்டே “***காராகிருகக் கலி ஆழ்வேனை***” என்று கூறிக் காட்டியுள்ளார்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணில்லாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்த எம்மை" என நம்மைத் தெருட்டுதற்குத் தம்மையே கூறிக் காட்டிக்கொள்ளும் தாயுமானர் வாக்கும் இங்கு நோக்குதற்குரித்தே

கைதியைச் சுதந்தரமுடைய காவலன், மேலவன் ஆணைப்படி விடுதலை செய்கிறான். விடுதலை பெற்ற பின் கைதியானவன் புதுப் பிறப்பு அடைந்தாற்போல மகிழ்கிறான். சுகம் துய்க்கின்றான். இங்ஙனமே, பரமாசாரியன் பக்குவமடைந்த ஜீவனைப் பிறப்பு இறப்புத் துன்பங்களிலிருந்து விடுதலை செய்கிறான். அரசன் ஆணை, காவலன் வடிவில் தோன்றிக் கைதியை விடுதலை புரிவதுபோலவே சிவத்தின் கருணை, பரமா-சாரியன் கோலத்தில் காட்சி தந்து ஆன்மாவுக்கு விடுதலை அருளுகின்றதென்னலாம். ஆன்மாவுக்கு இயல்பு அறிவுடைமை. அறிவுக்குப் பயன் இன்பம். எனவே ஆன்மாவின் முடிந்த பேறு இன்பமே. இந்த அழியாத இன்பத்தைப் *பேரா இன்பு* என்பர். இது வந்தபின் நீங்குவதில்லை இதனைத் திருவள்ளுவர் ***பேரா இயற்கை*** என்று பேசுவர். இந்த எல்லையற்ற இன்ப அநுபவமும் சிவத்தால் நிகழ்வதே. சிவனருளை நீக்கி இது துய்த்தற்பாலதன்று. இவ்வுலகில் ஜீவன் முத்த நிலையில் நிறுத்திப் பின்னர் முத்த நிலையில் இருத்திக்கொள்வது சிவம். ஆதலால், முத்தியின்ப அநுபவம் பெத்த நிலையிலே தொடங்கலுறுகின்றது ஆசாரியனருளால். இதனையே, ***நின் பேரா இன்பத்து இருத்திய பெரும*** என்று தெரிவிக்கின்றார் ஆசிரியர். இச் செயல் யாவராலும் ஏனைத் தேவராலும் செய்ய முடியாத அருமைப்பாடு உடையதாதலால் இது

செய்தாரைப் ***பெரும*** என்றார் வாய்மணக்க என்க. மற்றும், சிவத்தினும் ஆசாரியனே சிறந்தவனென்று புகழவந்த இடத்தேயும், சிவம் மாயையுட் செலுத்துகின்றது. ஆனால் ஆசாரியன் மாயையாதி மலங்களைச் சேதிக்கின்றான் ; ஆகலின் சிறந்தவனென உபசரணை-யாற் கிளக்கலாயினர் அறிஞர். இதனாலும் ***பெரும*** என்றமை பொருந்தும். அன்றியும் ***" பெருமைக்கும்,*** நுண்மைக்கும், பேரருட்கும், பேற்றின் அருமைக்கும் ***ஒப்பின்மையான்"*** எனவும், ***"மேலொருவன் இல்லா-தான்*** எங்கள் இறை " எனவும், " சிறியவாகப் ***பெரியோன் "*** எனவும், " ***பெருமைக்கு*** அண்டம் அணுத்தர......தண்டாச் ***சீர்த்தி*** " எனவும் ஆன்றோர் கூறும் வாசகங்களும் இக் கருத்துக்குச் சான்றாம்.

***வினவல் ஆனாது உடையேன்*** —இவ்வாசகம், ஆசிரியர் தமது ஆசாரியரை ஒன்று வினவவேண்டும் என்ற கருத்தை எப்போதும் பெற்றிருந்ததைத் தெரிவிப்பதாகும். பாசம் பற்றிய ஐயந்திரிவுகள் அகல அகலப் பதியின் இலக்கணம் பதியுமாதலின் அவ்வையம் திரிவுகள் அகற்றற்கும் ஆசான் துணையை நாடவேண்டுமென இவ்விடம் நமக்குணர்த்துகின்றது. மாணாக்கராவார், தம் உள்ளத்தெழும் எல்லாவகை ஐயங்களையும் வினா முகமாக ஆசானைக் கேட்கக் கேட்கத்தான் தெளிவடைவர். முதலில், கேட்கலாமோ கூடாதோ என்ற அச்சம் தோன்றும். ஆனால் தெளி-வடைய வேண்டுமென்ற எண்ணம் மிகுதிப்பட மிகுதிப்பட அவ்வச்சம் அன்போடு கலந்து ஆசிரிய-னிடத்தே வினவச் செய்யும். வினாவினாலன்றி விடை வாராது. " தட்டு ; திறக்கப்படும் ; கேள் ; கொடுக்-கப்படும் " என்பார் மொழியும் இஃதுணர்த்துவதே.

" கடா இன்றி விடை நிகழாது" என்பர் கலைஞர். " வினா முந்துறாத உரையில்லை " என்பது பழமொழி. வழி தெரியாதவன் எதிரிட்டோரை வினாவிச் செல்லின் குறித்த இடம் தவறாதடைவன். இவ்வாறே ஞான மார்க்கத்திலும் செய்வது நெறி தவறாதபடிக்கு உதவும். மற்றும், சீடன் தன்னுடைய அநுபவ நிலை சரிவர அமைகின்றதா என உறுதிசெய்து கொள்ளுதற்கும் வினா நிகழும். " கேள்வி முறை " என்பது மந்தனையும் சிந்தனைக்குள்ளாக்கி அறி-வடைவிக்கும். இங்கு நம் நாயனார், எம்போல்வாருக்குச் சன்மார்க்கம் காட்டவேண்டிப் பற்பல வினாக்களைப் பிரதிநிதி நிலையிலிருந்துகொண்டு ஞானாசாரியரை வினாவலுற்றாராவர் என்பதே உண்மை. இனி எவ்வகை வினாவும் நம் உள்ளத்தே எழாவண்ணம் யாவகை வினாக்களையும் அகப்படுத்தித் தாமே கேட்கலுற்றாராவர் என்னலுமாம். இதுபற்றியே *" வினவல் ஆனாது உடையேன் "* என்று பயத்தோடு பொருந்திய பக்தி முறையில் விண்ணப்பிக்கலுற்றார் என்க. பிற்காலத்தும் இங்ஙனம் வினாவியறிவுறுத்தும் முறையினைப் பெரியோர் மேற்கொண்டுளர் என்பதை, " நம் கண்களிக்க நண்ணுமாயின் யாம் வினாயறிகுதும்" என்ற மேற்கோளினாலறியலாம். மற்றும், திருவதிகை —மனவாசகங் கடந்தார், உண்மை விளக்க நூலில் கூறியுள்ள "சுத்த வினா நீதான் கேட்டருள்" என்பதும் இந் நெறி உணர்த்துவதேயாம் இனி, நூலாசிரியர், தமது ஞானாசிரியரை வினாவிய வினாக்கள் ஒன்றன்பின் ஒன்றாக எழுகின்றன.

1. எனது உளம்நீங்கா நிலைமை ஊங்கும் உணர ஆல்; அறிவின்மை (எப்படி வந்தது?)

பதிப்பொருள் அநாதியே விட்டு நீங்காமல் ஆன்ம அறிவுக்குள் பொருந்தாமற் பொருந்தி நின்று அறிவிக்கின்றது. என்றாலும், ஆன்மா அதனை உணருகிறதில்லை. உயிரினாலே காரியப்பட்டு வருகின்ற பஞ்சேந்திரியங்களும். ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோம் என்று தெரிகின்றதில்லை. மற்றும், ஐம்பத்தோரக்கரங்கட்கும் அகரம் என்கிற அக்கரம் உயிராய் நின்றியக்குவதுபோலவே முழுமுதல்வனும் எல்லா ஆன்மாக்களிடத்திலும் அறிவுக்கறிவாய்ப் பொருந்தி நிற்கின்றான். சடம், சித்து எல்லாவற்றிலும் இங்ஙனம் கர்த்தா நிறைந்துநின்று அறிவித்தாலல்லது உயிர் அறியாது. இங்ஙனம் அறிவுக்கறிவாய், உயிர்க்குயிராய் முதல்வன் நிற்றல் அநாதியே உள்ள முறைமையாம். உடல் நிலைத்தற்கு உடலினிடத்தே உயிர் கலந்து நிற்கவேண்டியுள்ளது. இவ்வாறே உயிர் *நிலைத்தற்*கும் இறைவன் உயிரோடு கலந்து ***ஒன்றாய்*** இருக்கவேண்டியுள்ளான். கண்ணுக்குக் காணுந் தொழில் நிகழ்தற்பொருட்டுச் சூரியன் துணையாகவும் ***வேறாக***வும் நிற்கவேண்டியுள்ளது. இவ்வாறே உயிர்கட்கு ***அறிதல்*** தொழில் நிகழ்தற்கு இறைவன் துணையாகவும் வேறாகவும் உள்ளான். கண் ஒளி ஒரு பொருளைக் காண்பதற்கு ஆன்மபோதம் உடனிற்க வேண்டியுள்ளது. இங்ஙனமே உயிர்களின் ***அநுபவ***த்திற்கு இறைவன் **உடனாக**ச் செல்லவேண்டியுள்ளது. இவ்வாறு உயிர்களோடு பிரிப்பற நின்று அவற்றிற்கு வேண்டுவனவற்றைச் சங்கற்ப மாத்திரையால் இறைவன் புரிவன்.

இதனையே, "*எனது உளம் நீங்கா நிலைமை ஊங்கும் உளை* ஆல்" என்றார் ஆசிரியர். இவ்வாறு அத்துவிதமாக இருந்தும் உயிருக்கு அநாதியே அறியாமை எங்ஙனம் வந்தது? என்பதே இங்கு வினவப்படுகின்றது. ஒளியுள்ள இடத்தே இருள் இருத்தல் இயற்கையன்று. இறைவனே அறிவின் வண்ணத்தன். அறிவினைக் கொடுப்பவன்; அஞ்ஞானத்தைக் கெடுப்பவன். அவ்வாறிருக்க, ஆன்மாவிடம் அறியாமை வந்தவாறு யாதோ என்பது இவ்வினா.

## அறிவின்மை மலம் பிறிவின்மை எனின்—

அறிவில்லாமைக்குக் காரணம் ஆன்மாவிடம் ஆணவமலம் விட்டு நீங்காதிருத்தலே என்பது மேற்கூறிய வினவின் விடையாம். விளக்குள்ள இடத்தே இருட்டு இராததென்பது நியதியே. ஆயினும், விளக்கினிடத்தை ஒரு மறைப்புச்சூழ்ந்து கொண்டிருப்பின் ஆங்கு விளக்கிருப்பினும் இருட்டுச் சூழ்ந்தே நிற்கும். விளக்கு ஒளிதருவதில் குறைபடவில்லை. எனினும் அவ்வொளி மறைப்பால் தடைப்படுகின்றது. எனவே. மறைப்பகன்றால் இருள் நீங்கும் என்பது தெரியலாம். மேலும், கோட்டானுடைய கண்ணுக்குப் பார்க்கும் ஒளி உண்டு: ஆனாலும், சூரியன் பிரகாசிக்கிற வேளையில் அதற்குக் கண் தெரிவதில்லை. இதனால் கோட்டானுடைய கண்ணுக்குக் கண்ணின்கண் உள்ள குறைபாட்டினால் ஆதித்தப் பிரகாசமும் அந்தகாரமாகவே இருக்கும். இவ்வாறே சிவ ஞானத்தை ஆன்மாக்கள் ஆணவமல உண்மையால் காணாமல் உள்ளன என்னலாம். "ஆன்மா, அநாதியே பசுத்துவம் மறைத்துநிற்கும் நசித்திடா ஞானச்

செய்தி உடையனுகிப் பசுவென நிற்கும்" என்பது சித்தியார். ஆன்மா அநாதிபெத்த சித்துரு என்று அறியப்படும். மற்றும், உயிர் *தூல*மாய் வெளிப் பட்டு நிற்பது. முதல்வன் **சூக்கும**மாய் வெளிப்படா மல் உயிரின் அறிவுக்குள்ளாக நிற்பன். இதனுல் இறைவனைச் சூக்குமசித்து என்றும், ஆன்மாவைத் தூல சித்து என்றும் கூறுவர். விளக்கொளியும் கண் ஒளியும் ஒளிவகையில் ஒன்றே. என்றுலும் விளக்கொளி புற இருளால் மறைக்கப்படுவதில்லை. கண் ஒளி புற இருளால் மறைக்கப்படுகின்றது. இதனுல் கண் ஒளி தூல ஒளி எனப்படும் விளக்கொளி சூக்கும ஒளி எனப்படும். தூலமாயிருப்பது தன்னினும் தூலமா யிருப்பதையே அறியும்; தன்னின் சூக்குமமானதை அறியாது. ஆகவே ஆன்மா, மறைக்கப்படும் சித்தா- யிருத்தலால் அறிவின்மை உடையதெனப்பட லாயிற்று. எந்த நிலையிலும் உயிர்கட்கு அறியாமை யைச் செய்துகொண்டிருக்கும் உள்பொருள் ஆணவம். கேவலநிலையிலும் உயிரின் அறிவாதியவற்றை மறைப் பது மலம். சகலநிலையிலும் அறிவாதியவற்றை மேலோங்கவொட்டாது கீழ்ப்படுத்துவது மலத்தியல். ஆதலால் ***அறிவின்மை மலம் பிறிவின்மை*** என்று கூறப்பட்டது. சித்தியாரிலும் "***அறிவிலன்............ பிறிவிலன் மலத்திஞேடும்*** வியாபி" என்றுள்ளமை காணலாகும்.

### ஒராலினை உணர்த்தும்: —

அறிவின்மையால் ஆன்மா, தன்னறிவுக்குள் அறி- வாயிருக்கும் இறைவனை அறியமுடியாமல், இறை வனைத் தன்னின்நீங்கி வேருக இருப்பவனெனக்

கருதும். ஆனால் அங்ஙனம் கருதுதல் சரியன்று. உயிரானது கண் ஒளியின் வேறாக இல்லாமல், அதற்குள்ளாகவே நின்று பொருளை அறிதற்குத் துணைபுரிகின்றது. ஆனால், கண்ணொளி, அவ்வாறு தன்னுள் நின்று துணைபுரியும் உயிரினைக் காணமாட்டாது. வெளியே வேறாகநிற்கும் ஒளிதான், இங்ஙனம் தான் பொருளைக் காணுதற்குத் துணைபுரிகிறதென்று கருதுகிறது. இவ்வாறே உயிரும் முதல்வனை, நீக்கமாக ஒதுங்கிநிற்குமதென உணருகின்றதென்க. (ஓரால் = ஒருவுதல்; நீங்குதல்) உயிர், தன்னின் வேறாய பொருளை அறியும். தன்னோடு கலந்துள்ளபொருளை அறியாது. இதுகாறும் உரைத்த விதத்தால், இறைவன் ஒருவி நிற்பவனல்லன்; மருவிநிற்பவன்; அதாவது, உலகுயிர் முழுவதும் ஒழிவற நிரம்பி ஞான உருவாய் அழிவின்றி நிற்பவன் எனத் தெளிதல்வேண்டும். இது குறித்தே ஆசிரியர், "***விராய்நின்றனையேல் திப்பியம் அந்தோ!***" என்று கூறியுள்ளார். இங்ஙனம், மலத்தோடு கூடிய உயிருடன் கூடிநின்றும், மலம் தன்னைத் தகையாவண்ணம் முழுமுதல்வனிருப்பது திவ்வியத் தன்மையாகும்என ஆசிரியர் வியத்தலின் ***திப்பியம்*** என்றார். கதிர்முன் இருள்நிலையாது; மெய்ஞ்ஞானத்தின் முன் மலம் நிலவாது. பாசம் இறைவனைப் பற்றாமல் உயிரினைமட்டில் பற்றிநிற்றல் எதுபோல என்றால், கடலின் வெளியினை உப்புப்பற்றாமல் கடல் வெளியுள் நீரினைமட்டில் உப்புப் பற்றியிருத்தல் போலாம். கடல்போலப் பதி பூரண ***வியாபக***மாயும், நீர்போலப் பசு ஏகதேசவியாபகம் எனப்படும் ***வியாப்பிய***மாயும், உப்புப்போலப் பாசம் நீரளவில் வியாபகமான ***வியாத்தி***யாயும் நிற்றல் அறிதக்கதாகும். மற்

றும் நீரானது அனுதியே உப்பைப்பற்றி நிற்றலை ஆகாயத்தைத்தான்பற்றி நின்றும் பெற்றிருப்பதுபோல, உயிரானது பாசத்தை அனுதியே பற்றிநின்று அஞ்ஞான முற்றிருப்பதுபற்றி இரங்கி *அந்தோ !* என்றார் ஆசிரியர்.

## 2. பொய் பகை ஆகாய் --

ஒளி இருளுக்குப்பகை; இருளைப் போக்கும். மருத்துவன் நோய்க்குப் பகை; நோயைப் போக்கும். கருடன் பாம்புக்குப்பகை; விடத்தைப் பரிகரிக்கும். அறிவு அறியாமைக்குப் பகை; அறியாமையை அகற்றும். இவ்வாறே பாசத்துக்குப்பகை பரமன்: ஆதலால் பாசம், அவன் உயிருள் இருத்தலின் நீங்க வேண்டும். பூரண சைதன்னியமான பரமன் ஆன்மாவினுள் இருந்தும் ஆன்மாவுக்கு அறிவின்மை உள்ளதே; ஆதலால் முழுமுதல்வனை அறியாமையை விளைக்கும் பாசத்துக்குப் பகை என்று கூறுதல் பொருந்தவில்லையே என்பது இங்கு எழுப்பப்படும் ஐயமும் வினவுமாகும்.

இறைவன், உயிருக்குள்ள பாசத்தினை அகற்ற வேண்டுமென்ற கருணையே பெரிதுடையவன். இது பற்றியே அவன் உயிரறிவுள் அறிவாய்நின்று காட்டியும் கண்டும் உபகரிக்கிறன். தன் ஆணையால் செலுத்துகிறன். தத்துவங்களையெல்லாம் படைப்பிக்கிறன். வினைப்பயனை உயிருக்கு ஊட்டுகிறன். தனு கரண புவனபோகங்களால் உயிர்க்கு அறிவு விளக்கம் உண்டாகச்செய்கிறன். மற்றும் பற்பல சூழ்நிலைகளிலே வெளிப்படாமல் கலந்து நின்று உயிரை நன்னெறியிலே செலுத்துகிறன். பின்னர், சரியையாதி

மெய்த்தவவழியில் நடத்துகிருன். இருவினை ஒப்பு முதலிய பக்குவ விளைவில் சகலராகிய நமக்குக் குருமூர்த்தியாகவும் வெளிப்பட்டுக் காட்சியும், தீட்சையும், உபதேசமும் புரிந்து தன்னடிக்கே ஆளாக்கிக் கொள்ளுகிருன். இவ்வளவும் உயிரினை ஆசகற்றியுதவுதற் பொருட்டேயாகலால் ***பொய்ப்பகை*** என்றலே பொருத்தமென நாம் தெரிதல் வேண்டும். பாசம் பொய்ப்பொருளாகலால் ***பொய்*** எனப்பட்டது.

மற்றும், ***சுத்தன் அமலன் சோதி நாயகன் முத்தன் பரம்பரன் எனும் பெயர் முடியா*** என்றும் சீடன் வினவுவதாகக் கூறப்படுகின்றது. அசுத்தனுகிய ஆன்மாவோடு கூடியிருத்தலின் இறைவன் எங்ஙனம் சுத்தன் ஆவான் ? மலத்தோடு கூடிய ஆன்மாவுடனிருக்கும் இறைவனை அமலன் என்பது எப்படிப் பொருந்தும் ? அறிவின்மையும் சுதந்தரமின்மையும் கொண்ட உயிருடன் உள்ள உயிர்க்குயிராம் பொருளை எப்படிச் சோதிநாயகன் என்பது ? உடனிருந்து உயிர்களை வினைசெய்வித்துக் கொண்டிருப்பவனை முத்தன் என்றல் தகுமா ? இங்ஙனம் உயிர்போலவே உள்ளதொரு பொருளை எல்லாப்பொருளுக்கும் மேலான பரம்பரன் என்பானேன்? என்றெல்லாம் சந்தேகங்களை எழுப்பி ஆகமங்கள் இறைவனுக் குரைக்கும் பெயர்கள் பொருந்த வில்லையே எனக் கருதவைத்துத் தெளிவிக்கின்ருர் ஆசிரியர். பொதுவாகவே பற்றுந் தன்மை என்கிற குற்றமுடையது பசு. இறைவன் பற்றற்றவன். விருப்பு வெறுப்பே இன்ப துன்ப அவத்தைகட்குக் காரணம். இவை உயிருக்கே உண்டு. இறைவன்

வேண்டுதல் வேண்டாமை இலான். இறைவன் முற்றறிவினன். உயிர் சிற்றறிவுடையது. சூரியன், மலர்களை அலர்த்துகிறது. சேற்றினை வற்றச் செய்கிறது பனிக்கட்டியை உருக்குகிறது. அலருதல், வறளுதல் உருகுதலாதி செயல்களை அவ்வப்பொருள் கள் அடைகின்றனவேயன்றிச் சூரியனிடம் இம் மாறு-பாடுகள் ஏற்படா. மையினைக் கையால் தொட்டால் கையில் மை ஒட்டிக்கொள்ளுகிறது. கை அழுக் கடையும். உள்ளத்தால் தொடுவதாக நினைத்தலால் மனம் மாசாகாது. எனவே, கரணங்களால் செய்-பவரைத் தொழிற்பயன் பற்றும். சங்கற்பத்தாற் செய்-பவரைப்பற்றாது. இறைவன் சங்கற்பத்தால்செய்பவன். இவ்வாறெல்லாம், இறைவற்கும் உயிர்க்கும் வேறுபா டிருத்தலால், இறைவற்குக் கூறப்பட்ட *சுத்தன்* முதலன பொருத்தமுடைய பெயர்களேயாமெனத் தெரிதல் நேரிதாகும். சுத்தம் முதலிய தன்மைகள் இறைவன்பால் இருத்தலால், நாம் மலமகன்று அறிவடைந்து பிறப்பு நீங்கிப் பேரின்படைதல் முடிகின்றது; அவ்வாறின்றேல், குருடன் குருடற்கு வழிகாட்டியதாய் முடியுமன்றே! மேலும், சம வியாபகமே உடைய பாசம் சர்வ வியாபகமுடைய இறைவனைப் பற்றுமாறில்லை என்பதும் கருதப்படல் வேண்டும். மேலும்,

முதல்வனுக்கு எண்குணன் என்பது ஒரு பெயர். இவ்வெட்டும் சிறப்புக் குணங்களாம். இவற்றைச் *சுத்தன்* முதலிய பெயர்கள் குறிப்பனவாம். தூய உடம்பே *சித்து* எனப்படும். அதனைச் சுத்தன் என்னும் பெயர் உணர்த்துவதாம். இயல்பாகவே பாசங்களின் நீங்குதலை அமலன் என்ற சொல்லால்

அறியலாம். அநாதியே மலத்தின் நீங்குதல் முதல்வன் வினை எனவும் கூறப்படும். குணம் வினையை உடைய தாதலால் இவ்வாறு கூறுவர். அக்கினியின் குணம் சூடு: சூட்டின் தொழில் சுடுதல் ஆதலால் அக்கினிக்கு அநாதியே உள்ள வினை சுடுதலாகும். தன் வயத்தனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்று முணர்தல் ஆகியவற்றைச் சோதிநாயகன் என்னும் பெயர் குறிக்கும். வரம்பிலின்பம் முத்தன் என்பதனுள் அடங்கும். பேரருளுடைமையும், வரம்பில் ஆற்ற லுடைமையும் பரம்பரன் என்ற பெயரால் குறிக்கப் படும். இனிச் சோதி என்ற பெயரைத் தனிப்பெய- ராக்கிச் சுத்தன் முதலனவற்றை ஆறு குணங்களாக்கி யுரைத்தலும் ஒன்றும். பகவன் என்னும் சொல் ஆறு குணங்களுடையவன் என்று பொருள்படுவதைத் திருக்குறளில் அறியலாகும். உயிர் அநாதியே மலம் பற்றியது. சுதந்தரமில்லாதது. தூயவுடம்பில்லாதது. இயற்கையுணர்வும் முற்றுணர்வும் இல்லாதது. பேரரு- ளில்லாதது. முடிவிலாற்றலற்றது. வரம்பிலின்ப- மில்லாதது. இக்குணக் குறைகளுடைய உயிர் ***மல சம்பந்தி*** எனப்படும். இறைவன் இக்குறையிலா னாதலால் மலரகிதன் எனப்படுவன். இவ்வாறு மல சம்பந்தியுடன் மலரகிதன் ஒன்றியிருப்பினும் இறைவ னானவன் தோய்விலன்: உணர்வின் மூர்த்தியே ஆவன் என்பதை இங்கு நாமறிதல்வேண்டும். சாம்ப- ருட்பட்ட கழற்சிக்காய் இங்கு உவமையாகக் கூறப்படும்.

### 3 வேறு நின்றுணர்த்தின் —

இறைவன் உயிரோடு கூடி நிற்பதில்லை; உயிரறிவுக்கு அறிவாக வேறே நின்றே உயிரை

அறிவித்து நிற்பன். இந்திரியங்கள் தமக்கென ஒரு காரணமுமின்றி உயிரின் பொருட்டு அறியும். முதல்வன் உயிருக்குத் துணையாகி நிற்பினும், உயிரானது தான் செய்த வினைக்கு ஏற்ப, ஒன்றினைத் தன்பொருட்டே அறிந்து நிற்கும். அதாவது முதல்வன் பொருட்டாக உயிர் அறிவதில்லை, அசத்-தெல்லாம் மாயையின் காரியமாம். அவை சிவ சந்நிதியில் (சத்தி சங்கற்பத்தில்) முனைத்துத் தோன்று. ஏனெனில் பக்குவப் படவேண்டிய ஆணவ மலம் இறைவற்கில்லை. நூலில் விதிக்கப்படும் எல்லா நல் ஒழுக்கங்களையும் இயற்கையாகவே உடைய ஒருவனுக்கு நூல் தேவையில்லை. இவ்வாறே ஆணவ மலமின்மையுடைய இறைவற்கு அசத்துத் தோன்றாது. ஆதலால் இறைவன் எவற்றையும் வேருய் நின்றும் உணர்த்தும். "மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது" என்னும் சிவஞானபோத வெண்பா வுரைகொண்டு இச் செய்தி துணியப்படுதல் கூடும். 'மாயை மருவிடான் சிவனவன்கண் உறைதரா தசேதனத்தால்" என்பது சிவஞான சித்தியார். 'உன்னுடைய உதரத்தில் கிடந்த கீடம் உறுவ தெல்லாம் நீ பொருந்தாதவாறு போலவே, உயிர்கள் பொருந்துவதெல்லாம் செவ்வகையே நின்ற சிவன் பொருந்தான்" என்று திருக்களிற்றுப்படியார் நூல் சொல்லுகிறது. மேலும் இறைவன் உயிர்களுக்கு நிலைத்தல், அறிதல், செல்லுதல் என்ற மூன்றுவிதமாய் உபகரிக்க வேண்டியுள்ளான். அவற்றுள் உயிரும் உடம்பும்போல் ஒன்ருய் இறைவன்நிற்றலால் உயிர்க்கு நிலைத்தல் நிகழ்கிறது. ***கண்ணும் அருக்கனும்போல் வேருய் நிற்றலால்*** உயிர்கட்கு ***அறிதல்*** நிகழ்கிறது.

கண்ணொளியும் ஆன்மபோதமும்போல் உடனாய் நிற்றலால் உயிர்கட்கு அறிந்தவற்றில் செல்லுதல் நிகழ்கிறது. இதனால் இறைவன் உயிர்களோடு கலந்து நிற்பினும் பொருளின் தன்மையால் வேறுமாய் நிற்பவன் என்பது கருதப்படும் ஆனால், பேதம் (வேறாய் நிற்றல்) ஒன்றே கொள்ளுதல் தவறாம். இவ்வாறு கொள்ளின் அறிவித்தற்கு மட்டுமே இறைவன் உதவி தேவை எனப்பட்டு மற்றிரண்டு தொழிற்கும் உயிர்களே சுதந்தரமுடையன என்றாகி இறைவனின் வியாபகத்துக்கு இழுக்குத் தரும். இதனை மேல்வரும் வரிகள் உணர்த்துகின்றன.

**வியாபகம் இன்றாய் பேறும் இன்றாம் எமக்கு எம்பெரும!**

மேற்கூறிய விதமாய் இறைவன் வேறாக நின்று உணர்த்துமானால் அறிவித்தல் தொழிலுக்கு மட்டில் இறைவன் துணைநிற்பவனாவன் மற்றுமுள்ள நிலைத்தலும், செல்லுதலுமாகிய இரு தொழில்கட்கும் உயிர்களே சுதந்தரமுடையன எனக் கருத நேரும். அப்படிக் கருத நேரிடின் இறைவனுடைய வியாபகத்துக்குக் குறைபாடுள்ளதென ஏற்படும். இதனால் ***சர்வவியாபி*** என்ற பெயர் இறைவற்கு இல்லையாய்விடும் ஆகவே, உயிர்கள் மற்றிரு தொழிற்கும் துணையின்மையால் சாயுச்சியப் பேறு அடைய முடியாமல் கெடும். இவ்வாறு இருதிறக் குறைபாடுகட்கும் இடமாகுமே என இவ்வரிகளால் ஆசிரியர் நமக்குணர்த்தி, இறைவனின் வியாபகத்தின் இயல்பையும், அதனால் நமக்குப் பேறு உண்மையையும் தெளிவிக்கின்றார் என்னலாம். இறைவன், உயிர்களுடன் அத்துவிதமாயிருப்பவன். சிவனும் சீவனும் பொருள் தன்மையால் இரண்டே ; ஆயினும் பிரிக்க

முடியாத ஒன்றே. இதனை விளக்குதற்குப் பதின்மூன்று உவமைகள் காட்டுவர். இவற்றால் வியாபகம் உணரப்படும். இவ்வாறு இறைவன் உபகரிக்காவிடில் உயிர்கள் நற்கதியடைதல் ஒருபோதும் இயலாது. இங்கு இறைவனின் வியாபக நிலைப் பெருமையினை உணர்த்தவே **எம்பெரும** என்றார். பேரின்பம் உயிர்க்கேயாதலால் **எமக்கு** என்கின்றார். பால், தன் சுவை முழுதும் தன்னோடு கலந்த நீருக்கு ஆக்கி நீரைத் தன்னுள் அடங்கி நிற்கச் செய்கிறது இவ்வாறே முதல்வனும் தன் இன்பமுழுதும் உயிர்க் காக்கித் தன்னுள் அடங்கி நிற்கச்செய்வன். இதனால் இன்பப் பேற்றுக்கு இறைதுணை எவ்வாறு வேண்டப் படுவதென உணரலாகும். "எங்கும் எவையும் எரியுறு நீர்போல் ஏகம் தங்குமவன் தானே தனி" என்னும் திருவருட் பயனுரையால் வியாபக நிலை தெளியப்படும். மற்றும் இறைவனின் வியாபக உபகாரங்கட்கு ஆன்றோருரையினை மேற்கோளாகவும் ஆசிரியர் காட்டுவதை அடுத்த வரி உணர்த்தும்.

**இருநிலம் தீ நீர் இயமானன் கால் எனும்**
**பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இல் ஆதலின் —**

இறைவனலன்றி உயிர்கட்கு நற்பேறில்லை. எனவே உயிர்கட்கு நற்பேறு விளைப்பதே இறைவற் குரிய கிருத்தியம் ஆயிற்று. இறைவனுடைய இயக்- கம் இல்லாமல் எவையும் இயங்கமாட்டா. "அவ னன்றி ஓரணுவும் அசையாது" என்பது முதுமொழி. ஆற்றலின்றித் தொழில் நிகழாது ஆற்றலை வெளிப் படுத்துவது அசைவு. இவ்வசைவே முதன்மையான தொழில். இயந்திரம் இயக்குவோன் இயக்காவிடின்

இயந்திரம் இயங்காது நின்றநிலையின் புடைபெயர்வே *அசைவு* எனப்படும். இவ்வசைவினை **ஆடல்** எனவும் நடனம் எனவும் கூறுவர். உயிர்கள் சூத்திரப்பாவை நிகர்ப்பன. இறைவன் சூத்திரதாரி. இறைவனின் அசைவுநிலை அல்லது ஆடல் நிலையால்தான் உலகு-யிர்கள் இயங்குகின்றன என்ற உண்மையையே சிற்றம்பல ஆடரங்கில் கூத்தப்பெருமான் கோலம் காட்டுகின்றது. உடலைக்கொடுத்தும் காத்தும் கெடுத்தும் உயிர்களைத் திரோதித்து நடத்தியும் உண்-மையுணர்வித்துப் பின் அருள்புரிதலே இறையசை வின் பயன். இதனைப் ***பஞ்ச கிருத்தியம்*** என்பர். பஞ்சபூதங்களுள்ளும் கலந்து அவைகளுள் கூட்-டுறவை உண்டாக்குகின்றான். இவற்றின் முறையான கூட்டுறவால் பூமியினிடம் ஓஷதிகள் உண்டாகி அன்னம் ஏற்படுகிறது. இதிலிருந்தே பிந்து விளைந்து மாமிச சரீரம் ஏற்படுகிறது இச்சரீரத் துள்ளே ஜீவன் தங்கிச் செயற்படுகின்றது. இந்தச் செயல் யான், எனது என்னும் பற்றுக்களாகிப் பிறப்பு இறப்பு முதலியவற்றை ஆக்குகின்றன. இவற்றில் உவர்ப்புத் தோன்றும்படி உயிர்க்குயிராய் இருந்து நடத்துகிறான் முதல்வன். "வானாகி மண்ணாகி" என்னும் திருவாசகப்பாடல் இஃதுணர்த்தும். இங்ஙனம் இறைவன் தன் அசைவற்றநிலையிலே ஓரசைவுகொண்டு நிற்றலை ***நின்ற திருத்தாண்டகத்***-திலே நம் வாகீசப்பெருமான் விளக்கமாகச் சொல்லி யருளியுள்ளார். அதன்கண் உள்ள முதற் பாடல் "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி — அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகா-சமாயட்ட மூர்த்தியாகி ......... நிமிர்புன் சடை

யடிகள் நின்றவாறே" என்பதாகும். இந்தச்செய்தி திருநாவுக்கரசு சுவாமிகளால் திருக்கூத்து அனுபவித்துச் சொல்லப்பட்டதாகும். இதனில் இறைவனுடைய பூரண நிலையாகிய நடனம் கூறப்படுகின்றது. இறைவனே இத் தமிழ்மறைப் பாட்டுகளை இன்னோர்-தம்மைக்கொண்டு பாடியருளினாரென்பதே மரபு ஆதலால் இவ்வாக்குகள் வேதமேயாகிய பிரமாண வாசகங்கள் ஆகும். இவை ஒருபோதும் பொய்த்தல் இல. இதனாலேயே, பெருமானுடைய சர்வ வியாபகத்துக்கு ஒரு மேற்கோளாக இத்திருப்பாடலைக் காட்டலுற்றார் ஆசிரியர். வேதாகமங்கட்கு ஈடாகவே நாயனார் வாசகத்தை நம் ஸ்ரீ அருணந்தி தேவர் எடுத்-தாள்வதிலிருந்து தமிழ்மொழியிடத்தும், தேவார ஆசிரியர்களிடத்தும், அவர்தம் திருப்பாடல்களிடத்-தும் இவர் எத்துணைப் பெருமதிப்புடையவரெனவும் நாம் அறியலாம். இவற்றால் நாம் இறைவனுடைய பூரணநிலை எனப்படும் வியாபகத்தை மறுத்தற்கில்லையா வோம். எங்குநிறைகின்ற பொருள் என்னும் தலைப்-பிலே தாயுமானார் பாடியுள்ள "அவனன்றி ஓரணுவும் அசையாது" எனும் பாடலையும் நாம் ஈண்டைக்கு அறிதல் தக்கது. பாண்டியனடித்த அடி சராசரமனைத்-தும் பட்டது. அருச்சுனனடித்த அடி எங்கும் பட்டதைப் பாரதம் பறைசாற்றும். இத் தெய்வ ஆனந்தத் திருக்கூத்தியல்பினையே, "தத்துவமாடச் சதாசிவம் தானாடச் – சித்தமுமாடச் சிவசத்திதானாட – வைத்த சராசரமாட மறையாட – அத்தனுமாடினான் ஆனந்தக் கூத்தே" என்பது ***திருமந்திரம்***. "நீயே உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய்" என்பது ***சித்தியார்***. "எங்கெங்கும் தாமே இருந்து சடசித்

தனைத்தும் அங்கங்கியற்றுவதனுல் ஆர் பெரியர் " என்ற பாடலும் இக் கருத்ததே. ஆதலால், இறைவன் அறி-விக்குமிடத்து வேருயிருந்தோ உடனுயிருந்தோ அறிவிக்கின்ருன் என்பதை விளக்கக்கருதி மேலுள்ள அடிகளால் ஆசிரியர் வினவுகின்ருர்.

## வேருே உடனே விளம்பல் வேண்டும் –

அடியேனுக்குத் தேவரீர் அறிவிக்குமிடத்து வேருய் நின்று அறிவிக்குமோ? கூடிஒன்ருய் நின்று அறிவிக்குமோ? இவை இரண்டினுள் ஒன்றைத் தீர அருளிச்செய்யும் என்று ஆசிரியர் கேட்கின்ருர். இதனுல் சிவம் ஒன்ருயும் வேருயும் உடனுயும் நின்று உயிர்களை நிலைக்கச்செய்து அறிவித்து அனுபவிக்கச் செய்வது என நாம் தெரிதல்வேண்டும். சித்தின் பேதமாகிய சீவன், சிவனுகிய சித்தன்றிச் சிவனை யின்றித் தனித்து நில்லாது. பரிதிமதிபோலப் பொரு ளால்வேறு காணப்படும். திலதயிலம்போலப் பிரித் தறிய வாராது. இவ்வுண்மைகளை நாம் இங்குத்தெளி-தல் தக்கதாம்.

இங்ஙனமெல்லாம் ஆசாரியனைக் கேட்டல் குறித்து அவர் திருவுளம் முனிதல்கூடும். அங்ஙனம் முனி வடைய வேண்டுவதில்லை என்பதற்குத் தம்மிடம் உள்ள தற்போதச் சிறுமையையே காரணமாகக் காட்டுகின்ருர் ஆசிரியர். இதனைச், ***சீறி அருளல்; சிறுமை உடைத்தால்*** என்ற வரி தெரிவிக்கும். சீவ-னிடத்துள்ள தற்போதமே செருக்கு எனப்படும். இதனை முனைப்பு எனவும் கூறுவர். இந்த முனைப்பு அறவேண்டும். அறுமளவும் ஜீவன் சிவனை மதியாது; பலவாறு குதர்க்கம் சொல்லும் தன்னை மோராக்கித்

தந்த நீரினை மேலே தெளிவால் நிற்கச்செய்து மோர் அடியில் அடங்கிவிடுவது போல நம் போதத்தைத் தொழிற்படவுதவிய இறையறிவை மேலோங்கவிட்டு அடங்கவேண்டும். தற்போத ஒழிவே அறிவுடை-மைக்கு அழகு. ஆன்றவிந்து *அடங்கிய* கேள்விச் சான்ருேர் " என்பது சங்க நூல்வரி. பாகன் வழி யானை ஒழுகுவதே மதமாவுக்குச் சிறப்பாம். இங்ஙனமெல்லாம் தம்முடைய சிறுமையை ஆசிரியன்பால் விண்-ணப்பித்தொழித்தல் ஒருமுறைமையாகலின் நம் ஆசிரியரும் நம்பொருட்டு இங்ஙனம் கூறியருளினராவர் என்க.

*அறியாது கூறினே ; அபக்குவ பக்குவக் குறி பார்த்தருளினம் குருமுதலாய்* எனின் — இவ்வரி, தமதாசாரியர் அருளிச்செய்ததுபோலக் கூறப்பட்டது. *சீறி அருளல்* என்று தாம் தம் சிறுமை குறித்துக் கூறினுராதலால் அறியாது கூறினே என ஆசிரியர் கூறியதாகச் சொல்லலுற்ருர் நம்மிடம் உள்ள அறிவுக் குறைபாடுதான் பிறர் நம்மைக் கோபிப்பதாக நினைக்கச் செய்கிறது. பிறர் நமக்குரைக்கும் இதமொழி நமது அறியாமையால் நமக்கு அகிதமொழியாகப்படும். இது நம் அறிவிலுள்ள பக்குவக் குறைவை உணர்த்தும். அறிஞர் உரைக்கும் அமுதச் சொல் நம் நெஞ்சுக்கு நஞ்சாகப் படுமாயின் அது நமது பக்குவமின்மைக்கு அறிகுறியாதம். " செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன் " என்பது குறள். இங்குப் *பண்பு* என்பது அறிவின் பக்குவம் உணர்த்தி நின்றது. இவ்வறிவுக் குறைபாடே இங்கு *அறியாது* கூறினே என்பதால் தெரிவிக்கப்படுவது. " பிறப்போரன்ன உடன் வயிற்றுள்ளும் *சிறப்பின்*பாலால் தாயும் மனம் திரியும் " என்ற புறப்பாட்டால் அறிவின்மை பற்றி

இகழ்தல் தாய்க்கும் முறைமையாம் என்பது தெரியலாம். அதே தாய், "சான்றோன் எனக் கேட்டபின்......பெரிதுவக்கும்". இங்ஙனம் உவத்தலும், மனந் திரிதலும் தாயின்பாலும் நிகழ்தல் காணலாம். இவ்வாறே பக்குவ சீவனிடம் ஆசிரியன் உவகை காட்டி அருளும். அபக்குவ சீவனிடம் மனத்திரிவு காட்டிப் பக்குவப்படுத்தும். ஆசாரியனுக்கு இது முறைமையாம். குருவின் உபதேசத்தை மாறுபடக் கொள்ளலே பாபத்துக்கிடனும். அறிவாக் கொண்டொழுகல் பக்குவத்துக்குப் பயனும். இதனால் குருவினிடம் எவ்வித மாறுபாடுமில்லை என்பது தெளியப்படும். "அப்பென்றும் வெண்மைய-தாயினும் ஆங்கந் நிலத்தியல்பாய்த்—தப்பின்றியே குணவேற்றுமைதான் பல சார்தலினால்—*செப்பில் அபக்குவம் பக்குவமாயுள்ள சீவரிலும்—இப்படியே நிற்பன்* எந்தை பிரான் கச்சி ஏகம்பனே" என்பது பட்டினத்தார் பாடல். சரியை முதலிய மூன்றும் முடித்து இருவினை ஒப்பு ஆதிய பெறுதல் பக்குவம் எனப்படும். இவை இன்மை அபக்குவமாம். பக்குவர்க்குக் குருவாகி வெளிவந்து இதம்புரியும். அபக்குவரை உள்நின்று செலுத்தி அநுபவத்தாலுவர்ப்பூட்டிப் பக்குவம் புரியும். இஃது இறை செயல் உள்நின்று உதவிபுரிதலையே *குருமுதல் ஆய்* என்பதிலுள்ள *முதல்* என்ற சொல் தெரிவிக்கும். குரு ஆய் நிற்பது பக்குவர்க்கு ஆம். இவற்றையே *குறிபார்த்து அருளினம்* என்ற இடம் உணர்த்துவது. எதுவும் இறைவன் அருட்செயலேயன்றி வேறில்லை. "மறத்திற்கும் அஃதே (அன்பே) துணை" என்ற குறளடியில் இக் கருத்துறைதலைக் காணலாம்.

இதுகாறும் கூறியவாற்றால் இறைவன் நமது பக்குவ அபக்குவ நிலைக்கேற்ப எப்போதும் அருள் செய்து-கொண்டேயிருப்பதை நாமுணர்ந்து பக்குவமெய்தும் வழியை ஞான நூல்களாலறிந்து ஒழுகி நின்று குரு திருவருளுக்கு இலக்காக வேண்டுமென்பது துணி-வாம். இனிமேல் அபக்குவ பக்குவநிலைபற்றிய ஐயம் கேட்கப்படும்

## 4. அபக்குவம் அருளினும் அறியேன்; மிகத்தரும் பக்குவம் வேண்டில் பயன் இலை நின்றால் —

சீவன் அபக்குவனாயிருப்பின் குரு அருள்புரியும் பொருள்களை அறியாது இதனால் குரு அருளிச் செய்தும் பயனில்லை. சத்தி நிபாதபக்குவம் சீவனுக்-கிருப்பின் குருவருளும் அர்த்தங்கள் விளங்குமென்றால், பக்குவமுடையவனுக்கு ஒருவர் அறிவிக்கவேண்டுவ தில்லை. கல்லுக்குச் சோறுகும் பக்குவம் கூடாது, சோற்றுக்குப் பக்குவம் தேவையில்லை. கல்லுக்கும் சோற்றுக்கும் நெருப்பின் துணை தேவையில்லை. இவ்-வாறே இறைதுணை சீவர்க்குத் தேவையில்லையன்றோ? என்பது வினவாகும். இதனால், இறைவனால் ஒரு போதும் பயனில்லை என்றேற்படும். இந்த ஐயத்தைக் களைவதே வரும்வரிகளின் நோக்காம்.

## பக்குவம் அதனால் பயன் நீவரினே நின்னைப்பருவம் நிகழ்த்தாது—

ஆன்மாக்கள் அறவழியொழுகிச் சிவ புண்ணியஞ் செய்து இருவினை ஒப்பு எய்தின் மலம் பக்குவமாகும். அந்தப்பக்குவப் பயனைக் கடவுள் குருவாக எழுந் தருளும். இப்படிச்சொன்னால், பக்குவமே, இறை

வனைக் குருவடிவாக்கி எழுந்தருளச் செய்யும் என்று ஏற்படுகிறது. இதனால், இறைவனினும் பக்குவமே முக்கியமுடையதாம் எனவும், பக்குவமே இறைவனை இயக்குகிறது என்றும் ஏற்படுமல்லவா ? இதுசரியன்று. ஏனெனில், பக்குவம் என்பது சடம். இறைவன் ***சித்து***. சடம் சித்தினை நடத்தாது. உடம்பு உயிரை ஒருபோதும் நடத்தாது. உயிர்தான் உடம்பை நடத்துவது. உடம்பு சடம்; உயிர்சித்து. இதுவே கண்கண்டது. இதனால், இறைவனே பக்கு-வத்தை விளைப்பவன் என்பது உண்மையாம். மேலும், பக்குவமே இறைவனை எழுந்தருளச் செய்கிறதென்றால், சிவாகமங்கள் கடவுளை ஒப்புயர்வற்றவன் என்று கூறுதல் வழக்கன்றாகும். மலபக்குவம் கூறவந்த கடவுள் வாக்காகிய ஆகம வாசகம் ஒருபோதும் பொய்யாகாது. இவையெல்லாம், " ***அன்றே ! தன்-ஒப்பார் இலி என்பதும் தகுமே !*** என்று ஆசிரியர் கூறுமடிகளால் அறியலாம். இதனால், எல்லா உயிர்களும் பக்குவமடைந்தே தீரவேண்டும் என்பதும், அந்தப் பக்குவம் படிப்படியாக இறைவனாலேயே ஏற்படுகிறது என்பதும் தெளியப்படும். இனிமேல், பக்குவத்தின் அவசியமும், பக்குவம் யாருக்கு வேண்டுமென்பதும், பக்குவமாவது யாது என்பதும், பக்குவப் பயனும் ஐயங்களையும் வினா முறையால் பேசப்படுகின்றன. எவ்வகையாலும் இறைவனுடைய தலைமையே உணரப்பட வேண்டுமென்பது கருத்தாம்.

***மலம், உயிர், இறை*** என்னும் முப்பொருள்களில் பக்குவம் என்பது எதற்கு வேண்டுமென்பது ஆராயப்படுகிறது. ***மும்மலம் சடம் ; அணு மூப்பு இளமை இல் ; நீ நின்மலன் ; பருவம் நிகழ்த்தியது***

***யார்க்கோ ?*** — காய் முற்றிப் பக்குவப்பட்டால்தான் —பழுத்தால்தான்—சுவை (இன்பு) பெறும். "காய் முற்றின் தின் தீங்கனியாம்" என்பது நன்னெறி. முற்றுதல் என்னும் பக்குவம் சுவையின்பத்துக்குத் தேவை என்பது உண்மை. இவ்வாறே ஞானப் பேற்றினுக்கு—இன்பப் பேற்றினுக்கு—இன்றியமையாதது பக்குவம் என்க. உயிரின் பக்குவமின்மையைக் குறிப்பது அதன் மலம். அதாவது ஆணவம், மாயை, கன்மம் என்பன. இவை பக்குவமடைய வேண்டுமா என்ருல் இவை சடப்பொருளாதலால் பக்குவ மடைதல் வேண்டுவதில்லை. ***மண்—காய்—வெப்பம்*** என்ற மூன்றனுள் மண் பழமாகாது. பழமாம் தன்மை மண்ணுக்கு வேண்டுவதில்லை. இவ்வாறே மலத்துக்குப் பக்குவம் தேவையில்லை என்பது காணலாம். இவற்றிற்குத் தம்முடைய சடத்தன்மையி னின்று மாறுபடும் இயல்பு எப்படிப் பக்குவப் படுத்தினும் உண்டாகாது. மண்ணை] வெப்பப்படுத்து வதால் அது பழமாகாதென்பது கண்கூடாம். இதனுல் மலம் ஞானத்தை அறியாதென்பது தெளியப்படும்.

இனி, ஆன்மாக்கள் பக்குவமடைய வேண்டு மென்ருல், ஆன்மாக்கள் சார்ந்ததன் வண்ணத்தன; ஆன்மாக்களைச் சார்ந்த உடம்பே மூப்பு இளமை எய்துகின்றது. ஆன்மா அச்சுமாறுகின்றதேயன்றி அதற்கு மாற்றமில்லை. மூப்பும்' இளமையும் ஆன்மாவுக்கில்லை. தம்மளவில் மாறுதலில்லாத பொருளைப் பக்குவம் ஒன்றும் செய்யாது. காயைக் குளிர்ச்சிப் பதத்தில் வைப்பின் அப்படியே கிடக்கும். அன்றி மண்ணிலே கிடத்தின் அழுகிக் கெடும். இதனுல் காய்க்குப் பக்குவமாம் இயல்பில்லை என்பது

காணலாம். ஆன்மாவுக்கு வளர்ச்சி தளர்ச்சி இல்லை. ஆகையால் மாற்றமில்லை. ஆகவே பக்குவம் ஆன்மாவை ஒன்றும் செய்யமாட்டாது.

பெருமாற்கோ தேக சம்பந்தமில்லை. அவன் அமலனுயுள்ளவன். பாசமே இல்லாதவன். முழு ஞானமுள்ளவன். அவனது ஞானம் ஒரே படித்-தாவது. பக்குவம் இவனது ஞானத்தை அதிகப் படுத்தாது. கண் நன்ருய்த் தெரிபவனுக்குக் கண்ணுடி தேவையில்லை. வெப்பம் பழுக்காது. ஆதலால், பக்குவம் என்பது யாருக்கு வேண்டுவது என்பது வினு என்ருலும் காய்தான் மண்ணின் உணவால் முதிர்ந்து வெப்பத்துதவியால் பழமாகிறது. பழமான பின், தனக்கு அதுகாறும் ஆதாரமாயிருந்த—தன் பிறப்பிடமான—மரத்தை விட்டுவிடுகிறது. இவ்வாறே மாயை கன்மங்களின் வழிநின்று இறையருளால் ஆணவ நீக்கமடைகின்றது ஆன்மா. இந்த இறை-யருளே ஞானேபதேசமாம். இதனுல் ஆன்மாவின் இயல்பு தெரியப்படும். இனிப் பக்குவம் என்பது யாது என்பதுபற்றிப் பேசப்படும்.

**உணர்வு எழும் நீக்கத்தை ஓதியது—**

ஆன்மாவுக்குத் தூய்மை எனப்படுவது அறிவி-னிடத்து ஏற்படுவதாகும். அஃது அறிவுக்குள் அறிவாய் விளங்கும் பரம்பொருளின் திருவருளால், ஆன்மாவின் பக்குவத்திற்கேற்பத் தரப்படுவதாகும். "புணரும் இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால் உள் நிலவும் ஒளியதனுல் இருளகற்றிப் பாதமுற்றிடும்" என்ற இடம் இதனைக் கூறுவதாகும். இங்ஙனம் அருளொளி விளக்கம் உண்டாம் நிலையே

மலங்கள் நீங்கும் அவதரம் எனப்படும். இதனல் புண்ணிய பாவம் துலை ஒப்பு உண்டாம். இதுவே **பக்குவம்** எனப்படும். இவ்வாறு பக்குவமே நீக்கு மென்றல் இறைவனுக்குப் பெருமை ஏதென்னும் ஐயத்தைக் காட்டுதற்பொருட்டு ***இணை இலி ஆயினை என்பதை அறியேன்*** என்றர். அப்படியாயின் சிவ பிரான் உதவிதான் யாதென்னும் செய்தியை ஐயமுகத்தால் வினவி அகற்றலுறுகின்றர் ஆசிரியர்.

**யானே நீக்கினும் தானே நீங்கினும் கோனே வேண்டா —**

ஆன்ம அறிவுள் எழும் உணர்வால் மலம் நீங்கும் எனக் கொள்ளின் ஞானேதயமே ஆணவத்தை நீக்குமெனப்படும். அதன்முன்னர் ஆன்மாவுக்கு அந்த நீக்கம் இராது. ஆணவ நீக்கம் ஞானத்தை எதிர்பாராததாயின் மலம் தானகவே நீங்குவதாக ஏற்படும். அல்லது ஆன்மாவே அதனை நீக்கும் எனல் வேண்டும். இவ்விரண்டில் எவ்வாறு மல நீக்கம் நிகழினும் சிவத்தின் துணை தேவையில்லை எனப்படும். மலத்தைப் பரிகரித்துக்கொள்ளும் தன்மை ஆன்மா வுக் குள்ளதாயின் சிவபிரானுடைய நிகரின்மைக்கு இழுக்கு நேரும். ஆதலால், பக்குவ விளைவின் ஏது யாதென்பது வினவாகும். இதனைத் தெளிவிக்குமாறு கேட்கின்றர் ஆசிரியர். இதனைக் ***"கூறல் வேண்டும்"*** என்பது காட்டும்.

சூரியன் எழாமல் ஒளி தோன்றது ; ஒளி தோன் றமல் இருள் விலகாது. எனவே இருள் நீக்கம் ஒளி யுதயத்தால் ஏற்படுவதுபோலக் காணப்படினும் சூரிய னுதயமே மூல காரணமாகும். கதிரோனெளியும் கண்ணெளியும் கலப்பதாலே இருள் நீங்கிப் பொருள்

தெரிகிறது. இதனால் கண்ணொளியைத் தூண்டிக் காட்டுவது கதிரோனொளி எனக் காணலாம். ஆகவே, கதிரோனொளி காட்டக் கண்ணொளியால் ஆன்மாக் காண்கிறது புலப்படும். இதனை ஆசிரியர்மூலம் தாம் அறிந்தடங்கிய நிலையைக் *"காண்பார் யார்கொல் காட்டாக்கால் எனும் மாண்பு உரை உணர்ந்திலை"* என்ற வரியால் ஆசிரியர் கூறுகின்றாராவர். "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" என்னும் "ஆட்டுவித்தால்" திருத்தாண்டகத்தின் உரையை ஆசிரியர் ஈண்டு மேற்கோளாக எடுத்தாண்டு நம்மைத் தெருட்டுகின்றார் எனலாம். "அம்மானே நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே" என்ற இடமும் இக்கருத்தை வலியுறுத்தும். இவற்றால் காணுமுபகாரமும் காட்டுமுபகாரமும் இரண்டும் இறைசெயல் என்பது தெரியப்படவேண்டும். இது பற்றியே *"மன்ற"* என்ற தேற்றக் கிளவியைத் தருதலுற்றார். இதுவே ஞான உபதேசத்துக்கு ஆசாரியன் அவசியம் வேண்டும் என்பதை நமக் குணர்த்துவதாகும். மற்றும் அவ்வாசாரியத் தோற்றத் துக்கின்றியமையாதது நமது பக்குவம். அதனையும் இனி உணர்த்துகின்றார் ஆசிரியர்.

**பாண்டியன் கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞானத்தின் ஆட்பாலவர்க்கருள் என்பதை அறியே—**

"எந்தையாரவர் எவ்வகையார்கொல்" என்று அறிய விரும்பிய நெடுமாறன் என்னும் பாண்டியனுக்கு அறிவிக்க அருள்பூண்ட ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகில் அளவில்லை; கிளக்க

வேண்டா " என்ற பாசுரத்தை ஓதியருளி ஞான உபதேசத்துக்கான பக்குவம், தற்போதமடங்கி இறைவன் தாளைத் தலையாற் பணிதலே யாம் என்றறிவுறுத்தனர். "எந்தை ***தாட்பால் வணங்கி***த்தலை நின்றிவை ***கேட்க*** தக்கார் " என்பதும், " எண் குணத்தான் தாளை வணங்காத் தலை......குணமில " என்பதும், " ஏதுக்களாலும், எடுத்த மொழியாலும் " மிக்குச் சோதித்தறிய முடியாதவன் இறைவன் என்பதை உணர்த்தும். இதனால், இவ்வுபதேசத் திருப்பாட்டின் உரையே சிவஞானம் எனவும், இதனை அறிதலே அறிவு எனவும், இங்ஙனமறிந்த அடியாராவார் யார்க்கும் தலைவன் பரமன் என்பதை நாம் தெரிந் தொழுகலே தேர்வாம். இதைவிட்டு விகற்பித்துக் கேட்க வழக்கில்லை. இதுவே நிச்சய மதியாம். இவ்வாறு துணிந்து கேள்வியறுதலே தக்கதாகும்.

இந்தப் பாடலால் நாம் பதி ஒன்று உண்டு எனவும், அப்பதி தொழிற்படுத்தினலன்றி யாவும் தொழிற்படா எனவும் கருத்துட் கொள்ளவேண்டும். இனிப்பதியிலக்கணமாக நாம் இப்பாடலிலிருந்து அறிய வேண்டுவன தொகுத்துக்காண்போம்

சிவமே பரம்.அவன் பாசப் பகைவன்; சுத்தன்; அமலன்; சோதிநாயகன்; முத்தன்; பரம்பரன். சர்வ வியாபகன். அவனே ஆன்மாக்கட்குப் பக்குவ முதிர்வில் ஞான உபதேசமருள்பவன். இவனாலே ஆன்மாக்கள் மலநீக்கம் பெறும். சிவனே எல்லாம் தொழிற்பட இயக்குபவன். நாம் அவன் வழி யொழுகுதலே போதும். " நீர்வழிப்படூஉம் புணை

போல்" நாம் நடக்கவேண்டும். அவனே ஆசாரியன். ஆசாரியன் சிவமே. இவ்வாறு தெரிந்துகொள்ளுவதே அமையும் என இப்பாடல் காட்டுகிறது. மேலும். இப் பாடலில் ஸ்ரீ அருணந்திதேவர் எடுத்தாளும் *மூன்று* தேவாரப் பாடல்களையும் நாம் நாவார அன்றாடம் ஓதுதல் தக்கது. அவை:— ***"இருநிலனாய்", "ஆட்டு வித்தால்"*** என்னும் அப்பரருளிய திருத்தாண்டகங் களும், திருஞானசம்பந்தரருளிய ***" ஆட்பாலவர்க் கருளும் "*** என்னும் திருப்பாசுரமும் ஆம். இம் மூன்று திருப்பாடல்களையும் நாம் நாடோறும் வாயில் ஓதி ஞானவாயில் பெறுவோமாக! இதனால் கர்த்தா அறிவிப்போன் என்க!

---

## செய்யுள்—3

### நேரிசை வெண்பா

### ***பசு இலக்கணம்***

### ஆன்மா சதசத்தென்பது

**அறிவறி யாமை யிரண்டும் அடியேன்**
**செறிதலான் மெய்கண்ட தேவே—அறிவோ**
**அறியேனோ யாதென்று கூறுகேன் ஆய்ந்து**
**குறிமாறு கொள்ளாமற் கூறு.**

## பொழிப்புரை

***மெய்கண்டதேவனே !***

*ஒரு நிலையிலே அறிந்தும், ஒரு நிலையிலே அறியாமலும் இப்படி இரண்டு விதமும் அடியேன் கூடிவருகையினால், அடியேனை அறிவு என்று சொல்லுவேனோ அல்லது*

*அறியாதவன் என்று சொல்லுவேனோ இவ்விரண்டில் யாதென்று விண்ணப்பம் செய்வேன்? இவ்விரண்டு பகுதிகளையும் திருவுள்ளத்தில் ஆராய்ந்தருளித் தேவரீர் குறிப்பது அடியேன் மறுத்து விண்ணப்பஞ் செய்யாதபடி அருளிச் செய்வீராக!*

## விரிவுரை

இந்தச் செய்யுள் ஆன்ம இலக்கணத்தைச் சொல்லுவதாகும். ***பசு, உயிர், சேதனன், புற்கலன், சீவன், அணு, வியாபகன், ஆன்மா*** என்பன ஒரு பொருள் கிளவிகளாம். பாசத்தால் கட்டப்படுதலின் பசு எனப்பட்டது ஆன்மா. உபநிடதங்களும் ஆகமங்களும் உயிர்களை ஆன்மா என்னும். ஆன்மாக்கள் பல; எண்ணில. "துறந்தோர் துறப்போர் போதும்" என்பது திருவருட்பயன். "வையத் திறந்தாரை எண்ணிக்கொண்டற்று" என்பது திருக்குறள். ஆன்மாக்கள் மூவகைய. இம் மூவகையினர்க்கும் ஆணவம் உண்டு. "உரைதருமிப் பசுவர்க்கம்" என்ற இடம் இதனை உணர்த்தும். இவர்கள் எப்போதும் சிவத்திற்கு அடிமைப்பட்டவரேயாவர். சகலர், மாயா மலமும் உடையவராதலால் தமக்குற்ற கட்டினைத் தாமே அறிகிலர். ஆன்மாவுக்குச் சுதந்தரமில்லை. காரணம் ***அறிவின்மை***யே அறிவுடையோர் ஆன்மாவுக்கு ***அறிவுடையன*** என்று பேரிட்டுள்ளனர். செவி முதலிய கருவிகளைக் கூடிநின்று அறியும் ஆன்மா. ஆன்மாவுக்கு அநாதியே அறிவுண்டு. கண்ணிடத்தே சோதி இல்லையானால் ஞாயிறு முதலிய விளக்கங்கள் இருந்தும் பயனில்லை. ஆன்மாவுக்கு அறிவே இல்லையானால், சிவம், மலம், மாயைகளால்

பயனின்றும். இதனால், விளக்கவிளங்கும் கண்போல் ***உணர்த்த உணரும் உணர்வு*** ஆன்மாவுக்கு உண்டு என்பது தெரியலாம். சிவத்துக்கு நிலைபெற்ற ஞானம் இலக்கணமாம். ஆதலால், சடப்பொருள்களைச் சுட்டியறிய வேண்டுவது சிவத்திற்கு இல்லை. தத்துவங்கட்கு அறிவில்லை; அவை சடம். ஆன்மாவின் அறிவு சத்துப்போல் ஒருசேர அறியும் தன்மையும், அசத்துப்போல் அறியாத தன்மையும் உடையதன்று. இருளின் தன்மையும், ஒளியின் தன்மையும் அல்லாத கண்ணின் தன்மைபோல ***ஏகதேசமாய் அறியும்*** வேறான தன்மையுடையது உயிர். இவ்வறிவு பெத்தத்தில் கருவியையும், முத்தியில் திருவருளையும் துணையாகக்கொண்டு விளங்கும். இந்த ஏகதேச அறிவு சார்ந்ததன் வண்ணமாய் விளங்கும் படிகம் போல்வது. அசத்தோடு சார்ந்தபோது அசத்தாயும், சத்தோடு சார்ந்தபோது சத்தாயும் அழுந்தும் தன்மையது. இதனால் ஆன்மா ***சதசத்து*** எனப்படும். சத்தாகிய சிவத்தையும், அசத்தாகிய பிரபஞ்சத்தையும் அறியுந்தன்மை உயிர்க்கிருத்தலால் ***அறிவு அடியேன் செறிதலால்*** என்றார். அங்ஙனம் அறிவதும் தானே அறிதலின்றி அறிவிக்க அறிதலால் ***அறியாமை அடியேன் செறிதலால்*** என்றார். சத்து அசத்து இரண்டின்கண்ணும் அதுவதுவாய் நின்றழுந்துவதால் ***இரண்டும் செறிதலால்*** என்றார். பரமாசாரியனே ஆன்மாவின் இயல்பினை உள்ளபடி தெரிந்து தெரிவிப்பவன் ஆதலால் ***மெய்கண்டதேவே*** என்றார். இவர் சிவமேயாதலின் ***தேவே*** என்றார். உயிர், தன்னை அறிந்து கொள்ளுதற்கும் ஆசாரியனின் அறிவு தேவைப்படுதலால் ***மாறுகொள்ளாமற் கூறு*** என்றார்.

தன் அறிவுக்கு அறியுஞ் சுதந்தரமில்லாமையைக் குறித் தற்கே ***அறிவோ அறியேனே யாதென்று கூறுகேன்*** என்ருர், ஆன்மாவுக்குப் பக்குவமுதிர்வு தேவைப் படுதலின் ***ஆய்ந்து*** என்ருர். இறைவன் அறிவிக்கும் வழி ஆன்மா அறிவதாதலால் ***குறி*** எனலுற்ருர். ஆன்மாவானது, சுருங்கவுரைக்கப்புகின், கண்ணும் படிகமும் ஆகாசமும் போல அதுவதுவாக நின்றறியும் இயல்புடையதெனப்படும். இதனுல் ஆன்மா சுத்த உணர்வுடையதுமல்லாமல் சடமும் அல்லாமல் இடைப் பட்ட நிலையதாம். இதனை ***இடையின மெய்*** போல்வ தெனவும் கூறுவர். ஆன்மா, மறைப்புட்பட்டிருத்த லால் தமக்குயிராய் விளங்கும் சிவஞானத்தினைக் காண முடியவில்லை. ஆகவே, உலகம் சூரியனுதயத்தை எதிர் பார்ப்பதுபோல, ஆன்மாக்கள் அறியாமை நீங்குவ தற்குத் திருவருளை எதிர்நோக்கவேண்டும் என்பது கருத்தாம். "நிலத்தியல்பால் நீர் திரிந் தற்ருகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் ***அறிவு***" என்னும் குறள் சார்ந்ததன் வண்ணமாதல் ஆன்ம இயல்பென்ப தைக் காட்டும்.

மற்றும், சிவனும் சீவனும் சித்துப்பொருளே யாயினும், சிவனுக்கு அகவிருளின்மையால் அறிவு விழைவு செயல்கள் மறைக்கப்படுவதில. சீவனுக்கு ஆணவ மலமாகிய அகவிருள் இருத்தலால் அறிவு ஆதியன மறைக்கப்படுகின்றன. விளக்கொளி புற இருளால் மறைக்கப்படுவதில்லை. ஆனுல் கண்ணெளி புற இருளால் மறைக்கப்படுகின்றது. கண்ணெளி தூலஒளி எனப்படும். விளக்கொளி சூக்குமஒளி எனப்படும். இவ்வாறே, இறைவன் சூக்கும சித்து எனப்படுவன். ஆன்மா தூலசித்து எனப்படும்.

சூக்குமமே தூலத்தை உணர்த்தவேண்டுமாதலால் *மெய்கண்ட தேவே! கூறு* என்றுள்ளார் ஆசிரியர். "*அறிவிக்கப்படும் சித்தும்* இவன்" என்பது சித்தியார். "*அறிவிக்க* அன்றி அறியா உளங்கள்" என்பது சிவஞானபோதம். "*அறிவிலாமை* அன்றே கண்டது ஆண்டநாள்" என்பது திருவாசகம். இதனால் ஆன்மா அறிவித்தால் அறிபவன் என்க.

---

## செய்யுள் — 4

நேரிசை ஆசிரியப்பா

### *பாச இலக்கணம்*

பாசம் அறிவித்தாலும் அறியாதது

கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கின் விகற்பம் கற்பம்
குரோதம் மோகம் கொலையஞர் மதநகை
விராயெண் குணனுமா ணவமென விளம்பினை
5 அஞ்ஞா னம்பொய் அயர்வே மோகம்

பைசா சூனியம் மாற்சரி யம்பயம்
ஆயவேழ் குணனும் மாயைக் கருளினை
இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவல்என் றெடுத்த
10 அறுவகைக் குணனும் கருமக் கருளினை

ஆங்கவை தானும் நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானாய்
என்வழி என்பதொன் றின்றும் *மன்ன!*
ஊரும் பேரும் உருவும் கொண்டென்
15 ஊரும் பேரும் உருவும் கெடுத்த

பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியில்
சைவ சிகாமணி ! மெய்யர் மெய்ய !
மும்மலம் சடமென மொழிந்தனை அம்ம !
மாறுகோள் கூறல் போலும் தேறும்
20 சடஞ்செய லதனைத் சார்ந்திடு மெனினே

கடம்பட மதனுட் கண்டிலம் விடம்படும்
ஊன்திரள் போன்ற தாயின் தோன்றி
அணைந்தாங் ககறல் வேண்டும் குணங்களும்
பன்மையின் ருகும் எம்மைவந் தணைதரத்
25 தானே மாட்டா தியானே செய்கிலன்

நீயோ செய்யாய் நின்மல னுயிட்டு
இயல்பெனிற் போகா தென்றும் மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்
கந்தம் ஆதி இல்லாய் அருளே.

## பொழிப்புரை

*அடியேனுக்குத் தேவரீர், முன்பு உபதேச முறையிலே* ***பதி–பசு–பாசம்*** *என்கிற உள்பொருள் மூன்றினையும் பற்றி அருளிச் செய்தீர். அப்போது பாச வகை எனப் படும்* ***ஆணவம் மாயை காமியம்*** *என்ற மூன்று மலங்க ளுடைய குணங்களையும் குறிகளையும் வேறுவேருக அருளிச் செய்தீர். அவற்றுள்,* ***ஆணவம் என்பது,*** *ஆன்மபோதமானது தன்னை* ***வேருக*** *எண்ணித் தனக்கு மற்றெவரும் சமமாகார் என்று நிற்பதும், ஏதொன்றையும்* ***சங்கற்பித்து****க்கொண்டு* (Proposing) *நிற்பதும்,* ***கோபம்*** *மேற்கொண்டு விரோதம் நினைப்பதும், எதையும்* ***ஆசைப்*** *படுகிறதும், எவ்வுயிரையும்* ***கொல்லுதலும்,*** *துன்பம் அடைந்தால்* ***விசனப்****படுகிறதும், சொல்லிலும் செயலிலும்* ***அகங்காரம்*** *கொள்வதும், எதற்கும்*

**சிரித்துத்** திரிகிறதும், இப்படிப்பட்ட **எட்டுக் குணங்களைக் கொண்டது** என்று தெரிவித்தருளினீர். அன்றியும்,

**மாயா மலம் என்பது,** பொய்யை மெய் என மயங்கிப் **பொல்லாங்கு செய்தலும், பொய் பேசுதலும்,** மயங்கி **வருந்துவதும்,** காம மிகுதியால் **மூர்ச்சிப்பதும்,** உள்ள ஆசையை **இல்லை என்று ஒளித்தலும்,** [உயிர்களைக் கொல்லவும் அடிக்கவும் எண்ணுதலும், பிறர்பால் பொருமை கொண்டு கேடு கருதலும், பிறரிடம் **விரோதம் பாராட்டு**தலும்], தன் உயிர்க்கு இறுதி நேருமோ என எண்ணி **அஞ்சித் திரிதலும்** ஆகிய இந்த **ஏழு குணங்களும்** கொண்டதாகும் என்றருளிச் செய்தீர். அல்லாமலும், **கன்ம மலம் என்பது,** ஒவ்வோரிடத்தைப் பற்**றியிருத்தலும்,** நோயாய்க் **கிடத்தலும்,** இரு**வினை ஆற்றலும்,** ஒவ்வொரு பற்றின் தொந்தனைகளை மேற்கொண்டு **விடுத்தலும்,** யாவரையும் **நிந்தித்தலும்,** [உடல் மாறிப் பிறத்தலும், இகழ்ந்தாருடன் **பொருந்தலும்**] ஆக **ஆறு குணங்களையும் கொண்ட**தெனக் கூறியருளினீர். மற்று, தம்பிரானே!

அம் மும்மலங்களின் காரிய விரிவாகிய **இருபத்தொன்றும்,** (8 + 7 + 6 = 21) அடியேனை விட்டு எப்போதும் நீங்காமல் நின்று, தம் தம் தொழில்களிலே அடியேனைக் காரியப்படுத்தி, யான் (உயிர்) என்றொரு முதல் இல்லை என்னும்படி தாமே மேலிட்டு, அடியேன் இச்சை வழி ஒரு சிறிதும் வருகிறதில்லை.

அடியேனுக்குள்ள மலங்களை நீக்குதற் பொருட்டாக, ஊரும் பேரும் உருவும் இல்லாத தேவரீர், ஊரும் பேரும் உருவும் தாங்கி அடியேனுக்குள்ள அவற்றைப்

போக்கினீர். அதாவது, இனிப் பிறவா வகை வந்து ஏன்று கொண்டீர்.

பெண்ணை நதி சூழும் திருவெண்ணைநல்லூரில் சைவ சித்தாந்த சமய முடிமணியாக விளங்குபவரே! பிரபஞ்சத்தினைப் பொய் எனக் கடிந்து விலகியவர்க்கு உண்மையாக உள்ளவரே! தேவரீர் அடியேனுக்கு முன்னம் உபதேசித்தகாலை **மும்மலங்களும் சடம்** அசேதனம் என்று அருளிச்செய்தீர்.

அடியேன் செய்யும் விண்ணப்பம் கேட்டருளும். தேவரீர் முன்பு அடியேற்கு அருளிச்செய்கையில் அசித்தெனப்பட்ட மலங்களைச் சடம் என மாறுபடக் கூறி விட்டீர்போலும்! அப்படியல்ல; அவை சடப்பொருள்-தாம் என்பீராயின், அவை இப்படிச் சேட்டைப்படுவது ஏன்?

அறிவுள்ளவனாகிய உன்னுடன் கூடிய காரணத்தால் அவை சேட்டைப் படலாயின என்பீரேல்,

சால், குடம், புடவை, சீலை முதலிய சடப்பொருட்கள் அடியேனுடன் கூடியபோது அப்படியொன்றும் சேட்டிக்கக் காணவில்லையே! அவை கடம் படம் போல்வன அல்ல; விஷம் போன்ற சடம்; புசித்த ஆன்மாக்களின் அறிவை அழித்துத் தன்குணம் மேலிட்டு மயக்கும் விஷம். அதுபோலவே, மலங்களும் சடமாயினும் அறிவாயுள்ள ஆன்மாவுடன் கூடிய பொழுதே அப்படி மேலிட்டு மயக்கும் என்பீராயின்,

நஞ்சானது புசித்தவர்களை மறைத்து மேலிட்டு நின்று மீளவும் விட்டுப்போகின்றது. மலங்கள் அப்படி நீங்கக் காணவில்லையே! மற்றும், மலங்களுக்கு உபமானமாகக் காட்டப்பட்ட நஞ்சுகளுக்கு மலங்களைப் போலப் பல

*குணங்கள் செய்யும் இயல்பில்லையே! ஆதலால் இது நிருட்டாந்த விரோத மாகுமே! மேலும், மலங்கள் சடமா-யிருப்பின் அவை தாமாக அடியேனை வந்து பொருந்த மாட்டா. அடியேன், எனக்கே குற்றம் செய்பவைகளை நானே உண்டாக்கிக்கொள்ள மாட்டேனன்றே! தேவரீ-ரோ மலரகிதராதலால் அஞ்ஞானமாகிய மலங்களை அடியேனுக்கு உண்டாக்கப்போகிறதில்லை. இம் மூன்று வகையுமின்றி, ஆன்மா உள்ள அன்றே மும்மலங்களும் ஆன்ம சுபாவமாக உள்ளவை என்பீராயின், பாலில் வெளுப்பும், கரியின் கறுப்பும் போல இயல்பாயுள்ள சுபாவத்துக்கு ஒரு போதும் அழிவில்லையாகும். ஆதலால், இந்த ஐயப்பாடு அடியேனுக்கில்லையாம்படி முடிவும் முதலுமில்லாதவரே! மயக்கமறத் தேவரீர் அடியேனுக்கு இப் பாச பந்தங்கள் வந்து பொருந்திய முறையினை எவ்வாறென அருளிச்செய்ய வேணும்.*

## விரிவுரை

இப் பாடல், பாச இலக்கணம் கூறுமுகமாக ஐயங்களை எழுப்பிப் பாசம் பற்றிய செய்திகளை உறுதிப்படுத்துகின்றதாகும். இந் நூலின் முன்னுரை-யிலே பாச வரலாறு கூறுமிடத்தே தந்துள்ளவற்றை முந்தறிவதும் நல்லது. உயிர்கட்குப் **பசு** என்பது அவை பந்தத்தால் கட்டுண்டு கிடக்குமளவும் நடக்கும் பெயராம். எல்லாப் பாசங்களும் மூன்று வகைகளுள் அடங்கும். குதிரைக்கு மூன்று கட்டுகள் இருப்பது போல் ஆன்மாவுக்கும் இம் மூன்று பந்தங்களும் உள. குதிரையின் கழுத்துக்கட்டு நிகர்ப்பது ஆணவம். பின்காற் கட்டுகளைப் போல்வன மாயை கன்மங்கள். கழுத்துக் கட்டோடு குதிரை இருப்பின் சுற்றிச் சுற்றி ஓடும். மேலும் அலுப்பெய்தும். அதனை நிலைப்

படுத்தி நலப்படுத்தவேண்டும். ஓடாமையே ஓய்வு-நலம் செய்யும் இவ்வழியில் உதவுவன பின்காற் கட்டுகள் இரண்டும். குதிரையை எப்போதும் கட்டுப்படுத்துவது கழுத்துக்கட்டு. அதனை நலப்படுத்த உதவுவன காற் கட்டுகள். இம் முறையிலே நம்முடைய மும்மலங்களும் உள. ஆணவம் அறியாமையைச் செய்ய, மாயா கன்மங்கள் அவ்வாணவமல நீக்கம் பெற்று ஆன்மா நலமடைதற்கு உபகாரப்படுகின்றன. இம் மூன்று மலங்களைப்பற்றியும் நாம் அறிந்தாலன்றி நம் உண்மை நிலை நமக்கு விளங்காது. நம் உண்மை நிலையும், நமக்குச் சிவமே ஆதாரமாவதென்பதும் தெரிந்தாலல்லது நாம் சிவபோகம் துய்த்தல் இயலாது. விதைத்தல் — வளர்தல் — அறுவடையாதல் — என மூன்று நிகழ்வுகள் பயிர்க்கண் இருத்தல் போலவே பாச உணர்ச்சி — ஆன்ம உணர்ச்சி — சிவ ஞானம் என்ற மூன்றும் முறையே உயிர்க்கண் தேவைப்படுகின்றன. இதனுல் நாம் முதலில் பாசம் பற்றிய விவரங்களை அறிதலே முக்கியமாம் அதனை இப்பாடல் சொல்லிக்காட்டுகின்றது.

**கூறிய மூன்று மலத்தின் குணக்குறி —**

ஆசாரியன், சீடனுக்குப் பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களைப்பற்றி வரிசையாக அனுபவ முறும்படி உபதேசிக்கிருன். இதுவே ***சிவஞான உபதேசம்*** எனப்படும். தகுதியானபடிப்பு முதலிய இல்லையானுல் உத்தியோகம் கிடைப்பதில்லை. நிலம் தக்கதாயில்லாவிடில் விளைவு அமோகப்படாது. இவ்வாறே சீடன்மேற்கூறப்பட்ட ஞானுேபதேசம் பெறு-தற்குத் தக்க பக்குவம் உற்றிருக்கவேண்டும். இது, பசு

இலக்கணம் சொல்லவந்த மூன்றும் பாடலால் உணர்த்தப்பட்டது. இந்தத் திரிபதார்த்த இலட்சணத்துள்ளும் பாசத்தின் செய்தி சீடனுக்குப் படும்படி உணர்த்தப்படுவது முக்கியம். நோய் நீக்கம் முதற்கண் வேண்டுவது; அப்பால் வருவன உடல் நலமும் இன்புறுதலுமாம். அவ்வாறே பாசநீக்க உணர்வு முதலில் நமக்கு வேண்டும். இதற்காகப் பாச இலட்சணம் முதலில் ஆசாரியனால் அறிவிக்கப்படும். தூல பஞ்சாக்கரத்தில் முதல் இரண்டு அட்சரங்களும் இவ்விஷயத்தையே நினைப்பூட்டுவனவாம். இங்ஙனம் பாச இலக்கணம் கூறப்புகும் ஞானசாரியர் ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களின் இயல்புகளையும், அவை செய்யும் தொழில்களையும் உணர்த்தலுறுகின்றார். எந்தப் பொருளினுடைய பண்பும் தொழிலும் தெரிதலே அப்பொருளை அறிதற்கான இலட்சணமாகும். தீயினுக்குச் சூடு பண்பு. சுடுதல் அதன் தொழில். புடைபெயர்வில்லாதது பண்பு. புடைபெயர்வுடையது தொழில். பண்பு அடங்கியிருத்தலைக் குணம் என்பர். வெளிப்படுதலை ஆற்றல் என்பர். இவைகளைக் ***குணமும் குறியும்*** எனவும் ஓதுப. ஒரு பொருளுக்கே பல பெயர்கள் வழங்குதலும் உண்டு. இவ்வாறான பல பெயர்கள் அறியார்க்குக் குழப்பம் செய்தலும் கூடும். ஆதலால், ஒரு பொருளின் பல பெயர்களையும் தெரிந்திடுதல் தக்கதாம். இப் பெயர்களைக் ***குறி*** எனவும் கூறுப. இங்கு, மேற்கூறப்பட்ட ஆணவமாதி மலங்களின் குணங்குறிகள் ஆசாரியரால் உபதேசக் கிரமத்தில் முன்னே கூறப்படுதலை நமக்குத் தெரிவிப்பதற்காகவே ***கூறிய மூன்று மலத்தின் குணக்***

*குறி* என்றுள்ளார் ஆசிரியர். இவ் வாக்கியத்தால், நாம், நமக்கு மூன்று மலங்கள் (குற்றங்கள்) உள எனவும், அவற்றிற்கான குணம் குறிகள் உண்டெனவும், இவையிற்றை ஞான உபதேச நெறியில் ஆசாரியர் முந்துறக் கிளப்பர் எனவும் தெரியலாம். ஸ்ரீ மெய்கண்ட தேவரும் இந் நூலாசிரியருக்கு முந்துறக் கிளந்தது இதுவேயாகும் என்பதை வரலாறு பேசுகின்றது.

**வேறு கிளக்கின் —**

பொதுப்படையான அறிவுடையவர்கட்கு மலங்கள் மூன்றும் ஒரே தன்மையுடையவை என்ற எண்ணமே இருக்கும். மலம் என்ற பெயரே அத்தகைய எண்ணத்துக்கு இடங்கொடுக்கும். ஆனால், நுண்ணறிவாளர்கட்கு இப் பெயரால் வரும் மயக்கம் இராது. ஒவ்வொன்றின் இயல்பிலுள்ள வேறுபாடுகள் தோன்றும். ஆதலால், இவை மூன்றும் ஒரே இயல்புடையன அல்ல என்பதை நமக்கறிவுறுத்தும் பொருட்டே *வேறு கிளக்கின்* என்றுள்ளார். இதனை, “போதகாரிய மறைத்து நின்றது புகல் மலங்காண்— ஓதலாம் **குண**முமாக உயிரினுள் விரவலாலே–காதலால் அவித்தை சிந்தத் தரும் கலையாதி மாயை—ஆதலால் இரண்டும் சோதி இருள் என **வேறு**மன்றே”. என்ற சித்தியார்ப் பாடலால் அறியலாகும். “விடிவாம் அளவும் விளக்கு அனைய *மாயை*—வடிவாதி *கன்ம*த்து வந்து” என்பது திருவருட்பயன். படலக் கண்ணுக்கும் சூரியன் தெரியாது. மேகம் மறைத்திருப்பினும் கண்ணுக்குச் சூரியன் தெரியாது. சூரியனைத் தெரியவொட்டாமல் செய்யும் தன்மையில் மேகமும்

படலமும் ஒன்றுபோற் காணப்படினும் இவை வேறே என்பது வெளிப்படையாகத் தெரிந்ததே. நமது சுகதுக்கமாகிய காரியத்துக்குக் ***கன்ம மலம்*** முதற் காரணமாம். ***மாயா மலம்*** துணைக் காரணம் ***ஆணவ மலம்*** நிமித்த காரணமாம். சுக துக்கங்களைக் கன்மம் தோற்றுவிக்கிறது. மாயா மலம் அதனை நுகர்வதற்கானபடி உடம்பு முதலியவற்றை அளிக்கிறது. ஆணவம் சுக துக்கங்களை அனுபவிக்கச் செய்கிறது. ஆணவம் உயிரோடு கலந்து நிற்றலின் ***பிரதிபந்தம்*** எனப்படும். கன்மம் உயிரோடு செல்லுதலின் ***அனுபந்த***மாம். மாயா மலம் உயிரோடு கூடி தனு முதலியவாக நிற்றலால் ***சம்பந்தம்*** எனப்படும். இங்ஙனம் இவை தமக்குள் வேறுபாடு உண்மையைக் காட்டவே ***வேறு*** என்றார் ஆசிரியர்.

**விகற்பம் கற்பம் குரோதம் மோகம் கொலை அஞர்மதம்**
**நகைவிராய் எண்குணனும் ஆணவம் என விளம்பினை —**

இவ் வரிகள் ஆன்மாவினிடம் ஆணவமலம் வியாபித்துச் செய்யும் தன்மைகளை விளம்புவனவாம். முதலில் ஆணவமல வியாபகம் எத்தகையதென்பதை நாம் தெரிதல் நல்லது. இருள் ஒன்றுயிருந்து பல கண்களுடன் கூடி மறைப்பதுபோலவே, ஆணவம் ஒன்றுயிருந்து பல உயிர்களுடன் ***கூடி*** மறைக்கிறது. பல உயிர்களுடன் கலந்து நிற்கும் தன்மையால் வியாபகமுடையது எனப்படும். என்றாலும் இறைவன் வியாபகம் போன்றதன்று. முதல்வன் வியாபகம் உயிரின் வியாபகத்துக்கும் மேம்பட்டது. அஞ்ஞான காலத்தில் விளங்கித் தோன்றுவிடினும் முத்தி காலத்து விளங்கித் தோன்றுவது. எனவே இறை வியாபகம்

ஒருபோதும் நீங்காதது. ஆனால் ஆணவ மல வியாபகமோ உயிரின் வியாபகம் எவ்வளவோ அவ்வளவே உள்ளது. அதாவது உயிருடன் ***சம வியாபகம்*** உடையது ஆதலால், முத்திக்காலத்துக் குருவருளால் நீங்குவது. இவ்வாறு ஆணவமலம் உயிருடன் சம வியாபகமாயிருத்தலை உணர்த்தும் பொருட்டே ***விராய்*** எனப்பட்டது. விராவுதல்—சமமாய்க் கலந்து பரவுதல் ஆம். ஆணவமுடைய ஆன்மபோதமானது தன்னை விபரீதமாய் வேருக எண்ணவைத்துத் தன்னையே மேலாகக் கருதுவிக்கும். ஒரு பொருளைக் கண்ணால் காணும்போது, உயிர் கண்டதென்னுமல் கண்ணே கண்டது என்பது போன்றது இந் நிலை. இதனை ***விகற்பம்*** (Distinction) என்பர். தன்னை முதலாகக் கருதச்செய்வது ***சங்கற்பம்*** ஆம் இது இறைவனை எண்ணவொட்டாத இயல்புடையது. எல்லாம் தன்னாலாவது என்ற கருத்தே சங்கற்பம் (Proposing) எனப்படும். குற்றம் தன்பாலிருத்தலைக் கருதவிடாமல் பிறர்மேல் கோபம்கொள்ளுதல் ***குரோதம்*** எனப்படும். "தன்னையே கொல்லும் சினம்" என்பது இதன் கொடுமை உணர்த்தும் குறளுரையாம். கோபத்தின் விளைவே விரோதம் ஆம் கோபம் உணர்வினை அழிப்பது. ***மோகம்*** என்பது ஆசை எனப்படும். குருவினாலும், நூலினாலும் தீயன என்று அறிந்தவற்றில் நீங்காமல் நிற்கும் மயக்கமும் மோகம் எனப்படும். இது முற்றுணர்வு பெற முடியாமையின் விளைவாம். ஆசையே ஆன்மாவைச் சிறைப்படுத்துவது, யாதோருயிரையும் தன்பொருட்டேனும், பிறர் பொருட்டேனும், இரக்கமின்றிக் கொலைசெய்வதும் செய்விப்பதும் ***கொலை***

எனப்படும். இஃது அருளின்மையால் விளையும் குற்றமாம். கொலையைக் குணக்கேடு என நூல்கள் நுவலும். "ஒன்றாக நல்லது கொல்லாமை" என்றதன் கருத்தும் இங்குக் கருதத்தக்கது. இவ்வொரு குற்றத்தைக் கடிதற்கெழுந்தனவே பவுத்த சமண சமயங்கள் என்ப. பிறர்க்குத் துன்பிழைத்தலுள் உச்சமான நிலையே கொலையாம். ஒரு துன்பம் தன்பால் வந்தபோது அதனைத் தாங்கிக்கொள்ளும் உரன் (ஆற்றல்) இல்லாமல் அதற்காக வருந்துதல் ***அஞர்*** எனப்படும். கிட்டிய பொருள் பிரிதல், சுற்றம் அகலுதல், முதலிய பல்வேறு காரணங்களால் அஞர் விளையும். துன்பத்துக்குக் கலங்காத உள்ளமே ஆன்மாவின் விக்கிரகம் எனப்படும். "இடுக்கண் வருங்கால் நகுக" என்பது வள்ளுவர் உபதேசம். அஞர், விஷாதம் எனவும் கூறப்படும். ***மதம்*** எனப் படுவது, யாதொன்று சொல்லுமிடத்தும் செய்யு மிடத்தும் தன்னையே மதித்து நிற்றலாம். மற்றும், தான் மோகித்துப் புணர்ந்த வரைவில்மகளிரை அருவருக்காமல் பார்த்து இவள் திவ்ய ஸ்திரீ எனவும், இவளின் அரிய பேறு எமக்கு இல்லை என மதிப்பதும் மதம் எனப்படும். இஃது குறைந்த இன்பத்தினையே குறிக்கோளாகக் கொள்ளுதலால் வருவதாகும். ***நகை*** என்பது அறியாமை புலப்படுத்துவது. மனை முதலிய வளங்களைக் கண்டுகளித்தல்; இவற்றையே பெரிதென எண்ணி இனி எமக்குக் குறையேதுமில்லை என்றிருக்கும் அற்ப மகிழ்வாகும் இது. இதனை அரிஷம் எனவும் கூறுவர். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் எனத் திரியும் இதுவும் முற்றின்பமாகாது. மேற்கூறப்பட்ட விகற்பம் முதலாக நகை ஈறாக

உள்ள எட்டுக் குற்றங்களையும் உயிர்க்கு இயல்பெனக் கூறுமாறு ஆணவம் செய்துவிடும். மேலும், ஆன்மா அணுவன்று. ஆன்மாவை ஆணவம், உயிர், அந்தக் கரணத்துடன் கூடி இருதயத்தில் இருந்துகொண்டு கண் முதலிய பொறிகளின் வழியாக விஷயங்களைக் கிரகிக்கும்போது அந்த அவத்தையில் மனம், இந்திரியம், விஷயம் இவைகளில் அதி சூக்குமமாய் நிற்கும்படிச் செய்கிறது. ஆன்மாவின் ஞானவடிவை இங்ஙனம் ஆணவம் செய்தலின் இப் பெயரடைந்தது. அநாதி பெத்த சித்துருவாக ஆன்மா உள்ளது என்பது உயிரிலக்கணமாகக் கூறப்படுதல் கொண்டு இதனை அறியலாகும்.

இனி, இதனையே, சகலர் எனப்பட்ட ஆன்மாக் களுக்குக் கேவல நிலையில் ***ஞானத்தை மறைத்து*** நின்று, சகலாவத்தையிலே அராகம் முதலிய கருவி களிலே ஆவேசித்து ***மோகம், மதம், அராகம், விஷாதம், சோஷம், வைசித்திரியம், அரிஷம்*** என்னும் ***ஏழு*** விதங்களைச் செய்யும் ஆணவம் என்பது சிவப்பிரகாச உரைவாசகம். அப்படியும் மொத்தம் ***எட்டுக்*** குணமாதல் காணலாம். இதனுல் ஆணவம் கேவல சகலங்களில் நின்று புரியுமியல் கூறப்பட்ட தென்னலாம். ஆகவே ஆணவமலத்தின் பொதுவும் சிறப்புமான இலக்கணங்கள் தெரியலாகும்.

மற்றும் இதனை, ஆணவமலம் ஞான திரோதக மாய் நிற்றலேயன்றி, மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்னும் ஏழுகாரியங் களைச் செய்யும் என்றும் கூறியுள்ளனர் ஞானநூலோர். ஆணவம் செய்யும் என்ருல் ஆணவம் முதல்வனுல்

காரியப்படும் என்பது கருத்தாம். இதுகாறும் கூறிய வாற்றால், உயிர்க்குள்ள குற்றங்களாகக் கூறப்படும் *இயல்பாகவே பாசமுடைமை* முதலாக *வரம்பில் இன்பம் இல்லாமை* ஈறான எட்டுக் குற்றங்களையும் விகற்பம் முதலாக நகை ஈறாக ஈண்டுரைக்கப்பட்டுள்ளவற்றோடு பொருத்திக்காண்டல் ஏற்புடையதாகும் என்னலாம் பொருத்தம் தரப்புகின் விரியும். இனி ஆணவமலத்துக்குக் கூறப்படும் வேறு வேறு பெயர்களைக் கூறுதும். ஆணவமலத்தின் பரியாய நாமங்களாவன *பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்ஞானம், அவித்தை, ஆவிருதி, ருக்கு, கிலாணிபாவம், மூலம், க்ஷயம், பாசம், அசுத்தி, பெந்தனம், வியாகாதம், களங்கம், மோகம், கேவலம், ஆவரணம், தமசு, சடம், படலம், நிரோதம், ஆச்சாதனம்* முதலனவாகும். ஆணவம் உயிரின் குணமன்று என்றறிதல் வேண்டும். ஆணவத்தியல்பினுள் உயிரகப்பட்டு மருளுதலைச் சிதம்பர மும்மணிக்கோவை, " அலையாமரபின் ***ஆணவக்கொடி*** எனும்—பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ— ஏகலன் தணந்தாங்கு ***என்னையும் உணராது— மோகமோ டழுந்தி*** முயங்குறு மமையத்து " எனக் கூறித் தெருட்டுதலாலறிதலும் தக்கதே.

## அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம் பைசாசூனியம் மாற்சரியம் பயம் ஆய ஏழ்குணனும் மாயைக்கருவினை-

உயிர்களைப் பற்றியிருக்கும் ஆணவமலத்தை நீக்குதற் பொருட்டு மாயை கன்மம் என இரண்டு மலங்கள் தரப்படுவன. இவை, துணியின் அழுக்கைப் போக்க அவ்வியல்புடைய உவர்மண், சாணி என்பன

பயன்படல் போன்றன. அவற்றுள் மாயை பற்றியது இவ்வரிகளில் கூறப்படும். இம்மாயை இறைவற்கு வைப்புச் சத்தியாம். உயிர்களைத் தன் வசமாக்கி மயக்குதலின் மாயை என்பது காரணப் பெயராயிற்று. இது, காரணமும் காரியமுமாகி மயக்கும். நூல் காரணம். அந்த நூலாலாகிய துணி காரியம். துணி-தான் உடுத்தும் காரியத்துக்குப் பயன்படுவது. நூல் அங்ஙனம் செய்யாது. இது பற்றியே மாயையும் அதன் காரியமும் என இரண்டாகவைத்து எண்ணப் படுகின்றது. மாயை, தன் காரியமான தநுகரணுதி களைத் தோன்றுவித்து அவற்றின் வேருய் நின்று மயக் கத்தைச் செய்யும். மாயை, சுத்தம் அசுத்தம் என இருதிறப்படும். சுத்த மாயையினின்றும் ஐந்து கலைகள், நான்கு வாக்குகள், சிவ தத்துவம் ஐந்து, சுத்த காலமுதல் சுத்தநில முடிபாக உள்ள முப்பத்தொரு தத்துவம் ஆகியவை தோன்றும். அசுத்த மாயை யிலிருந்து அசுத்த காலம் முதல் அசுத்த நிலம் முடிபாக முப்பத்தொரு தத்துவங்கள் தோன்றும். சுத்தமாயா தத்துவம் விஞ்ஞானுகலர், பிரளயாகலர்க்குப் பொருந்து வது. அசுத்த மாயாதத்துவம் முப்பத் தொன்றும் சகலவர்க்கத் துயிர்க்குப் பொருந்துவன. சிவ தத்து வத்தில் சுத்தம் அசுத்தம் என்னும் பகுப்பில்லை முப்பத்தாறு தத்துவங்களும் வெளிப்படையில் புவன வடிவாயிருக்கும். அகத்தில் சூக்குமதேகவடிவா யிருக்கும். பஞ்சபூதகாரியம் தூல தேகமாம். பிருதிவி தத்துவ புவனமளவும் தூலமாம். ஏனைய சூக்குமம். இவை, பொதுவும், சிறப்பும் பொதுச்சிறப்புமென நின்று உயிர்கட்கு விளங்கும். மாயையின் இலக் கணத்தை "நித்தமாய் அருவாய்" எனத் தொடங்கும்

சித்தியார்ப் பாடலால் அறியலாகும். தசகாரிய விளக்க நூலும் காண்டல் இங்குத் துணைபுரியும். இனி, மாயைக்குள்ள குணங்களாக உள்ளன ஏழும் இவை யாம். பொய்யை மெய்யென்று கொள்ளுதலும் பொல்லாங்கிழைத்தலும் — பொய் சொல்லுதலும் — கண்டதை மறந்து மயங்கி வருந்துவதும்—காம ஆசையால் மூர்ச்சிக்கையும்—ஆசையிருந்தும் இல்லை என்று ஒளிப்பதும் — உயிர்களைக் கொல்லவும் அடிக்கவும் எண்ணுதலும் பொறாமை கொண்டு கேடு நினைக்கிறதும் பிறருடன் விரோதம் பாராட்டுவதும்—தன் உயிர்க்கு இறுதிவருமோ என அச்சப்படுதலும் ஆகிய இவையாகும்.

இப்பால் கருமமலத்தியல்புகள் கூறப்படுகின்றன. மூல கன்மத்திலேயே விருப்பு வெறுப்புக்கிடமிருத்தலால் உயிர்கட்குக் கன்மம் விளைகின்றது. ஆணவம், திரோதாயி சுத்த மாயை, அசுத்த மாயை கன்மம் எனப் பாசங்கள் ஐந்தனுள் ஐந்தாவது கன்மம். மனம், வாக்கு, காயங்களால் செய்யப்படுவதால் ***கன்மம்*** என்பது பெயராயிற்று. பண்ணிய கன்மம் நசித்துப் பலம் உண்டாமளவும் புவனத்திலும், தைல வாசனைபோலப் புத்தியிலும் தங்கிக் காணப்படா-திருப்பதால் ***அதிட்டம்*** என்பர். உடலாதிகளைப் பல வகையாய் உண்டாக்குவதனால் ***சனகம்*** என்பதும் இதன் பெயராம். எல்லாவற்றையும் தாங்குகையால் ***தாரகம்*** எனவும், புசிக்கப்படுவதால் ***போக்கியம்*** எனவும் இது கூறப்படும். ஆத்தியான்மிகம் முதலிய மூன்றுவித துக்கத்துக்கும் இது காரணமாம். ஆன்ம அறிவும் மாயா காரியங்களும் சேர்ந்து இது உண்டாவ-

தால் தன்ம அதன்மமே சொரூபமாகவுடையது. பிரளய காலத்திலே இது பக்குவப்படுகிறது. சிருட்டி காலத்திலே உடலாதிகட்கு ஏது ஆவது. சங்கார காலத்திலே மாயையிலே தங்குவது. புசித்தாலொழியத் தொலையாதது. ***காயிகம், வாசிகம், மானதம்*** என மூன்ருய்க் கூறப்படுவது. இம் மூன்றிறனும் புண்ணியமும் பாவமும் செய்யப்படும். "உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல்" என்ற குறள் மானத பாவகன்மத்துக்கு எடுத்துக்காட்டாகும். கன்மத்தினலேதான் சாதி—ஆயு—போகம் உண்டாகின்றன. புண்ணியத்தால் பாவமும், பாவத்தால் புண்ணியமும் அழியமாட்டா. கழுவாய், வழுவாய் மருங்கின் செய்யப்படுதலால் புசிப்பு ஒழியும். பரிகாரம் செய்யப்படாத பாவ புண்ணியங்கள் முறையே நரக சுவர்க்க அனுபவங்களை விளைக்கும். கன்மம் புசிக்கப் படுகையிலே சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம் எனவாகும். இது ஆற்று நீர்போல் தொன்றுதொட்டு வருவது. இதன் மூல கன்மம் ஆணவம்போல் நித்தியமும், சகசமும் ஆகியிருக்கும். "பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்" என்ற பழமொழி கன்மம் உண்டென்பதையும், புண்ணிய பாவ வன்மை மென்மையையும் காட்டும். கன்மம் இல்லையாயின் ஒருவன் கஷ்டப்படவும் ஒருவன் சுகப்படவும் காரணமிராது. புண்ணிய வினையும் பாவ வினையும் ஒருவனுல் ஒரே காலத்தே செய்யப்படின் இரண்டின் பக்குவ பலன்களும் ஒருங்கே புசிக்கப்படாமையால் கருத்தா இன்ன காலத்தில் இது புசிக்கப்படுவதென உறுத்துவன். இதனை ***அநியத கன்மம்*** என்பர்.

இதுவரை சொன்னவதனால் ஆன்மாவினால் செய்யப் படும் இதாகித முயற்சி கன்மமாம் என்பது தெரியலாம். ***ஆகாமிய*** முயற்சி பலனுக்கு வருவளவும் கட்டுப்பட்டு அறம் பாவமாய்க் கிடப்பதே ***சஞ்சிதம்.*** பலனுக்கு வருங்கால் இன்பதுன்பமாய்ப் ***பிராரத்தம்*** எனப்படும். இதனால் ஆகாமியமே முன்னர் உண்டாவதெனை அறியலாம். இருவினை என்பது இப்போது செய்யப் படாவிடினும், உண்டெனக் கண்கூடாக அறியப்படா விடினும், இன்ப துன்பப் பயன்களைக் கொண்டு புண்ணிய பாவ காரணம் ஆராயப்படும். இதுவே கன்மம் பற்றிய அனுமான அறிவாம். வேண்டுதல் வேண்டாமை இலான் இறைவன் எனவே உயிர் அவ்விரண்டும் உடையதென்பது தேற்றம். "இரண்- டெனும் பழைய வினையும்" என்பதும், "இரு வாதனை யற்றிருந்தான் பெருமை" என்பதும் விருப்பு வெறுப்புண்மை புலப்படுத்தும் மேற்கோள் களாம். "செம்புறு களிம்பென" என்னும் மாதவச் சிவஞான யோகிகள் அருளிய பாடலும் இஃது ணர்த்துதல் காணலாம் இதனால் ஆகாமியமாகிய செயப்படு பொருள், மூல கன்மத்தை முதற்காரணமா யுடைய தெனல் தெளிவாம். "தன்மமோ டதன்ம மாகி" என்ற சித்தியார்ப்பாடல் இங்கு ஓதத்தக்கது. இனி அம்மூல கன்மம் வினை இயல்புகள் கூறப்படும். ஒவ்வொரு தலங்களைப் பற்றி ***இருத்தலும்,*** நோயாய்க் ***கிடத்தலும்,*** அறம்மறம் ***புரிதலும்,*** தொந்தனை ***விடுதலும்,*** நிந்தித்தலே தொழிலாக ***நடப்பதும்,*** [உடல் மாறிப் பிறத்தலும், இகழ்ந்தாருடன் ***பொருந் தலும்***] என்ற ஆறும் கன்ம மலத்தின் ஆறுவகைக் குணங்களாம். இவையாவும் ஆசாரியரால் விளக்கப்

படுதலினால் *அருளினை* என்றார். இனி மும்மலக் கொடுமை கூறப்படும்.

**ஆங்கவை தானும் நீங்காது நின்று—தன்வழிச் செலுத்தித் தானே தானாய்—என் வழி என்பதொன்று இன்றாம்; மன்ன!—**

மூலமாகிய மலங்கள் மூன்றாயினும் இவை காரணங்களாக நின்று எட்டும், ஏழும், ஆறுமாகிய காரியங்களாக விரிந்து இருபத்தொரு வகைகளாகின்றன என்பதை இதுவரை பார்த்தோம். இந்த இருபத்தொன்றும் ஆன்மாவினை விட்டு நீங்காமல் எப்போதும் உள்ளன. இவை நம்மைத் தத்தமக்குரிய தொழில்களைப் புரியச்செய்கின்றன. யானை ஊர்வோன், யானையை அடக்கி நடத்த அறியாமலும் ஆற்றலின்றியும் இருப்பானாயின் யானை செல்லும் வழியிலேயே செல்லவேண்டியவனாவான். யானையோ அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் இயல்பினது. மதவேகத்தின் போது குத்துக் கோற்காரர்களையும் பொருட்படுத்தாது. "யானை புக்க புலம்போல" என்ற சொற்றொடரும் இதன் அழிவுசெயலை அறிவுறுத்தும். இவ்வாறே, மும்மல காரியங்களும் ஆன்மாவினை அலைக்கழிக்கும். ஐந்து குஞ்சரங்கட்கு ஒரு பாகன்போலுள்ள நிலைமையே ஆன்மாவினுக்கிருப்பது. இக் குஞ்சரங்களை ஞான இருங் கயிற்றாற் பிணித்து அருளாங்குசத்தால் அடக்க வேண்டியிருக்கின்றது. இன்றேல் மும்மல காரியங்கள் ஆன்மாவினை அடக்கியாளத் தலைப்படும். இதனையே, ***ஆங்கவை தானும் நீங்காது நின்று தன்வழிச் செலுத்திச்*** என்கிறார் ஆசிரியர். அழகுவாய்ந்த உடம்புடைய ஒருவற்குத் தொழுநோய்

வந்துவிட்டால் அந்நோய் அவனுடம்பின் அழகைப் பையப் பைய அழியப் பண்ணி முற்றிலும் குரூபி-யாக்கித் தானே மேலிட்டு நிற்கும். காண்போர்க்கும், அனுபவிக்குமவனுக்கும் முடிவில் அருவருப்புத் தரும். இவ்வாறே இருபத்தொரு வினைகளும் உயிரினைப் பற்றிப் படர்ந்து உயிர் என்றொரு முதலே இல்லை என்னும்படி செய்திடும். அழுகு தொழு நோயாளனை அழகுடையவன் பண்டெனை எவரே அறைவர். கேட்டோரும் அவனது பண்டை வண்ணத்தை எங்ஙனே பாவித்தற்கூடும்? இந்நிலையையே, "*தானே தான் ஆய்*" என்றுள்ளார் இக் கூறப்பட்ட நோயாளன் நோய் முதிர்வினைக் கண்டு அஞ்சித் தான் பண்டைய வண்ணத்தனாக வேண்டுமென்று எவ்வளவு தான் விரும்பினும் அவனுடைய மூப்பும் கூடுதலி னாலே அங்ஙனம் ஒருபோதும் ஆகமுடியாமல் வருந்துவன். இதனினும் கொடுமை வேறெது? இவனைத் தெய்வ மருத்துவன்தான் அருளினால் குணப்படுத்தலாம். இங்ஙனம் செய்ததாக வரலாறு களும் உள. அவ்வாறே, வினைவழியே தன்வழியாய் விட்டவனுக்கு அவனது இச்சை வழி செல்லுபடி-யாகிறதில்லை கொலைக் குற்றத்துக்குத் தண்டம் பெற்றானொருவன் அரசினை உயிர்ப் பிச்சைக்கு இரக்கங் காட்டுமாறு மன்றாடுவது போலும், இறை யுதவியை நாடுவதன்றி வேறு வழிகாணாது ஆன்மா அலமரும். இவனுயிரைக் கொடுப்பது அரசின் கையில் இருப்பது போலவே, ஆன்மாவின் ஈடேற்றம் ஞான வேந்தராகிய ஆசாரியர் கையகத்ததாகவே உள்ளது. இதனாலேதான், தானே தனக்குத் தலைவனாக விளங்கும் சிறப்புடைமை

காட்டும் *மன்ன !* என்ற சொல்லால் தமதாசாரியரை நூலாசிரியர் இங்கு விளிக்கலுற்றாரவர். "வேந்தன் சிறின் ஆந்துணையில்லை" என்ற முதுமொழி, வேந்தன் தலைமை குறிப்பது எவருமறிவர். மற்றும், ஸ்ரீ மெய் கண்ட தேவர் காலத்தே நாடெங்கும் இருந்த பொய்ந் நெறிகள் போக்கப்பட்டன. மெய்ந் நெறி நிலைநாட்டப் பட்டது. தென்னாடெங்கும் சிவராசதானியாகி விளங்கியது. இந்தச் சிந்தாந்த சைவ ராஜதானியின் தனிப் பேரரசாக நம் ஸ்ரீ மெய்கண்டார் விளங்கியாள லுற்றார். எங்கும் சிவநெறித் தாபனங்கள் மல்கின. இந்த வைபவத்தை நமக்கு நினைவூட்டக் கருதிப் போலும் *மன்ன* என விளிக்கலுற்றார் ஆசிரியர் என்ன லாம். மற்றும் ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவவதாரம் செய்த குடும்பமும், வளர்ந்தெழுந்தருளியிருந்த குடும்பமும் அரசியற்கை அமைந்த குடும்பமே என்பது வரலாற்றுண்மையாகும். இப்பெற்றிமையும் இவ் விளிக்கு அரண் செய்யுந் தகையதே. இனி, அத்தகைய அரசர், குற்றவாளியாகிய தம்மை இரக்கங்காட்டி ஆட் கொண்டு காத்தருளிய பெருமையை ஆர்த்தியோடு கூறுகின்றார் ஆசிரியர். அதுவருமாறு—

**ஊரும் பேரும் உருவும் கொண்டு என் ஊரும் பேரும் உருவும் கெடுத்த பெண்ணைசூழ்ந்தவெண்ணெய் அம் பதியில் சைவ சிகாமணி ! மெய்யர் மெய்ய !**

பிறப்பு நீங்கினலல்லாது மலம் நீங்காது. எனவே மல நீக்கம் பிறப்பு நீக்கமாம். பிறப்பின்மையே பேரின்பம். ஆனதுபற்றியே, "இனிப்பிறவாமை வந்து ஏன்று கொள்ளே" எனவும், "வேண்டுங் கால் வேண்டும் பிறவாமை" எனவும் பெரியோர்கள்

மொழிந்துளர். "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" என்பதும் அதுவே. பிறப்பு இருட்டுப்போல்வது சிறப்பு ஞானமயமாவது. இருட்டு ஒளியால் ஒழியும். அவ்வாறே பிறப்பு, ஞானத்தால் அகலும். ஒளி, சூரியனால் தரப்படுகிறது. அங்ஙனமே ஞானம் (சிவஞானம்) ஆசாரியரால் அருளப்படும். நம்முடைய பிறப்பு வினையால் விளைந்து அமைந்தது. "வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது" என்பது தமிழ்க்காப்பியம். இவ்வினைக்கேற்பவே நமக்கு ***ஊரும் பேரும் உருவும்*** அமைகின்றன. "திருவாரூரில் பிறக்கமுத்தி" என்பது நூலுரை. அனைவரும் ஆங்குப் பிறக்க முடிவதில்லை—குழந்தைப் பருவத்திலேயே பெற்றோர் உற்றோரால் நாமகரணம் செய்யப்படுகிறது. அப் பெயர் பிறகு நீங்குவதில்லை. வேறு பெயர் அமைத்துக் கொள்ளினும் பிள்ளைப் பெயர் வழங்கியே தீருகிறது. எவரும் விகாரியாய்ப் பிறக்க விரும்பார். இருப்பினும் விகார உருவினராய்ப் பிறக்கின்றனர். "உறுப்பில் பிண்டமும்" என்ற பாட்டும் இதனை நினைவூட்டும். எனவே நம்முடைய நாம ரூபாதிகள் நம் வினையாலமைந்தவை என்பது தெளிவாம். பிறப்பு நீங்கினால் இவையும் நீங்கிப்போம் இங்ஙனம் வினையாகிய இருளால் அமைந்த நம் பிறப்பின் ஊரும், பேரும், உருவும் நீங்குவதற்கு ஞான ஒளியாலமைந்த திருமேனியுடைய ஆசாரியர் வெளிப்பாடு தேவையாக உள்ளது. திருக்கயிலைக் கல்லால் நிழல், பெருந்துறைக் குருந்த நீழலாதிய இடங்களில் இத்தகைய ஞானத் திருமேனி வெளிப்பாடுகள் நிகழ்ந்த வரலாறுகளறிவோம். அங்ஙனமே, ஞானஒளி எங்கும் விளங்க, ஆணவ இருள் நில்லாது ஓட, இளமை நலம் கனிந்த எழில்

நிறை திருமேனியோடும் ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவ-வதாரம் செய்தருளினுராவர். இங்ஙனம் *சிவமே,* திருவெண்ணெய்நல்லூரினை *ஊராகக்* கொண்டும், ஸ்ரீ மெய்கண்டதேவர் (சுவேதவனப் பெருமான்) என்னும் திருப் *பெயர்* பூண்டும் ஞானத்தாலமைந்த மானிட இள நலத் *திருமேனி* தாங்கியும் எழுந் தருளியமையின் காரணம், தன்னுடைய ஊரும், பேரும், உருவும் ஒழித்தலாகிய பிறப்பு நீக்கம் புரிந்தருளும் பொருட்டதாம் என்கிருர் ஆசிரியர் மரத்தை மரமே பிளக்கஉதவும்; வைரத்தை வைரமே வெட்டும். இரும்பை இரும்பே துணிக்கும்; உருமாற்றும். இந்த விதமே ஆசாரியர் அருள், சீடனுடைய மருளைப் போக்குதல் செய்யும். இவையெல்லாம் தெரிவித்தற் கருதியே, "*ஊரும் பேரும் உருவும் கொண்டு என் ஊரும் பேரும் உருவும் கெடுத்த*" என்கின்ருர் ஆசிரியர். இனி ஆசிரியர், தமது ஞாஞசாரிய மூர்த்திகள் கொண்ட ஊரும் பேரும் உருவும் குறிப்-பிப்பார் போன்று *வெண்ணெய் அம்பதி* எனவும், *மெய்யர் மெய்ய* எனவும், *சிகாமணி* எனவும் சாற்றியுள்ளாராவர் இனி, மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொழுவார்க்கு வார்த்தை சொலச் சற் குருவும் வாய்க்கும்" ஆகலின், *மெய்யர் மெய்ய, சைவசிகாமணி* என மூர்த்தியுண்மையும், *வெண்ணெய் அம்பதி* எனத் தலத்துப் பெருமையும், *பெண்ணை சூழ்ந்த* எனத்தீர்த்த விசேடமும் ஒருங்கே ஓரிடத்தே வாய்ப்புண்டிருக்கும் மேன்மையை நமக் கறிவுறுத்துதற்கும் இங்ஙனம் கூறியுள்ளார் என்னலாம். நாமும் இக் குருமூர்த்தத்தை வலம் வந்து வழி பட்டுய்யவேண்டு மென்பதைப் *பெண்ணை சூழ்ந்த*

என்ற தொடரில் ***சூழ்ந்த*** என்ற சொல் உணர்த்திக் கொண்டிருத்தல் கருதத் தக்கது. மதுரையம்பதி, உறந்-தையம்பதிகள் அந்நாளில் அரசுறை பெருநகர்களாக விளங்கியமை போன்று இவ்வெண்ணெய் நகரும் ஞானப் பேரரசு வீற்றிருக்கும் சிறந்த ஊராகும் என்பதை நமக்குணர்த்து முறையில் வெண்ணெய் ***அம்பதி*** என்றுள்ளார். ***பதி*** என்பது தலைவருக்கும், தலைவருறையும் நகருக்கும் பயன்படுத்தப்படும் சொல்லாம். யாவர் மூர்த்தத்துள்ளும் இவரது சிறந்த-தென்பதைக் குறிக்குமாறு ***சிகாமணி*** என்ற தொடர் தரப்பட்டுளது. தோட்டக் காவற்காரர்களைக் கேட்டு ஒரு சிறு பழம் பெறுவதினும், தோட்டச் சொந்தக்காரரைக் கேட்டுப் பெரும் பழம் பலவடை-தல் நேரிதும் சீரிதும் ஆம் அன்றே. இவ்வாறுவதே ஸ்ரீ மெய்கண்டாரை வழிபட்டுப் பேறெய்தல் ஆகும் என்க. சிவமே இவ்வுருக் கொண்டதென்பதை ***மணி*** என்ற சொல் உணர்த்தும். இச் சொல்லில் உள்ள இகரத்தைக் கருத்தாப் பொருள் விகுதியாகக் கொள்ளின் அடைந்தாரைத் தூய்மையுறுத்தும் மூர்த்தமாகும் இஃதென்பது காணலாம் மூர்த்தத்தை இங்ஙனம் உவமித்தவர் மூர்த்திமான் திருப்பெயரை நமக்கு உணர்த்தும்பொருட்டே ***மெய்யர் மெய்ய !*** எனலானர். மெய்கண்டார் என்னும் திருநாமத்தின் எழுவாய் எழுத்திரண்டுமே விளியுரு பேற்று ***மெய்ய !*** எனவாயிற்றென்க ! மற்றும் ஆசிரியர் திருப்பெயரை முழுவதும் கூறக் கூசியும் இங்ஙனம் விளித்தல் ஒரு முறையாகும் என்னலாம். இப் பெருமானை நாம் எய்து முன் மனந் தூயராய், செய்வினை தூயராய் இருத்தல் தக்கதென்பதை ***மெய்யர்*** என்னும் வார்த்தை காட்-

டும். "***மெய்யர்க்கே மெய்யனாகும்*** விதியிலா என்னைப் போலும் பொய்யர்க்கே பொய்யனாகும்" என்ற வாசகம் இங்குப் பொருந்துமுறை காணலாம். சகல நிலையுற்ற யாவரையும் ஆட்கொள்ள எழுந்தருளிய பரமன் இவரென்பதை ***மெய்யர்*** மெய் என்ற பிரயோகம் உணர்த்தும் திறனும் உடையது. (மெய் = உடம்பு; மெய்யர்—உடம்பினை உடைய சகலர்). மற்றும் பற்பல நுட்பங்கள் இவ் விளியின்கண் விளங்குதலை மேலோர் காண்பர். இவற்றால் பிரபஞ்ச வாஞ்சை யற்றவர் தப்பாமல் அடையத் தக்கவர் இப் பெருமான் எனத் தெளியலாம்.

## மும்மலம் சடம் என மொழிந்தனை —

ஞானாசாரியர் பாசத் தெளிவு உபதேசிக்கையில் ஆணவ முதலிய மூன்று மலங்களும் சடப்பொருள்கள் என்று தெரிவித்தனர். ***சட***மாவது உயிரும் அறிவு மில்லாததுமாகும். இவ்வாறு சடம் எனச் சொல்லி அவை இன்னவாறு காரியப்படும் என்றும் கூறி-யருளியது ஆச்சரியத்தை விளைத்தலால் ***அம்ம*** என்றார். கால்களில்லாதவன் உதைத்தான் என்பது போலும் முரண்பாடிருத்தலே வியப்புக்கு ஏதுவாம் என்க. ஆதலால், இதிலிருந்து எழும் ஐயத்தைக் கேட்கப் புகுவராயினர் ஆசிரியர்.

## மாறுகோள் கூறல் போலும் —

இன்னின்னவாறு காரியப்படும் இயல்புடையன மலங்கள் எனக் கூறிய தேவரீர், அவற்றைச் சடம் என்றமை மாறுபடச் சொன்னதாகிறதே. ஒருவேளை அடியேன் அறிவை உசுப்பிவிடுதற் பொருட்டு

இங்ஙனம் அருளிச் செய்திருக்கலாமோ ? என்று கேட்குமுகமாக இவ்வரிச் செய்தி உள்ளது.

**தேறும் சடம்** (எனின்)

உண்மையிலேயே மலம் சடப்பொருளேயாகும். மாறுபடக் கூறுதல் ஆசிரியராவார்க்கு மரபன்று என்பீராயின்,—***தேறும்*** என்பது அறுதியிட்டுச் சொல்லுதலை உணர்த்தும். மலங்கள் சடம்தான் என்பதை, "மலம் ***சட***மென்றல் காட்சி" எனவும், "மாயைதான் ***அசித்து*** உருவாய் மருவமாட்டாது" எனவும், "உலகத்துக்கோர் வித்துமாய் ***அசித்***தாய்" எனவும் ஞான நூல்கள் கூறுமாற்றால் நாமுணரலாம். இதனால், நாம் எப் பழியையும் பாசத்தின் மேலிட்டுத் தப்ப இயலாதென்பது துணியவேண்டும் பொருளாம். "எய்தவர்தம் அருகிருப்ப அம்பை நொந்த கருமம் என்ன ?" என்றாற்போல்வது இவ்விடம்.

**செயலதனைச் சார்ந்திடும் எனினே —**

[எழுது கருவி சடப்பொருள் ; எழுதுபவன் உயிருள்ள சித்துப்பொருள். எழுதுபவன் கைப் படுவதனால் பேனா எழுதுகிறது. பேனா சடப்பொருளாயினும் எழுதுதலாகிய காரியத்தைச் செய்ய வல்லதாயுள்ளது.] இவ்வாறே மலம் சடப்பொருளாயினும், அறிவுள்ளவனோடு கூடுவதனால் சேட்டைப் படுகின்றது என்பதில் தடையோ மாறுபாடோ இல்லை என்று ஆசிரியர் தெரிவித்ததாகக் கொண்டு அதிலும் ஓர் ஐயப்பாடெழுவதை மேல் விண்ணப்பிக்கின்றார் ஆசிரியர்.

**கடம் படம் அதனுள் கண்டிலம் —**

சேதனனை அடைந்த மாத்திரத்தே சடப்பொருளும் தொழிற்படும் என்பது நியதியானால், குடமும் துணியும் என்னை அடைந்தும் அவை என்னைத் தொழிற்படுத்தக் காண்கிலேன். என்வழி அவை நிற்கும் சடமாகவே உள்ளன. ஆதலால், சடம் காரியப்படுதல் எப்படி முடியுமென்ற ஐயம் நீங்கிற்றிலது என இவ் வரியால் ஆசிரியர் விண்ணப்பிக்கின்றார் ஆவர். " *இரும்பு* பிடித்த கையும், *துரும்பு* கடித்த வாயும் சும்மா இரா " என்ற பழமொழியை இங்குச் சிந்தித்தல் வேண்டும்.

**விடம்படும் ஊன்திரள் போன்றது எனினே —**

அந்த மலங்கள் சால், சீலை போன்ற சடப்பொருளல்ல. விஷத்தைப் போன்றன. விஷம் சடப்பொருளேயாயினும், அறிவுடையவன் புசித்தபோது விஷ மயக்கம் மேலிடப் பெறுகிறான். அறிவு அழியப் பெறுகிறான். விஷமுண்டான் நஞ்சினால் மேலிடப் பெற்றுத் தன்வயமிழத்தல் போல்வதாகும் மலத்தால் மேலிடப் பெறுதல் என்று ஆசிரியர் கூறுதலும், கொஞ்சம் ஐயம் அகலப் பெற்றது. எனினும், அதினின்றும் மற்றோர் ஐயம் எழலுற்றது எனக் கொண்டு அதனை மேல் விண்ணப்பிக்கின்றார் ஆசிரியர். [மலத்திடம் மயக்கும் தொழில் இருத்தலின் இங்கு விஷம் உவமிக்கப்பட்டது. கடம் படங்களிடம் அத் தொழில் இல்லை என நாமறிதல் தக்கது.]

**தோன்றி அணைந்த ஆங்கு அகறல் வேண்டும் —**

நஞ்சு, புசித்தவர்களை மேலிட்டு மயக்குவது உண்மையே ஆயினும், வேகம் தணிந்தபின் தானே

இறங்கி விட்டுப் போகிறது. ஆனால் மலங்கள் அப்படிச் செய்யவில்லையே! மலங்கள் நீங்காமை ஏனோ!

**குணங்களும் பன்மை இன்றாகும் —**

மலங்களுக்கு உவமையாகக் காட்டப்பட்ட நஞ்சுக்கு மயக்கும் குணம் ஒன்றே உள்ளது. ஆனால், மலங்களுக்குப் பல குணங்கள் உள்ளன. மலங்கள் பல பல விதமாகத் தொழிற்பட வைக்கின்றன. ஆதலால், மலங்கட்கு நஞ்சினை உவமானமாகக் கூறியது திருட்டாந்த விரோதமாகுமே! மேலும்,

**எம்மை வந்து அணைதர தானே மாட்டாது —**

மலம் சடப்பொருளாதலால் அது தானாகவே வந்து என்னைச் சேராது (பந்தியாது). ***யானே செய்கிலன்***—நான், துன்பஞ் செய்வதற்குக் காரண-மான மலத்தில் தானாகப் போய் அகப்பட்டுக்கொள்ள மாட்டேன். எவரும், தமக்குத் தாமே துன்பந் தேடிக்கொள்ளமாட்டார்.

**நீயோ செய்யாய் நின்மலன் ஆயிட்டு —**

தேவரீரோ மலரகிதர். ஆதலால், அஞ்ஞான மாகிய மலங்களை அடியேனுக்குச் சேர்த்து வைக்க மாட்டீர். மேலும் தேவரீர் பெருங் கருணை உடையவ ராதலால் அங்ஙனம் செய்யமாட்டீராதல் உறுதி. அன்றியும்,

**இயல்பு எனின் —**

அந்த மலங்கள் ஆன்மாவுக்குரிய குணம் என்பீராயின், ***போகாது என்றும்***—குணியை விட்டுக்

குணம் எப்போதும் பிரியாது. பிரிவதாயின் குணியும் உடன் அழிவுறும். இதுவே இயற்கை எனப்படுவது. பாலில் வெள்ளையும், கரியில் கறுப்பும் ஒருபோதும் நீங்கியிரா ; அழிவுறா. இப்படியே மலம் ஆன்மாவி னுடைய குணமாயின் அது முத்தியிலும் நீங்காது. முத்தியிலும் மல பந்தம் இருப்பின் முத்திக்குச் சிறப்பேதும் இல்லையாம். ஆதலால், இயல்பு என்பது பொருந்தாதே ! என்று ஐயங்களை அடுக்கியுள்ளார் ஆசிரியர். *[இயல்பு* என்பது பொருள் அழியுங்காறும் உடனிருந்து அழியும் இயல்புடையது. முதலாகிய பொருள் நிற்கத் தான்மட்டில் நீங்காது. நீங்கினால் அஃது இயற்கை ஆகாது. மலம் நீங்குவது ஆதலால் இயற்கையன்று. சித்தும் சடமும் மாறுபட்ட பொருள்கள். ஆதலால் ஒன்றுக்கொன்றியல்பாக முடியாது. இவ்வுண்மை இங்குத் தெரிதல் தக்கது.]

**மயல்கெட பந்தம் வந்தவாறு இங்கு அந்தம் ஆதி இல்லோய் ! அருளே—**

இந்த ஐயம் அகலும்படி, பாசபந்தம் அடியே னுக்கு எப்படி வந்து பொருந்தியது என்று முடிவும் முதலும் இல்லாத பொருளே ! அருளிச் செய்வீராக என்கிறார் ஆசிரியர். இதனால், ஆன்மாவுக்கு மலபந்தம் வந்த விதம் எப்படி என்பது வினாவாம். பாசமானது நெல்லுக்கு உமிபோலவும், செம்பிற்குக் காளிதம் போலவும் தொன்மையே பற்றி நிற்கும் ***குற்றமாம்*** என நாமறிதல் வேண்டும். பற்றிநிற்ப தாதலின் விட்டு நீங்கும் இயல்பினதாம். " நெல்லிற்குமியும் நிகழ் செம்பினிற் களிம்பும்—சொல்லில் புதிதன்று தொன்-மையே " என்பது ***சிவஞான போதம்.*** " மும்மலம்

நெல்லினுக்கு முளையோடு தவிடுமிப்போல் " என்பது ***சித்தியார்.*** "நெல்லு முளை தவிடுமிபோல் அநாதி யாக நிறுத்திடுவர் " என்பது ***சிவப்பிரகாசம்.*** " துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்—இன்றென்ப தெவ்வாறு மில் " என்பது ***திருவருட் பயன்.*** " தொன்மை உயிர்தானென ஒன்றிலதாய் ***மன்னியிடும்*** மலம் " சிவப்பிரகாசம். இம் மேற் கோளுள்ள இடங்கள் ஈண்டைக்கு ஓதியுணரத் தக்கன. இனி ***அந்தம் ஆதி இல்லோய்*** என்பதனால் ஞானு சாரியர் சிவமே எனக் காட்டப்பட்ட தென்க. இப் பாடலால் ***பாசம் அறிவித்தாலும் அறியாத சடம்*** என்பது உணர்த்தப்பட்டது. இது காறும் ***பதி, பசு, பாச*** இலக்கணங்கள் பகரப்பட்டன. இனிப் பாசதரிசனம் பார்க்கப்படும்.

---

## செய்யுள் — 5

நேரிசை வெண்பா

***பாச தரிசனம்***

[மலத்தைக் கண்ட முறைமை]

**அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்**
**றிருள்கண்ட வாறென்கொல் ! எந்தாய்—மருள்கொண்ட**
**மாலையா ! வெண்ணெய்வாழ் மன்னவா ! என்னுடைய**
**மாலையா ! மாற்ற மதி.**

## பொழிப்புரை

*மலங்கள் அஞ்ஞான வண்ணத்தன; ஆகையாலே இறைவன் முன்னர் இவை நில்லா. அடிமையாகிய ஆன்மாவுக்குச் சுதந்தரமாகப் பார்க்கும் அறிவு இல்லை.*

*ஆதலால் ஆன்மா இருள் எனப்படும் அஞ்ஞானத்தை எப்படிக் காணமுடியும்? மருளாகிய இசையினை வண்டுகள் இருந்து பாடும் மாலையை உடையவரே! வெண்ணெய்-நல்லூரிலே எழுந்தருளியிருக்கும் தம்பிரானே! அடியேனுக்கு உள்ள இந்த மயக்கத்தை, அடியேனுக்கு இறைவனுக உள்ள தேவரீர் போக்கத்திருவுள்ளம் கொண்டருளுவீராக.*

## விரிவுரை

கேவல நிலையில் ஆன்மா மல மறைப்பால் அறிவு விளங்காமல் கிடந்தது. அறிவு விளங்குதற் பொருட்-டாகவே திருவருள் ஆன்மாவினைத் தத்துவக் கருவிக ளுடன் கூட்டிற்று. கண்ணனது இருட்டிலே இருந்த போது இருட்டோடே கூடியிருந்தது. இருட்டாவது தன்னைக்காட்டுகிறது. இதனினுங் கொடியது ஆணவ மலம். இது தன்னையுங் காட்டாது. கண்ணுக்கு விளக்குக் கொடுத்ததும் பொருளுணர்ச்சியறிவு ஏற் படுகிறது. இவ்வாறே ஆணவ மலமறைப்பகன்று தத்துவரூபம் புலப்படுதற்காக ஆன்மா கருவிகளோடு கூடுகிறது. இதுவே சகல நிலை. இது ஓரரசன், அமைச்சராதியோருடன் கூடி விஷய அறிவு பெறுவது போன்றதாகும். இவ்வாறு கருவிகளுடன் கூடியதும் மலமறைப்பு சும்மா விலகிவிட வில்லை. அது ஆன்மா வுக்கு அப்போதுண்டான சிறிது விளக்கத்தையும் கீழ்ப்படுத்துகிறது. இதனுலே ஆன்மா, கருவிகளே தானென மயங்கி விடுகிறது. தனக்கென அறிவிலா னுகித் தத்துவ ரூபனுக ஆன்மா சார்பல்லாச் சார்பு பற்றி மயங்குவது கண்டு அதன் வியாபகத் தன்மை புலப்படுத்தத் திருவருள் அதற்கான முறையிலே உதவுகிறது. மல சொரூபத்தின் மறைந்து கிடத்த

லினின்றும் வெளிப்படுத்த வேண்டியுள்ளது. இந்த நிலையில் அவத்தைகட்குள்ளாகி அறிவு பக்குவப்பட-லுறுகிறது. "தாம் தம் உணர்வின் தமியருள்" நிலையினின்றும் (சகல நிலையினின்றும்) "உணர் உரு அசத்து" என்னும் உண்மை நிலைக்கு (சுத்த நிலைக்கு) ஏறுகையில் நாத முதல் மண்ணீறும் தத்துவங்கள் தானல்ல என்றும் அவை சடம் என்றும் தெரியவரும். இதுவே ***பாச தரிசனம்*** எனப்படும். இதன் பின்னர் ஆன்மா கருவிச்சாரீபகன்று அருட்சார்பிலே அழுந்தும். இதுவே சுத்த நிலை. இது தத்துவ சுத்தி எனப்படும். "புவி முதலைம் பூதமாய்ப் புலன் ஐந்தாய் நிலன் ஐந்தாய்க் கரணம் நான்காய்— அவையவை ***சேர் பயனுருவாய் அல்ல உருவாய்*** நின்றான்" என்பது திருப்பாட்டு. இச் செய்திகளைத் தொகுத்துரைப்பது உண்மைநெறி விளக்கம். "மண் முதல் சிவமதீறும் வடிவு காண்பதுவே ரூபம்—மண் முதல் சிவமதீறும் மலம் சடம் என்றல் ***காட்சி***— மண்முதல் சிவமதீறும் வகை தன்னில் தானிலாது— கண்ணுதல் ***அருளால்*** நீங்கல் சுத்தியாய்க் கருது மன்றே" என்பது அப்பாடல். ஆணவ மலமானது, தான் பக்குவமாமளவும் உயிர்கட்கு வேறாய்ப் பொருளல்லாத பிரபஞ்சத்தைப் பொருளென்னும்படி அறிவிக்கும். அவ்வுயிர்கள் தமக்கு வேறின்றிப் பரிபூரணமாய் நிற்கின்ற ஞானத்தை அறிவதில்லை. ஆனால், அந்த ***அருள்*** விளங்கும் காலத்தில் கருத்தாவே சர்வமுமாய் நின்ற பழமையை உயிர்கள் அறிகின்றன. அவ்வருள் பிரகாசிக்குமட்டும், ஆன்மா என ஒரு பொருளில்லையாக அது தானேயாய் நிலைபெற்று நிற்கும். மாயை கன்மங்கள் படைப்பு துடைப்புக்

காலங்களில் பற்றுவதும் விடுவதுமா யிருக்கும். ஆணவ மலம் இப்படிப் பற்றுவதும் விடுவதுமா யிராது. ஆகையால், மனத்தால் நினைத்தற்கரிய திருவருளைக்கொண் டறியும்போதுதான் ஆணவ மலத்தாற் கட்டுப்பட்டிருந்த நிலை காணப்படும். இதுவே மலத்ததுண்மை அறியு நெறியாம். இச் செய்தியை " அந்நியமானவை உணர்த்தி " என்னும் சித்தியார்ப் பாடலால் அறியலாகும்.

இருட்டு ஒளியைப் பற்றுது. இவ்வாறே மலங்கள் இறை முன்பு நில்லா. இதனை ***அருள் முன்பு நில்லாது*** என்ற இடம் கூறும். சூரியனை இருட்டுக் கொண்டு எவரே தேடுவர் ? விளக்குக் கொண்டும் தேடுவாரிலர். ஆதலால், கருவிக் கூட்டரவு கொண்டு கருத்தனை அறிதல் நிகழாது. ஆன்மாவுக்குச் சுதந்தர அறிவில்லை. அதாவது சார்ந்ததன் வண்ணமாக அறிவு நிகழும். மலச் சார்புற்றிருக்கையில் அம் மயமாகவும், திருவருட் சார்புற்றிருக்கையில் அம் மயமாகவும் ஆன்மா காணும் இயல்பிற்று. ஆதலால், அடியேன் மலமாகிய அஞ்ஞானத்தை அறிவது எப்படி ? மலத்தின் வேருய், அருளின் சார்பாய் நின்றபோதே பாச தரிசனம் செய்தல் கூடும். அதாவது அநுமானித் தறியும். ஆதலால் பாசக் கேடுகளை அறிதற்கும் தேவரீர் திருவருளே வேண்டும் எனக் கூறுமுகமாக நமக்கும் பாச தரிசனம் பகர்கின்ருர் ஆசிரியர் என்க. சுதந்தர அறிவு ஆன்மாவுக்கு இல்லாமையை உணர்த்துவது ***" அடியேற்குக் கண் இன்று "*** என்பதாம். அருளுதவியின்றி மல அஞ்ஞானம் அறியப்படாதென்பதை ***" இருள் கண்டவாறு என்கொல் "*** என்ற இடம் உணர்த்தும். அத்

திருவருளை நயத்து நிற்றலை ***என்னுடைய மால் மாற்ற மதி*** என்று கூறுவதனுல் ஆசிரியர் விண்ணப்பித்துள்ளார். தன் மகனை அறிவாளியாக்குவதுதான் தந்தைக்குக் கடமை. அறிவுதான் அறியாமை இருந்ததையும், அதன் கேட்டையும் உணர்த்தும். "அறிதோறு அறியாமை கண்டற்ருல்" என்பது நீதிநூல். ஆதலால், எல்லா உயிர்கட்கும் தமக்கும் தந்தையாயிருக்கும் அவரே சிவஞானமருள வேண்டும் பொறுப்புடையரெனக் குறிப்பிப்பதற்கு ***எந்தாய்*** என்றுள்ளார் தமதாசாரியரை. மலர்கள் தத்தம் செடி கொடி மரங்களை ஆதாரமாகக் கொள்ளாமல் மார்பினை மாலையாகி ஆதாரமாகக் கொண்டமைந்தமையால் வண்டுகள் வேறிடத்தை நாடாமல் ரீங்கரித்துத் தேனுண்டு சுகித்தற் பொருட்டு மார்பின் கண் அணியப்பட்டுள்ள மாலையினையே நாடலுற்றன. அவ்வாறே ஆன்மாக்கள், பலபல நிலையவாய் ஆதாரம் போலத் தோற்ற மளிக்கும் தாத்துவிகங்களின் வழிச் சென்றுழலாமல் ஸ்ரீ மெய்கண்ட தேவர் திருமுன்பினை அடைந்து துதித்து அருள்பெற்று இன்புறவேண்டுமென எம்மனோர்க்கு அறிவுறுத்துங் குறிப்புட் கொண்டே ***மருள்கொண்ட மாலையா*** எனலானுர். மருள் = குறிஞ்சி யாழ்த்திறம் என்பர். தன்னிசை கேட்டாரைத் தன்னிடத்தே மனமழுந்தி யிருக்கச் செய்வதனுல் மருள் எனப்பட்டது. அந்தம் ஆதியில்லாப் பரமனே இவர் எனவும், இவருறையுமிடமும் அண்மையதே எனவும் நமக்குத் தெரிவிப்பார் போன்று ***வெண்ணெய் வாழ் மன்னவா*** என்ருர். நன்னடை நல்கல் வேந்தர் கடனுதலால் ***மன்னவா*** எனலானுர். ***வாழ்*** என்றமையால் யாண்டுமுள்ள

பொருள் என்பது தெரியச் செய்துள்ளார். நம்மை யெல்லாம் தன்னுடைமையாக உடையவன் ஆசாரியன் ஆதலால் சுவாமி என்னும் பொருள்பட *ஐயா* என்றுள்ளார்.

### கருத்து

*மல தரிசனத்தைப்* பரம சுகத்திலே அழுந்து மிடத்து இதுவரையில் மலத் தொடர்பினலன்றோ சுகத்தைப் பெருதிருந்தோம் என்றுணரும் ***அநுமானத்தாலறியலாம்*** என்பது இப்பாடலின் திரள் பொருளாம். The soul does not perceive its bondage so long it is in bondage. பூமிப் பரப்பில் நிற்பவன் பூமியின் பரப்பினை அறிதலாகாது. அதை விட்டு விமான மூர்ந்து மேற்சென்று பார்ப்பின் பெரிதும் அறிவன் என்ற உவமை கோடல் கூடும். தூங்கி விழித்த பின்னரே தூங்கியமை தெரிகிறது.

---

## செய்யுள்—6

### நேரிசையாசிரியம்

### *பசு தரிசனம்*

**மதிநுதல் பாக னுகிக் கதிதர**
**வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்தென்**
**உளம்வெளி செய்துன் அளவில் காட்சி**
**காட்டிஎற் காட்டினை எனினே நாட்டிஎன்**

**5 நுண்மையும் பெருமையும் நுவலின் அண்ணல்**
**பாதாள சத்தி பரியந்த மாக**
**ஓதி யுணர்ந்த யானே ஏக**
**முழுதும்நின் றனனே முதல்வ முழுதும்**
**பலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி**

10 ஆங்கைந் தவத்தையும் அடைந்தனன் நீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத் துண்மையும் இவ்விடத் தார்தலும்
செல்லிடத் தெய்தலும் தெரித்த மூன்றினுள்
ஒன்றெனக் கருளல் வேண்டும் என்றும்

15 இல்ல திலதாய் உள்ள துளதெனும்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலும் இலவே நிறுத்தி
யானை எறும்பி னுனது போலெனின்
ஞான மன்றவை காய வாழ்க்கை

20 மற்றவை அடைந்தன வுளவெனின் அற்றன்று
விட்ட குறையின் அறிந்து தொன்று
தொட்டுவந் தனவென வேண்டும் நட்ட
பெரியதிற் பெருமையும் சிறியதிற் சிறுமையும்
உரியது நினக்கே உண்மை பெரியோய்!

25 எனக்கின் றருகும் என்றும்
மனக்கினி யாய்! இனி மற்றது மொழியே.

## பொழிப்புரை :

*சந்திரனைப் போன்ற திருநெற்றியினை உடைய பரமேசுவரியினை ஒரு பாகத்திலே வைத்திருக்கப்பட்ட தேவரீர், அடியேனுக்கு வீடுபேறு நல்கும் பொருட்டாகத் திருவெண்ணெய்நல்லூரிலே திருவவதாரம் செய்தருளி, அடியேன்பால் வந்து பொருந்தி அடியேனுடைய அஞ்ஞானத்தை நீங்கச்செய்து சிவஞானத்தைப் பிரகாசப் படுத்தினீர் ; ஆன்ம அறிவு கொண்டு அளக்க இயலாத தேவரீருடைய இயல்பையும் அடியேற்குத் தரிசனப் படுத்தியருளினீர்.*

என்றாலும், தேவரீர் முடிவாக அருளிச்செய்த அடியேனுடைய நேர்மையையும் பெருத்த வியாப்தத்தை-யும் விண்ணப்பம் செய்கின்றேன்.

தம்பிரானே! பாதாள சத்தி முடிவாக, நூல்களைக் கற்றறிந்த அடியேன் அறிவு சென்றறியப்பட்ட இடம் எல்லாம் அடியேன் தானே முழுதும் வியாப்தமாய் நின்றதுண்டே!

கர்த்தாவே! அப்படி ஓதியுணர்ந்த இடமெங்கும் அடியேன் வியாப்தமாயிருந்தும், ஒன்றை அறியப் புகில் செவி முதலான வாயில்களாகிய புலன்களோடு கூடி அறிந்தேன். அல்லாமலும், அடியேன் அறிகிற அறிவையும் விட்டு நீங்கி மயங்கிய இடத்திலே சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையும் பட்டு நின்றேன். மற்றும், அங்ஙனம் வாதனைப்படுத்தும் உடம்பையும் விட்டு நீங்கி மீளவும் ஒவ்வொரு சரீரத்தை எடுப்பதும் செய்தேன்.

இவற்றையெல்லாம் ஆராய்ந்தருளி, அடியேன் ஓதியுணர்ந்த இடமெங்கும் அடியேன் **வியாப்தமாய் இருக்கிறதும்,** இப்போது இந்தப் பிறப்பில் இந்த உடம்பில் கூடி நின்று **சீவிக்கிறதும் அவத்தைப் படுகிறதும்,** இந்த உடம்பின் தொந்தம் விட்டுப் புண்ணிய பாவங்கட்கு ஈடான சுவர்க்க நரகங்களிலே சென்று **துய்க்கிறதும்** ஆகிய இவை மூன்று பகுதியிலும் 'இதுவாயிருக்கும் ஆன்மாவின் உண்மை' என்று ஒன்றை அடியேனுக்குத் தெரியுமாறு அருளிச் செய்யவேணும்.

அவை மூன்றுமே ஆன்மாவுக்குடையதல்லவோ என்று நிருபணம் செய்தருளுவீரானால், எப்போதும் ஒவ்வொன்றின் இயல்பினைச் சொல்லுங்கால் "இல்லது இல்லாததே", "உள்ளது உள்ளதே" என்று சொல்லுகிற அறியப்பட்ட சொல்லாகச் சொல்லின் ஒரு

முதலாக இருக்கப்பட்ட ஆன்மா ஒரு சமயம் அணுவாகச் சிறுத்தும், ஒரு சமயம் மகத்தாகப் பெருத்தும் வர வழக்கில்லையே. மேலும்,

முன் சொன்னபடி சிறுத்தும் பெருத்தும் வராது, எப்போதும் ஒரு தன்மையாகிய வியாப்தமாய் நிற்கச் செய்தும் யோனி சம்பந்தம் செய்து அதுவதுவாய் இருக்கிறது யானையாய் நின்ற ஆன்மா எறும்பானுற்போலிருக்கும். என்று தேவரீர் அருளிச் செய்வீராயின்,

தேவரீர் அடியேன் கேட்ட அறிவைப் பற்றியல்லாமல் சரீரத்தின் வழக்கைச் சொல்லியருளியதாகும். அன்றி,

அப்படிச் சொன்னதும் அறிவாயுள்ள ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஏற்ற ஒவ்வொரு சரீரங்களோடும் கூடினுல் அதற்கு அதற்குத் தக்கதாக அறிவு சீவித்து நிற்கும் என்றே சொன்னதாகக் கொள்ளவேண்டும் என்பீராயின்,

அஃது அப்படியன்று; அஃதியாதெனக் கேட்டருளுவீராயின், அப்படிக் கூடின யோனிக்குத் தக்க அறிவாய் இருக்குமேயானுல் இதற்குமுன் எடுத்துவிட்டு வந்த பிறப்புகளை இன்னது இன்னது என்று அடியேன் அறிய வேணுமே.

அப்படியல்ல ; கூடின பிறப்புக்குத் தக்கதாக ஆன்மா அறிந்து சீவிக்கும் என்று நான் சொன்னதானது அந்தந்த அவதரந்தோறும் எடுக்கப்பட்ட சிறிய பிறப்புக்கும் பெரிய பிறப்புக்கும் தக்க அறிவாக அறிந்து சீவிக்கிறதாய் இருக்கும் என்று இப்படித் தேவரீர் கூறியருளினுல்,

தேவரீர், ‘கூடினதின் தன்மை’ என்று காட்டிய பெரிய பிறப்புக்குத் தக்கதாகப் பெருத்த அறிவும் சிறிய பிறப்புக்குத் தக்கதாகச் சிறுத்த அறிவும் இப்படியாக வருகிற சுதந்தரம் அடியேற்குக் கிடையாதே. அணுவுக்கு

*அணுவும் மகத்துக்கு மகத்துமாயிருக்கிற தேவரீருக்கே உள்ளது. பெரியீர், எப்போதும் என் மனத்துக்கு இனிக்கின்றவரே ! இனியாகிலும், அடியேன் முன்னே கேட்ட வினவுக்கு விடை அருளிச் செய்யவேண்டும்.*

## கருத்து

ஆன்மா படிகம் போல்வது. அடுத்ததின் தன்மையாக இருக்கும்; வசிக்குமிடத்தைப் பற்றிய வியாபகம் உடையது. அதுவதுவாய் நிற்பது

## விரிவுரை

முதற்கண் ஆன்மாவினைப்பற்றிய சிற்சில செய்தி-களை நூல்கள் கூறுமாற்ருல் அறிவோம். ஆன்மாக்கள் எண்ணில. உடம்பிலுள்ள பொருட் கூறுகள் ஒவ்வொன்றையும் பகுத்துக் கண்டு இஃது உயிரன்று என்று தேர்ந்து கூறுவதாகிய அறிவு ஒன்று உடலில் உள்ளது. இந்த ***அறிவே உயிர்.*** இது மிகவும் நுண்ணியது. ஐம் பொறிகளிடமும் அறிவிருப்பதாக நாம் காண்கிறேம். ஆனல் அவற்றினிடம் இச்சையும் செயலும் இல. ஆதலால், அறிவு இச்சை செயல் என்னும் மூன்று முடையதே உயிர் ஆம். அந்தக் கரணங்கள் ஒன்றனை ஒன்று உணரமாட்டா. இவற்றினும் வேருனதே உயிர். இவ்வுயிர் ஆணவ மலத் தோடு கூடி நிற்பது. ஆதலால் தனக்கெனச் சுதந்தர அறிவு பெற்றில்லை. அந்தக்கரணத் தொழில் களை அவற்ருேடுகூடி அறியும் அவற்றை உட்கருவி யாக்கியும், புறக்கருவியாய்ச் செலுத்தியும் அவத்தைகளை எய்தும். ஆன்மாவுக்கு இருவகை இலக்கணங்கள் உள. ஒன்று தனித்த நிலையதாகிய சிறப்புத் தன்மை.

இது சொரூப இலக்கணம் எனப்படும். மற்றொன்று வேறு பொருளின் சார்பினால் உளதாகும் தன்மை. இது பொதுத் தன்மை எனப்படும். இதனைத் தடத்த இலக்கணம் என்பர். இந்த ஆன்மாவுக்கு ஆணவ மலச் சேர்க்கையால் அறிவு ஆதி மூன்றும் மழுங்கி உள்ளன. இவற்றை விளக்குதற் பொருட்டே இறைவனால் மாயா காரியமான கருவி கரணங்கள் கூட்டப் படுகின்றன. இவற்றின் கூட்டுறவால் அறிவு முதலிய மூன்றும் சற்றே விளக்க முறுகின்றன. கருவி கரணங் களுடன் கூடி நிற்கையில் ஆன்மாவுக்கு அறிவு விளக்கம் நிகழ்கிறது. இவற்றைப் பிரிந்து நிற்கையில் அவ்விளக்கம் நிகழ்வதில்லை. எனவே உயிரானது கருவி கரணாதிகளுடன் கூடியும், கூடாதும் உடலுள் இயங்குமியல்பினது என அறியலாகும். இதற்காக ஆன்மாவுக்கு ஐந்து வித உடல்கள் உள்ளன. அவை ***தூலம், சூக்குமம், குணம், கஞ்சுகம்,*** காரணம் என அழைக்கப்படும். இவற்றை முறையே தூலம், சூக்குமம், குணம், கலா, மாயா சரீரங்கள் எனவும் கூறுவர். சித்தாந்த நெறிப்படி ஆன்மாவானது எவ் வகையாலும் அசித்தாகாத வியாபகப் பொருளாகிய இறைவனைப் போலப் பூரண வியாபகம் உடையதன்று. அதிசூக்கும சித்தாதலும் இல்லை. ஆனால் சார்ந்த பொருளினிடத்தே அப்பொருளளவாக வசிப்புண்டு வியாபித்திருக்கும் இதனை ***ஏகதேசவியாபகம்*** என்பர். ஆன்மா தூலசித்து எனப்படும். கட்டுப் பட்டு நிற்கையில் பசு எனப்படும். [பசு—தூலசித்து; ஆன்மா—சூக்கும சித்து; சிவம்—அதிசூக்கும சித்தாம்] தூலசித்தாயிருக்கும் நிலை பிறிதொன்றின் உபகாரத் தாலே அறிவதாம். அதிசூக்கும சித்து என்பது, தானே

அறிவதாம். தூலசித்துக்குக் கண்ணெளி உவமை யாம். அதிசூக்கும சித்துக்குச் சூரியனெளி உவமை யாம். உயிரின் பெத்தநிலை பசு எனப்படுவது முத்தி நிலை ஆன்மாவாம் முத்தியிலும் ஆன்மா இறைவனின் வேறு நில்லாமையால் சூக்குமம் எனப்படும். அசுத்த மாயையினின்று உயிருக்கு உண்டாகும் முதற் சரீரமே காரணசரீரம் எனப்படும். எல்லாச் சரீரங்களும் தோன்றுதற்கு இதுவே காரணமாய் நிற்றலால் இதற்கு (மாயைக்கு) ***காரண சரீரம்*** என்பது பெயராயிற்று. இக் காரண உடல் பெற்றதும் உயிர்க்கு அறிவாதி மூன்றும் பொதுப் பிண்டமான விளக்கம் விளையும். மூர்ச்சையிலிருந்து ஒருவன் தெளிந்ததும் முதலில்உள்ள நிலை போல்வது இது. இதன்பின்னர் வருவது ***கஞ்சுக சரீரம்.*** இதனைப் பஞ்சகஞ்சுகம் என்றும் ஓதுப. இது அசுத்த மாயையினின்று உண்டாகும் கலை முதலிய ஐந்து தத்துவங்களாலாயது. அதாவது கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்ற ஐந்தாலமைவதாம். இதனுல் முன்னே சமட்டி ரூபமாய் விளங்கிய அறிவாதியன பகுப்பு (வியட்டி) வகையாகி விளங்கும். முன்னதற்கு இது எதிர்மறையாம். இதன் பிறகு அமைவதே ***குணசரீரம்.*** இது சாத்துவிகம் முதலிய முக்குணங்களாலாவது. இதனுல் உயிர் முக்குணங்களுள் யாதேனும் ஒன்ருேடு கூடியே தொழில் செய்யும் வாய்ப்புறும். இம் மூவகை உடம்புகட்கும் ***பரசரீரம்*** என்பது பெயராம். இம் முக்குணங்களுள் அடங்கி நின்று பிறகு வெளிப்படுவனவே சூக்கும, தூல சரீரங்களாம். மன முதலியன ***சூக்கும உடலா***ம். நரம்பு ஆதியன ***தூல உடல***மாம் ஆன்மா சூக்கும சரீரத்தைப் பொருந்தியதும்

எவ்விடத்தும் போக்குவரவு நிகழ்த்தும். இன்ப துன்பங்களை அநுபவிக்கும். இதன்பின் தூல உடலில் பொருந்தி தூல இருவினைகளைச் செய்து எங்கும் போக்குவரவு புரியும். இன்ப துன்பங்களை அநுபவிக்கும்.

இந்த ஐந்துடல்களின் முறையிலே சாக்கிரம் (நனவு) முதலிய ஐந்தவத்தைப்படும் ஆன்மா. இந்த ஐந்து சரீரங்களையும் ஐந்து கோசங்கள் என்றும் கூறுவர். ஆன்மாவுக்கு இந்த ஐந்து சரீரங்களும் கட்டுப் பட்ட நிலையிலுள்ள வடிவாம். இவற்றுள் ஆன்மா வசிப்புண்டு ஏகதேசியாய்ப் போக்குவரவு புரியும். இந்த ஆன்மா இவ்வுடம்புடைமையால் மூவுலகத்தும் கொள்ளிவட்டம் போலவும், காற்றாடி போலவும் சுழலும்; திரியும். ஆதலால் இக் கோசங்களைப் பறவையாகவும் வேதத்துள் உருவகம் செய்வர். ஆன்மாவின் உண்மை தெரிவதற்கு இந்த ஐங்கோசங்-களையும் பகுத்தறியவேண்டும். ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் வசிப்பது. இதனால் பூதான்மா, முதலான ஆறு வகையாக விரித்து ஓதுவதும் உண்டு. ஆன்மா இப் பஞ்ச கோசங்களையும் அபேதமாய் நின்று செலுத்தும். ஆயினும், என் மனைவி, என் ஊர் இவை போலவே உடல், பொறி, பிராணன், கரணம், அறிவு இவையும் வேறாக வழங்கப்படும். ஆதலால் இவை காலம் வந்தபோது நீங்குவனவாம். இவற்றை நீக்கிக் காண்டலே ***ஆன்ம சொரூபத்***தை அறிதலாம். என் ஆன்மா என்ற வழக்கில் ஆன்மா என்னும் சொல்லுக்குப் பிராண வாயு என்பது பொருளாம். இது ஆகு பெயர் வழக்காம். ஐங்கோசங்களையும் ஆன்மா என்று வழங்குவதும் ஆகு பெயராலாம்.

எண்ணெய், திரி, தண்டு, அகல் முதலியவற்றையும் சேர்த்து விளக்கு என்பதுபோலாம் இது. இதனால் ஆன்மா சித்துப் பொருளாயினும் கருவிகளின் துணையின்றி அறியமாட்டாதென உணரலாம். ஆன்மா மலத்தைப்பற்றிய சித்து. இறைவனே சுத்த சித்து ஆவன். கருவிகளின் துணைகொண்டு அறிகிற கருத்தாவாகிய தன்னுடைய உண்மை நிலையை எது என்று ஆன்மா ஆராயுமேல் ஆன்ம சொரூபம் விளங்கும். இந்த ஆராய்ச்சியறிவு ***பசுஞானம்*** எனப்படும். இதற்கு மேற்பட்டதே பதிஞானம் எனப்படும் சிவஞானமாம். ஆன்மா, சாதன மேற்கொண்டு படிப்படியாக ஞான நெறியனுட்டிக்கையில் குரு திருவருளால் இச் சிவஞானம் விளக்கப்படும். இங்ஙனம் குருமுதல், தன் மலரடிக் கீழ்வைத்தருளுகையில் சிவரூபக் காட்சியின் பயனாக ஆன்மா, தன் நிலையை (இறை வியாபகத்தில் வியாப்தமுற்றுள்ள நிலையை) அறிவுறும். இதனையே ***ஆன்ம தரிசனம்*** என்பர். இதுவே முழுப் பேறு ஆகாது. புலன்களின் இயல்பு அறியப்படாதவரையில் ஆன்மாவுக்கு மலமே தாரகமாம். அறியப்பட்ட பின்னர் சிவம் எப்போதும் தாரகமாயிருப்பது உணரப்படும்.

ஆன்மா, அறிவிக்க அறியும் இயல்பினது. ஐம்பொறி வசப்பட்டொழுகுகையில் தன் சொரூபத்தை அறியாது. ஐம்பொறிகளால் ஆன்மா விஷய விளக்கமே பெறும்; உண்மை விளக்கமன்று. ஆன்மா படிகத்தை நிகர்ப்பது. படிகத்திற் பதிந்த நிறங்கள் படிகத்தின் சுய ஒளியைக் கீழ்ப்படுத்தித் தத்தம் நிறங்களையே படிகம் உடையதாகக் காட்டும். வேற்று நிறம் கலவாதபோது பளிங்கின் நிறம்

வெளிப்படும். இவ்வாறே ஆன்ம சொருபத்தை மயக்குகிற விஷயக் காட்சியைச் சற்குரு தமதருளால் நீக்கியுதவலும் ஆன்மா விஷய அறிவு ஒழியப்பெற்று உண்மையறிவு தலைப்படலுறும். இதன்பிறகுதான் ஆன்மா, ஆணவ மலத்தினிடம் அஞ்சியொழுகும்.

உயிர்கள் ***சுட்டுணர்வும், சிற்றுணர்வும்*** உடையன. கருவிகள் வழியே பொருள்களைச் சுட்டியறிவது சுட்டுணர்வு எனப்படும் அருள் துணையாக அறிவில் காணுங் காட்சி சிற்றுணர்வு எனப்படும். அருளிலே அழுந்தி உணரும் உணர்வினை ***முற்றுணர்வு*** என்பர். எதற்கும் இறைவனே துணைபுரிகிறான் என்பதை அறிவதே ***உண்மையறி***வாம். இதனால், உயிருக்கு எந்த நிலையிலும் வியஞ்சகமாக (காட்டாக) அறிவிக்கும் ஆண்டவன் அருளறிவு அவசியமென நாமறிதல் வேண்டும். இறையறிவு நுட்பமானது. உயிரறிவு தூலமானது. ஆதலால், தூல அறிவு கொண்டு நுட்பத்தைக் காண்டல் ஒருபோதும் இயலாது. கண்ணுக்கு உயிரானது பொருள்களை உணர்த்தினாலும் கண் உயிரை உணராது. காரணம் உயிர், கண்ணினைக் காட்டிலும் நுட்பமுடையதாம் என்க! இனிப் பாடலில் புகுந்து காண்போமாக! பசு—உயிர்—சேதனன் — புற்கலன் — சீவன் — அணு —வியாபகன்—ஆன்மா என்பன ஒரு பொருட் சொற்கள் ஆம்.

**மதி நுதல் பாகன் ஆகி—**

***மதிநுதல்*** என்ற சொல் பிரியாச் சத்தியைக் குறிக்கும். ***பாகன்*** என்னுஞ் சொல் சத்தன் ஆகிய இறைவனைக் குறிக்கும். ஸ்ரீ மெய்கண்டதேவராக

எழுந்தருளியவர் சிவமே என ஆகி என்பதால் அறிதர வேண்டும். எண்ணுவதும் செய்வதுமாகிய இரண்டின் கூட்டமே காரியம் எனப்படும். உயிர்கட்கான எல்லாக் காரியங்களையும் நிகழ்த்துவிப்பது, எண்ணுவதும் செய்வதுமாகிய ஒரே முதன்மை என்று நாமறியலாம். ஒருவர் நமக்கு உதவி செய்யவேண்டுமென்று தமது மனத்தே நினைப்பதாக வைத்துக்கொள்வோம். இதனால் நமக்குக் கைக்குமெய்யாக ஏதும் நன்மை இல்லை. ஆனால் அவரே தம் கையால் உதவியைச் செய்வாராயின் அதுவே நமக்கு நன்மையாகும். ஆதலால் நமக்கு நேரே பயன்படுவது செயல் எனத் தெரியலாம். "அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்" என்ற வாக்கு, செயலின் பெருமை பேசுவதாகும். நினைவின்றிச் செயல் நிகழாதென்பதும் உள்ளத்துக் கொள்ளத் தகுவதே என்றாலும், நினைவு செயலாவது ஆற்றல் எனப்படும். இவ்வாற்றலையே அம்மை என உருவகிப்பர். சத்தி என்ற பெயர் இதனை உணர்த்தும். இதனால், கட்புலனாகாத ஆற்றல் கட்புலனும் வண்ணம் கூறப்படுகையில் சத்தி என உருவகிக்கப்படுதல் தெரியலாம் இங்ஙனம் உருவமுடைமையும் உருவமின்மையுமாகிய இருதிறங்கள் இறைவியாலிருத்தலை ஈண்டு ***நுதல்*** என்னும் சொல்லாலும் அறியலாம். நெற்றி என்னும் பொருள்படும் இச் சொல் தொகையாற்றலால் அன்மொழித் ***தொகை***யாய் நின்று நெற்றியுடையவள் எனவும் பொருள் தருவது காணலாம். இறைவனது விழைவு அறிவு ஆற்றல்களாவது சத்தியே. ***மதி*** என்னும் சொல் சந்திரன் என்ற பொருள் தருவது. பூரண நிலையில் இப் பெயர் கொள்வது. இது தரும் நிலவின் குளிர்ச்-

சியே அருளுடைமையாகிய இச்சையை உணர்த்தும். கதிரோனால் மதி ஒளிருகிறது. இங்ஙனமே சத்தனால் சத்தி ஆற்றுகிறது என்னலாம். மற்றும் இச் சொல் அறிவு எனவும் பொருள் தருவதாம். இதனால் இறைவனது ஞானமும் சத்தியே என்ப. மதி ஒன்றே மூன்று வகையாய்ப் பொருள்படுதல் போன்று, சிற்சத்தி ஒன்றே இச்சையாதி மூன்றாகியுதவுகின்ற தென்னலாம். இறைவனின் சங்கற்பத்துக்கு ஏற்பச் சத்தி விரிதலும் ஒடுங்குதலும் உடையது. மதியும், தேய்தலும் வளர்தலும் உடைமை கண்கூடாம். சத்தனின் விருப்பிற்கிணங்கியவாறெல்லாம் சத்தியே வடிவங்கொள்ளும் என்பது நூல் துணிபு. எப்போதும் நமக்கு வேண்டுவன யாவும் ஆக்கியளிப்பது *திருவருளே*யாம். இவை யாவும் நமக்குப் புலப்படுமாறு ***மதிநுதல்*** என்று இச் செய்யுளில் தொடக்கம் செய்துள்ளார் ஆசிரியர். யாண்டும் சத்தியை நடத்துவோன் சத்தனே. நிலைப்பும் இயக்கமும் ஒன்றுபட்டியல்வதைப் ***பாகன்*** என்னும் சொல் காட்டும். இடப்பாகம் இயக்கத்திற்கு இடமாம். மற்றும் பாகன் என்னும் பதம் செலுத்து-பவன் என்றும் பொருள்படும். அங்ஙனம் கொள்ளினும் மேலுள்ள கருத்துக்கு முரணுமாறில்லை. யானை ***இயங்குவதும்*** பாகன் ***இயக்குவதும்*** தெரிந்த செய்தியேயாம். " மடப்பாவை இடப்பால் கொண்-டான் " என்ற தொடரிலும் பாவை என்னும் சொல்வைப்பு இதற்குத் துணை நிற்பதே. ***ஆகி*** என்ற சொல்லால் அங்ஙனம் ஆதற்கு முந்தியும் ஒரு நிலை உண்டென்பதை உணர்த்தும். அருள் ஆள்வதற் பொருட்டு ஆன்மாக்கட்காக இங்ஙனம் ஆயினன்

என்பது போதரும் இங்ஙனம் ஆயதும் காலாதீத நிலை என்பதைக் குறித்தற்பொருட்டே ***ஆகி*** என இறந்தகால எச்சமாகக் கூறினாராவர். "மலர்மிசை ஏகினான்" என்ற குறட்பாவில் "ஏகினான்" என்னும் சொல்லுக்கான குறிப்புகளையும் ஈண்டைக்கு ஏற்கலாம். இங்குள்ள கருத்தை ஆண்டைக்குப் பரிமாறியும் பார்க்கலாம். ***ஆகி***—தர—தோன்றி—நண்ணி—புகுந்து — செய்து—காட்டி — ***காட்டினை*** என முடிபு கொள்ளுக. "பாகத்து அருள் வடிவும் தானு***மாய்*** ஆண்டிலனேல்.........உணர்வு எங்கே" என்ற திருக்களிற்றுப்படியார் அடிகளை ஈண்டு நினைதல் நல்லது. இங்ஙனம் ஆகியமை தன் பொருட்டன்று ; நம் பொருட்டே என்பதைத் ***தர*** என்ற சொல் உணர்த்தும். முதல்வன் நமக்கு (சகலருக்கு) உதவும்போது சகலர் வடிவேற்றே வருதலையும் இத் ***தருதல்*** சொல் கருத்தாகத் தரும். ***தா*** என்னும் கொடைப் பொருட்சொல், கொள்வோர் ஏற்போர் இருவரும் ஒருசார் நிகரினராய் நிற்றலைக் காட்டவல்லதாம். நமக்கு நீங்கவேண்டுவது அவகதி. ஓங்கவேண்டுவது ***சிவகதி. " தருவாய் சிவகதி*** நீ பாதிரிப்புலியூர் அரனே" என்னும் அப்பர் சுவாமிகள் திருவாக்கும் காணல் தக்கது. ஆதலால், நமக்கு ***நற்கதி***யைத் தரும் பொருட்டே இங்ஙனம் முதல்வன் வருகின்றான் என்பதைக் ***கதிதர*** என்ற தொடர் தெரிக்கும். தாம் குலாசாரியத் தொண்டு புரியும் எல்லைக்குள்ளேயே-அதிலும் தமதூருக்கு அண்மையி-லேயே—நெடுந் தொலைவு தம்மைத் திரிந்தலையவிடாத படிக்குக் குருமூர்த்தமாய்க் குறுகிய பேருதவியை நினைந்து இங்கே ***வெண்ணெய்த் தோன்றி*** என்

றுள்ளார். திருவவதாரம் செய்தருளிய பதி வேரு யிருப்பவும் வெண்ணெய்ப் பதியகத்தே எழுந்தருளி யிருந்து தம்மை ஆட்கொண்டருளியமை தோன்ற இங்ஙனம் ஊர் குறித்துரைத்தாராவர். *ஆகி—தோன்றி* என்ற எச்சங்களால் சிவமே இவ்வாசாரியத் திருக் கோலம் பூண்டதென்பதை அறுதியிட்டுக் கூறுகின்ருர்.

**நண்ணி உள்புகுந்து என் உளம் வெளிசெய்து அளவில் காட்சி காட்டி எற் காட்டினை — எனினே —**

ஆன்மா பாவ நெறி விலக்கிப் பசு புண்ணியம் எனப்படும் உலகியலறம் செய்து உபாயச் சரியை கிரியையாதிகள் முற்றி அப்புண்ணிய பலத்தால் உண்மைச் சரியை கிரியை யோகங்கள் புரியலுற்று அப்புண்ணியத்திறனல் உண்மையறிவுக்கான வழி திறக்கப்படுதலுற்று அறிவின்கண் இருவினை ஒப்பு ஏற்பட்டு, மலம் பரிபாகமுறத் தொடங்கியதும் அருள் வீழ்ச்சி நிலை அடையப்பெறுகிறது. இதனுல் கடவுளை அடைதற்கான உரிமை தனக்கிருத்தலை ஆன்மா அறியப் பெற்று அதற்கான சாதனம்பற்ற அவாவு-கின்றது. இதுவே பரிபாக காலம் அல்லது பக்குவ நிலை எனப்படும். இனி ஆன்மாவுக்கு ஊன நாட்டம் நீங்கி ஞான நாட்டம் மேலிடுதற்கான அவதரம் விளைகிறது, இந்த நிலை நணுகியதும், அதுகாறும் ஆன்ம அறிவுக்குள் அறிவாகியிருந்து செலுத்திக் கொண்-டிருந்த முதல்வன் அப் பக்குவ ஆன்மாவுள்ள இடத்தை நண்ணுகின்ருன். இவ்வாறு, இரும்பைக் காந்தம் கவர்வது போலும் சீடனைத் தன்பால் இழுத்துத் கொள்ளுதற் கேற்ற நிலைமையை இறைவன்

தனது பேரருளால் மானிடத்திருக் கோலம் தாங்கி வகித்துச் சேருதலே, ஈண்டு *நண்ணி* எனலானுர். இதனுல், ஞான நெறியில் தலைப்படுதற்கான தகுதிப் பாடு நமக்கு எய்தினுலன்றி ஞானுசாரியரைச் சிறப் பதிட்டான மெனப்படும் ஆவேச பக்ஷமாக நாம் தரிசிக்கப் பெறுதல் ஒரு போதும் இயலாதெனை அறிய லாம். நமக்கு உள்ள அறிவு, சார்ச்சிவேறுபாட்டால் இருவகையாக விளங்கும். அவற்றுள், நிலையில் பொரு ளாகிய தனு கரண புவன போகாதிகளுடன் சார்ந்து சுட்டுணர்வு விளக்கம் அடைதல் ஒன்ருகும். இந்த-நிலையில் உயிர், இதனின் மேலானதொரு விளக்கம் எய்தப்பட வேண்டுமென்ற எண்ணமில்லாமலே விஷய விளக்கமே உண்மை விளக்கமெனத் திரோத கத்தால் எண்ணி அழுந்திநிற்கும். இப்பால், மேற் சொல்லப்பட்ட பக்குவங்கள் படிப்படியாக நிகழ்ந்த பின் நிலைத்த பொருளாகிய சிவத்தின் திருவருளை உணர்ந்து அதன்கண் அழுந்த அவாவுறும். இந்த அறிவு இரண்டாவது ஆகும். இந்த விஷயத்தைப் "பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவல் *படிவழி* சென்று சென்று ஏறி" என்னும் ஒன்பதாந் திருமுறையிலுள்ள கருவூர்த் தேவர் பாடலால் அறியலாகும். தத்துவங்களைப் பொய் எனவும், தானல்ல எனவும் ஆன்மா அறிவுறும் நிலைமை ஆசான் வாயிலாக விளைவதேயாகும். இங்ஙனம் உண்-மைக்காட்சியை உணர்த்தும் பொருட்டு இறைவன் ஆன்ம அறிவுக்குள் அறிவாய் இருந்து காட்டுகின்ருன், இதுவரை தத்துவங்கள் காட்டும் நெறியே சென்றிருந்த உயிர், இறைவனின் உட்புகுந்து நிகழ்த்தும் காட்டு முபகாரத்தால் உண்மை விளக்கம் இன்னதெனை அறிய லுறுகின்றது. இந்த நிலைமையை நம் இந் நூலாசிரியர்

***உள்புகுந்து*** என்ற தொடரால் நமக்குணர்த்தியுள்ளாராவர். உடனுய் மன்னிப்புரியும் உதவியை இந்த இடம் குறிக்கும் இங்ஙனம் முதல்வன் புறம்மே காட்சியளிப்பதோடு உள்ளத்துள்ளும் மன்னி (அதாவது ஆன்மாவின் குறையுணர்வைத் தம் நிறையுணர்வுக்குட்படுத்தி) ஒளிரவைக்கின்ற போது இருள் நீங்கப்பெற்ற இடம்போல் உள்ளம் பிரகாசிக்கும்; அந்தக்கரணங்கள் தூய்மையுறும். இத் தூய்மையின் பின்னர்த்தான் தெளிவுக்காட்சி நிகழும். இந்த நிலையினை ஆசிரியர் ***உளம் வெளி செய்து*** என்று கூறியுள்ளார். அதுகாறும் இருளடைந்து குறுகிக்கிடந்த உள்ளம், இதுபோது ஒளியுற்று விரிவடைவதனால் இங்ஙனம் கூறிக் காட்டியுள்ளார். உள்ளம் வெளியாகி ஒளிபெற்றுத் தெளிந்த அறிவு நிலையுற்றபின்னர், ஆசாற் காட்சி தெய்வக் காட்சியாகவே தோன்றலுறுகின்றது இதனை வியாபகக் காட்சி என்பர். இஃது எல்லையற்றதொரு மாட்சி பெற்ற காட்சியாதலின் அளவுபடாததாகும். [கிருட்டினன், அருச்சுனனுக்கு விசுவரூபங் காட்டிய காட்சி இங்கு உவமைக்குக் கருதத்தக்கது ] இத்தகைய நிலையை நமக்குத் தெரிவித்தற்கருதியே ***"உன் அளவு இல் காட்சி காட்டி"*** என்றுள்ளார் ஆசிரியர். இந்த நிலையில் உயிரின் இயல்புண்மை எத்தகையதென்பதும் விளங்கும். கதிரோன் ஒளி முன்னர், தீப ஒளி எவ்வாறு காணப்படுமோ அங்ஙனம் ஆன்மாவின் சிற்றுணர்வு இருத்தல் தெரியவரும். இதனையே ***எற்காட்டினை*** என்ற தொடர் காட்டும். இங்ஙனம் உயிர் தன் இயல்பினை உண்மையில் அறிதலே ***ஆன்மதரிசனம்*** எனப்படும். ஆவியின் இயல்-

புண்மையே ஆன்ம தரிசனமாம் என்க இங்ஙனமன்றி, அளவில் காட்சியினைக் காணுமலே தற்காட்சியை ஆன்மாகண்டு தன்னையே பிரமமெனை மதித்தலும் நிகழும். இது தவறெனக் காண்பதே முற்றுணர்வுக்கு வழியாம். ஞானநூல்களை ஒருவாறு ஓதித் தானே ஆராய்வு செய்யப் புகுந்து தத்துவக்களைவு புரிந்து நிற்பதால் இந்த விபரீதக்காட்சி நிகழ்வுறும். இதனை மேலானதன்று என நாம் தள்ளிவிடவேண்டும் இதுவே சித்தாந்தநெறி அறிவுறுத்துவது. ஞானு-சாரியரின் மாசறு காட்சிப்பயன் சிவதரிசனமேயன்றி ஆன்மதரிசனம் அன்றும் என்ப. இவ்வாசிரியர் கூறியுள்ள இவ்வநுபவத்திற்கு ஒத்திருப்பதாக, "மணி-முடி வானவர் தமக்குச் சேயனுய், அடியேற்கு *அணியனுய் வந்து என் சிந்தையுள் வெந்துயர் அறுக்கும்* ஆயனுய்" எனப் பிற அடியார்கள் கூற்றும் கண்டு உறுதிப்படல்தகும். இதுகாறும் கூறிய பகுதியால் ஆன்மாவானது ஆசாரியன் அருள் புரிதற்குமுன்பு சுட்டறிவும் சிற்றுணர்வுமே உடைய-தாயிருப்பதென்பதும், அவரது அநுக்கிரகத்துக்குப் பின்பு வியாபகத்துவத்தையும் முற்றுணர்வையும் எய்துகின்றதென்பதும் தெரிதல் வேண்டும்.

எனினே —

இங்ஙனம் ஆசாரியர் தமதியல்பினையும், ஆன்மா-வின் இயல்பினையும் தரிசனப்படுத்திவைத்தும் — இனி, இவ்வாசிரியர் நம்பொருட்டாக, ஆன்ம உண்மையும் வியாப்தமும் பற்றிச் சில ஐயங்களை வினவி நம்மைத் தெளிவித்துதவுகின்றுராவர்

**நாட்டி என் உண்மையும் (நுண்மையும்) பெருமையும் நுவலில்—**

ஞானசாரியர், சீடனுக்கு ஆன்ம சொரூபத்தையும், அதன் வியாபகத்தையும்பற்றி உபதேசம் செய்த பின்பும் அவைபற்றிச் சீடனுக்கு ஐயப்பாடுகள் எழக்கூடும்எனத் தாம் செய்துகொள்ளும் இவ்விண்ணப்பத்தால் நமக்கு அறிவிக்கலா-கின்றனர் இவ்வாசிரியர். தேவரீரால் அறுதியிட்டுக் கூறப்பட்டன என்னுடைய நேர்மையும் வியாபகமும். ஆன்மாவின் தடத்த சொரூப இலக்கணங்களையும், அதன் வியாபக நிலைமையையும் பற்றி முன்னே ஆன்ம இலக்கணங் கூறியுள்ள இடத்தே கண்டுகொள்க !

**அண்ணல் —**

தம்பிரானே! தமக்கு மேற்பட்டாரில்லாதபெரியவர் என்பது கருத்தாம். இதனால் ஐயம் தெளிதற்குரிய இடமாவார் பிறரிலர் என்பது போதரும். மற்றும், அத்துணைப் பெருமையுடையராயினும் யாவரும் நெருங்கி விண்ணப்பித்துக் கொள்ளக்கூடிய அவ்வளவு எளிமையும் உடையவர் தமது ஞானசாரியர் என்பது காட்டுதற்கு ***அண்ணல்***—என்றார். (அண் = நெருங்கு) அண்ணல் = நெருங்கத் தக்கவர். இதனால் அருமையும் எளிமையும் ஒருமையுற்றிருக்கும் நிரதிசயத் தன்மை காட்டப்பட்டதென்க. மேலும், ஞானசாரியத் திருக் கோலங் கொண்டெழுந்தருளுகையில் தமது சிற்சத்தியைக் குணமாகக் கொண்டெழுந்தருளு கின்றார் என்பது புலப்படவும்; இப் பெயரிட்டு

விளிக்கலுற்றார் என்னலாம். அண்ணல் என்னும் சொல் பெண்பால் கூறப்படாத ஆண்பாற் பெய-ரென்பது இலக்கணம். இனி ஆன்ம வியாபகம் பற்றிய விண்ணப்பம் எழுகின்றது.

**பாதாள சத்தி பரியந்தம் ஆக ஓதி உணர்ந்த யானே ஏக முழுதும் நின்றனனே—**

ஆன்மாவானது, இவ்வுலகம், சுவர்க்கம், நரகம் என்கிற மூவுலகளவும் செல்லுதல் வருதல் உடையது. ஞான நூல்களை ஓதுவதனால் இவ்வுலகங்களின் இயல்புகளை உயிர் அறியலுறுகிறது. அறிதலாவது அவ்விடத்து அதன் வியாபகம் உளதென்பது தெரிதலாம் எனவே, மூவுலகும் வியாபகமுடையது உயிர் என்பது தெரிதருகின்றதே! அன்றியும்,

**முதல்வ!**

உலகுயிர்கட்கெல்லாம் முதன்மையாக உள்ளவன் இறைவன் என்பது இவ்விளியால் உணர்த்தப்படுவது. " படைப்போற் படைக்கும் பழையோன் " எனவும், " முழுவதும் இறந்த முதல்வ " எனவும் கூறப்படும் திருவாசக வரியுரைகள் ஈண்டுச் சிந்திக்கத் தக்கன. இதனால் எல்லா ஆன்மாக்களுக்கும் உணர்த்தும் முதல்வன் இறைவனே—அவனேயாகிய ஞான-சாரியனே என்க!

**முழுதும்**—(முழுத்தும் எனவும் பாடம் உண்டு)

இவ்வாறு மூவுலகும் ஓதியுணர்ந்து வியாபிக்கும் அறிவுடையவனாக யான் (ஆன்மா) இருந்தும்,

**புலன்கடைப் பூழை நுழைந்தனன்—**

ஒரு பொருளை அறியப் புகும்போது, உயிரானது செவி முதலிய துவாரங்களின் மூலமாகவே அறிய லுறுகின்றது. இதனால் ஒவ்வொன்றாய் அறிய முடிகிறதேயன்றி ஐந்தையும் ஒருங்கே அறிய முடிய-வில்லை என்பது தேற்றம். இதுகொண்டு நோக்கின், முற்கூறிய வியாபகத்துக்கு இழுக்குத் தோன்று கின்றதே! "ஓரிடத்துணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்" என்ற சித்தியார் உரை இங்கு ஏற்றல் தக்கது. மற்றும்,

**கலங்கி ஆங்கு ஐந்து அவத்தையும் அடைந்தனன்:—**

ஆன்மா அறிவும் அறிவைவிட்டு நீங்கி மயங்கிய போது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்பட்ட ஐந்தவத்தையும் படும். பழுக்கக்காய்ந்த இரும்பு நெருப்புச் செய்யும் வேலையைச் செய்யவல்லதாயிருந்து படிப்படியாக வெம்மைதணியப்பெற்று வெறும் இரும்புநிலை எய்தும். இதுபோன்றதே அவத்தைத்தன்மை. தூலம் முதலிய ஐந்துவித சரீரங்களைப் பொருந்தி நிற்கும் முறைமையில் சாக்கிரமுதலான ஐந்தவத்தைப் பட்டு நிற்கும் ஆன்மா. ***சாக்கிரம்*** முதல் கூறுவது ஒடுங்கு நிலையாம். சாக்கிரமென்பது எல்லாக் கருவி-களோடும் கூடி நிற்கும் நனவு எனப்படும் அவத்தை யாம். ***சொப்பனம்*** இரண்டாவது அவத்தையாகும். இதில் தூல உடம்பு தொழிற்படுவதில்லை. இதனைக் கனவுநிலை என்பர். ***சுழுத்தி*** என்பது மூன்றும் அவத்தையாகும். இது சுகமாய்த் தூங்கினேன்

என்று சொல்லப்படும் நிலையாம். இதனை ஒன்றுந் தெரியாநிலை என்பர். ***துரியம்*** என்று சொல்லப்படுவது நாலாவது அவத்தை. இது பிராணவாயுமட்டில் இயங்க மூர்ச்சித்துக் கிடக்கும் நிலையாகும். மூர்ச்சை தெளிவடைந்தபிறகு ஒன்றும் தெரியவில்லை என்றே இதுவும் சொல்லப்படும். ***துரியாதீதம்*** பிராணவாயு இயக்கமும் இன்றி மூர்ச்சையுற்றுக் கிடக்கும் அவத்தையாம். ஆன்மா இவ்வைந்தவத்தைகளில் போக்குவரவு புரிதற்கு அரசன் பவனிபோய் மீளுதலை உவமையாகக் காட்டுவர். அவத்தைகட்குரிய தத்துவங்களை அவத்தை தன்மை விரிக்கும் நூல்களால் அறியலாம். இந்த ஐந்து அவத்தைகளும் கேவலம் முதலிய மூன்றால் பதினைந்து வகைப்படும். இவற்றைக் கீழாலவத்தை — மேலாலவத்தை — மத்தியாலவத்தை எனவும் கூறுப. இவையன்றி நின்மல சாக்கிரம் முதல் ஐந்து காரண அவத்தைகளும் உண்டு. இதனால் ஆன்மா அறியாமையைச் செய்யும் மலத்தோடு சார்ந்த வழி அறியாமையாக நிற்கும் எனவும், கருவி-களைச் சார்ந்து நிற்கும் வழி ஏகதேசத்தைச் செய்யும் எனவும், சிவத்தைச் சார்ந்தால் வியாபகமாக நிற்கும் எனவும் தெரியலாகும்.

**நீங்கி போக்கு வரவு புரிந்தனன் —**

சகலத்தில் ஐந்தவத்தைப்படும் வாதனைச் சரீரம் விட்டு நீங்கியபின் திரும்பவும் ஒவ்வொரு சரீரத்தையும் ஆன்மா எடுத்துலவும். " உறங்கி விழிப்பது போலும் பிறப்பு " என்றது வள்ளுவர் கூற்று. ஆதலால், ஆன்மா ஓதி யுணர்ந்த இடமெங்கும் அறிவதும், புலன்கள் வழியும் கருவிகள் கூட்ட நீக்க வழியும்

மயங்கி அறிவதும், பிறப்பு வேறு எடுத்து அவ்வப் பிறப்புக்கு ஏற்ப அறிவதும் இப்படி மூவகையாக ஆன்மாவின் அறிவு வியாபகம் இருத்தலால் எது உண்மை என்ற மயக்கம் ஏற்படுகிறது. ஆதலால், அந்த ஐயப்பாட்டினை அகற்றி யருளுமாறு இனிவரும் வாசகங்களால் ஆசிரியர் வினவலுறுகின்றார் ஆவர்.

**தூக்கி எவ்விடத்து உண்மையும்—இவ்விடத்து ஆர்தலும்— செல்இடத்து எய்தலும் தெரித்த மூன்றினுள் ஒன்று எனக்கு அருளல் வேண்டும்.**

தன் மனத்து ஐயம் நீங்குமாறு கற்பித்தல் வேண்டு மென்பதற்காகவே ***தூக்கி*** என்றார். தூக்குதல் ஆராய்தல். இங்கு இச் சீடற்கு உள்ளத்து உள்ள எல்லா ஐயப்பாடுகளும் அகலுமாறு போதித்தற் காவன சிந்தித்தலே தூக்குதல் எனப்படுவது. ஆன்மா, யான் எனது என்னும் செருக்குறுதற்கு ஏது வான ஆணவமலத்துடன் கூடியுள்ளது. இதனால் உயிருக்குத் தனக்கென அறிவில்லை. அந்தக் கரணங் களோடு பொருந்திச் சங்கற்பித்தலாதியவால் அறியும். அவற்றை உட்கருவியாக்கி அகத்து நிகழ்வதை அறியும். இங்ஙனம் அகத்தும் புறத்தும் சேர்ந்து ஐந்தவத்தை யுறுதலே ஆன்மாவின் பொதுத் தன்மையாம். இங்ஙனமே நூலறிவோடு கூடுகையில் நூலைச்சார்ந்து அதனெல்லைவரை உணரும். இது வியாபக அறிவெனப் படாது. பதிஞானமொன்றே வியாபக அறிவாம். கருவி கரணங்களை வேறானவை என்றறிந்து நீங்கிக் கருத்தாவினுண்மை ஆராயப்படும். இவர்கள் காண்பதே ஆன்ம சொருபமாம். இதுவும் பசுஞானம் எனப்படும். ஏனெனில், இந்நிலை எய்திய பிறகு இந்த

அறிவு முன்னே நம்மிடம் நிகழவில்லையே என்பது தோன்றும். இதனுல் இதனைத் தோற்றி அறிவிக்கும் பொருள் வேறிருத்தலை உணரும். இங்ஙனம் தேறும் போதுதான் பசுஞானத்தின் மேலான சிவஞானம் விளங்கலுறும். உருவப் பொருளனைத்திலும்கூடுதலும், அவற்றை அறிதலும் வியாபகம் எனப்படாது. இதனுல் ஆன்மா, சார்ந்த பொருளிடத்து அப்பொருளாகவே வசிப்புண்டு வியாபித்திருக்கும் ஏகதேச வியாபியாகும். இவ்வுண்மைகள் நமக்கு விளங்குதற் பொருட்டே "அடியேன் ஓதியுணர்ந்த இடமெங்கும் அடியேன் வியாத்தமாயிருத்தல் என்பது என்னை ?" என்னும் பொருள் படுமாறு ***எவ்விடத்து உண்மையும்*** அருளல் வேண்டும் என்றனர் ஆசிரியர். இதனுல் இடத்து வியாபித்தல் நிலை கூறப்பட்டது. சுட்டியுணரப்படும் இடத்து அறிவு வியாபித்தல் உண்மை வியாபகமன்று என்பது இதனுல் விளங்குவதாகும். மற்றும், இப்போது அடைந்துள்ள பிறப்பில் மாயாகருவிகளுடன் கூடித் தத்துவருபமாய் நின்றறிகிறதே தவிரக் கருவிகளின் துணைவேண்டாமல் இறைவன்போல ஆன்மா அறியாது. காரணம், ஆன்மா சுத்தசித்தன்று. அதாவது மலத்தைப் பற்றுத சித்தன்று. இதனுலும் ஆன்மவியாபகம் குறையுடைமையாகக் காணப் படுதலின், ***இவ்விடத்து ஆர்தலும்*** அருளல் வேண்டும் எனக்கேட்கலுற்ருர் ஆசிரியர். மேலும், இச்சரீரத்தை விட்டுக் கன்மபலன்கட்கு ஏற்பச்சுவர்க்க நரகங்களிலே சென்று முறையே இன்ப துன்பங்களை அறியும்போதும் அதுவதுவாகவே இருந்து அநுபவித்தலால் இந்நிலையிலும் ஆன்மவியாபக சந்தேகம்

இருந்தே தீர்தலின் ***செல்இடத்து எய்தலும்*** அருளல் வேண்டும் எனலானுர் என்னலாம். இவ்வாறு நிகழும் மூவிடத்து வியாபகமும் எத்தகையன என்பதும், எது உண்மை வி யா ப க ம் என்பதும் ஐயமறத் தெரிந்துகொள்ள அவாவியே ***தெரிந்த மூன்றில் ஒன்று எனக்கு அருளல் வேண்டும்*** என்ருர். "வசித்திட வரும் வியாபி எனும் வழக்குடையனுகி" என்பது சித்தியார்க்கூற்று.

இப்பால், தமது ஞானசாரியர், மேற்குறிக்கப் பட்ட வியாபக நிலைகளில் ஒன்றுதான் ஆன்மாவுக்-குரியதென்பதில்லை. அவை மூன்று பகுதியுமே ஆன்மாவுக்குண்டு என்று தெரிவித்தருளியதாகக் கொண்டு இதன்மேல் எழும் ஐயங்களைக் கேட்டலுறு கின்றனர் ஆசிரியர் "சூக்குமதேகியாகி" என்னும் சித்தியார்ப்பாடல் இங்கு உணரத்தகும்.

**என்றும் இல்லது இலதாய் உள்ளது உளது என்னும்**
**சொல்லே சொல்லாய்ச் சொல்லும் காலை —**

ஒருபொருளின் குணம் எப்போதும் உள்ளதே-யாகும். இல்லாதது ஒருபோதும் உண்டாகாது. உள்ளது ஒருபோதும் ஒழியாது. இதுவே நியாயம்: இதுவே அறுதியிட்டுக்கூறும் உறுதி. ஆதலால். ஆன்மாவின் வியாபகம் எப்போதும், எவ்விடத்தும், எவ்வுடலினும், ஒருபடித்தாக இருந்தே தீருமன்ருே ! அப்படியின்றேல், ஒருபோதும் வியாபகமென்பதே இல்லையென்ருகுமே ! ஆகையால், ஆன்மா எனப்-பட்ட முதல் ஒருபோது அணுவாய்ச்சிறுத்தலும், மற்ருெருபோது மகத்தாய்ப்பெருத்தலும் எப்படி

முடியும். இவ்வாறு மாறுபடுவது வழக்காகாதே என்று கேட்டற்பொருட்டு, ***சிறுத்தலும் பெருத்-தலும் இலவே*** என்றார்.

**நிறுத்தி யானை எறும்பின் ஆனதுபோல் —**

ஆன்ம வியாபகம் அப்படி ஒருபோதும் மாறி மாறி வராது. அது ஒரே மாதிரிதான் இருப்பது. ஆனால் அது கூடும் சரீரத்தைப்பற்றி அதுவாய்க் காண்கின்றது. ஆதலால், வியாபக மாற்றமேதுமில்லை என்று ஞானசாரியர் கூறுவதுபோல இவ்வரி அமைக்கப்பட்டுள்ளது. உயிரானது மாயா காரியமான உடம்பை விளக்காகக் கொண்டு விஷயங்களைக் காணும். உடம்பில்லாத காலத்து அறிவு நிகழ ஒட்டாமல் செய்வது ஆணவ மலம். விறகு, கல், இரும்பு முதலியவற்றில் அக்கினி கேடில்லாமல் இருப்பது காணலாம். உயிர் அக்கினி போல்வது. ஆணவம் விறகு முதலன போல்வது. எனவே கட்டை, சூரியகாந்தக் கல், இரும்பு முதலியவற்றில் உள்ள அக்கினிக்கு அதன் தன்மையில் மாறுபாடு ஏதும் இல்லை. ஆனால் அவ் வியல்பு வெளித் தெரிவதில்லை. இப்படித்தான் உடம்பு வேறுபாடுகளுள் இருக்கும் உயிரியல்பு எனத் தெரிக என்பதாம் இவ்வரி உணர்த்துவது. இதனை, "மாயா தனு விளக்காம்" என்னும் சிவஞானபோதச் சூத்திர வெண்பாவால் உணரலாம். உயிரறிவு ஒரு படித்-தாகவே இருத்தலை ***நிறுத்தி*** என்ற சொல் காட்டுவதாகும்.

**எனில் —**

என்று இப்படித் தேவரீர் அருளிச் செய்வீராயின், இதற்கு மேலும் ஐயம் எழுவதுண்டு; அதனையும்

விண்ணப்பிக்கின்றேன் என்று சொல்லி மேலேயும் ஐயத்தினைக் கேட்கலுறுகின்றார் ஆசிரியர்.

**ஞானம் இன்று அவை காய வாழ்க்கை —**

அடியேன் கேட்பது ஆன்ம வியாபகம் எனப்படும் அறிவைப் பற்றியதாகும். அதனைக் குறிக்கவில்லை தேவரீர் அருளியது என்பதற்கு ***ஞானம் இன்று*** என்றார். ஆனால் தேவரீர் கூறும் மாறுபடா நிலை சூக்கும உடம்பெனப்படும் சரீர வாழ்க்கையைப் பற்றியதாக உள்ளது எனத் தெரிவிக்கு முறையில் ***அவை காய வாழ்க்கை*** என்றார்.

இதன்மேல் ஞான—ஆசிரியர் அறிவிப்பதாகக் கூறப்படும் வாசகம் ***மற்று அவை அடைந்தன உள*** என்பதாகும். இதன் செய்தியாவது, அறிவாயுள்ளன ஆன்மாக்கள். அவை கன்மத்துக்கேற்ற ஒவ்வொரு சரீரத்தோடு கூடும். அப்போதும் அதற்குத் தக்கதாக அறிவு சீவித்து நிற்கும் என்பதாம். ***தருக்க நூலுள்*** இவ் விஷயம் கூறப்படுவதைக் காண்போம் இதனைத் தருக்க நூல் ***பிரேத்திய பாவம்*** என்னும் — (பிரேத்தியபாவம் = Transmigration.) இது யாதெனில் ஆன்மாவுக்கு இறப்பின் பின் உண்டாம் பிறப்பு ஆம். இறப்பாவது கன்ம வயத்தால் கிடைத்த உடம்பை விட்டு ஆன்மா நீங்குதல். பிறப்பாவது கன்ம வயத்தால் சம்பவிக்கும் புதிய உடம்பைக் கூடுதல். ஆன்மா கன்ம வயத்தால் சம்பவிக்கும் உடலோடு கூடுதல் சரீரப் பிராணனது ஆதி சையோகமாம். உடலை விட்டுப் பிரிதல் அந்திய சையோகத்தின் நாசமாம். ஆன்மா வியாபகமா

யிருந்தும் அஃதெங்ஙனம் கூடும் எனின், ஆகாசத்துடன் குடம் கூடிப் பிரிவது போலாம். இங்ஙனம் கூடிப் பிரிவதே வினைவயத்தால் ஆன்மாவுக்கு நிகழ்தலின் ஜீவான்மாவுக்கு இது கூடும் என்பதாம். இந்த நியாய நூற் கூற்றினையும் ஈண்டைக்கு ஓர்தல் பொருந்தும். "செறிந்திடும் உடலுள் மன்னி" என்னும் சிவப்பிரகாசத்து உண்மையதிகாரம் ஆன்ம விலக்கணமுரைக்கும் பாடலாலும் இச் செய்தி பேசப்படும்.

இவ்வாறு ஞானாசாரியர் தெரிவித்தலும் இதன் மேல் தோன்றும் ஐயம் ஆசிரியரால் விண்ணப்பிக்கப் படுகின்றது. அது யாதெனில், ***அற்றன்று*** = அஃது அப்படியன்று ; அது யாதெனக் கேட்டருளுமாகில், எனச் சொல்லிக்கொண்டு மேலும் சொல்லலுறு-கின்றார் நூலாசிரியர்.

**விட்ட குறையின் அறிந்து தொன்று தொட்டு வந்தன வேண்டும் —**

விட்ட குறையாவது முன் செய்துவிட்ட காரியம் பின்னும் நினைவுக்கு வருதலாம். விட்ட இடத்திலிருந்து மேற்காரியத்தை முடிக்குமளவும் முயல்வதற்கு இவ்வறிவு துணைபுரிவதாகும். இவ்வறிவு விடாது நிகழ்வதனால் தொன்றுதொட்டு நிகழ்வதெனப்படும். இந்த முறையில் கொண்டால், முன்னே எடுத்துவிட்டு வந்த பிறப்புகள் இன்னின்னவை என்று ஞாபகம் வரவேண்டும். அப்படி வரக்காணோம்.

இவ்வாறன்றிக் கூடின பிறப்புக்குத் தக்கதாக ஆன்மா அறிந்து சீவிக்கும் என்பதை அந்த அந்தக்

காலத்தும் எடுக்கப்பட்ட சிறிய பிறப்புக்கும் பெரிய பிறப்புக்கும் ஏற்ற அறிவாக அறிந்து சீவிக்கும் என்று பொருள் கொள்ளவேண்டும் எனத் தெரிவிப்பதாயின், அதுவும் முறையாகாது. எவ்வாறெனில்,

**நட்ட பெரியதிற் பெருமையும் சிறியதில் சிறுமையும் உரியது நினக்கே உண்மை—**

***கூடிய தன் தன்மை*** என்று நாட்டிச் சொல்லிய வாசகத்தின் உண்மை ஆன்மாவுக்குரிய சுதந்தரமாகப் பொருந்துவதில்லை. பெரிய பிறப்புக்கேற்பப் பெரிய அறிவுடைமையும், சிறிய பிறப்புக்கேற்பச் சிறிய அறிவை அடைதலும் ஆன்மா எப்படி அடைய முடியும்? அப்படி அடையும் தன்னிச்சை அதற்கேது? அணுவுக்கு அணுவாகவும் மகத்துக்கு மகத்தாகவும் இருக்கும் இயல்பு தேவரீருக்கே (கடவுளுக்கே) உள்ளதாகும். தேவரீரோ *பெரியீர்*—மகத்தாயிருக்கப்பட்டவராயுள்ளீர். ***எனக்கு இன்றுகும்*** — அவ்வியாபகத்தன்மை அடியேற்கு இல்லை. ஆதலால் ***என்றும் மனக்கு இனியாய்!*** — எப்போதும் என்மனத்துக்கு இனிமையாய் இருப்பவரே! ***இனி மற்று அதுமொழியே*** — இனியாகிலும் அடியேன் முன்னே கேட்டவினுவுக்கு விடை அருளிச் செய்ய வேண்டும் என்கிறுர் ஆசிரியர். இவ்வினுக்களால் ஆன்மவியாபகம் எத்தகையதென்பது நம்மனோர்க்கு அறிவிக்கப்பட்டது என்னலாம். இது கொண்டு, ஆன்மாவானது படிகம்போல் அடுத்ததின் தன்மை கொள்வது எனவும், தான்பற்றிய இடத்தளவு வியாபகம் கொள்வதெனவும் நாம் அறிதல் நன்று.

17

பொதுவாகப் பசு இலக்கணத்தைச் சுருங்கக் கூறுமிடத்து 1. ஆன்மாக்கள் எண்ணில 2. நித்தமானவை. 3. ஆணவமலமறைப்பாம் குற்றம் பற்றியவை. 4. மலபக்குவத்துக்குதவும் இருவினைக்கேற்ற உடம்பு கொள்பவை. 5. முதல்வன் கருணையின்வண்ணம் அவை அவர் ஆவன. .6 அவ்வுடம்புகொண்டு போகப் புசிப்பின்போதே மீண்டும் இருவினைக்காவன செய்வன. 7. இறத்தல் பிறத்தல்களை உடையன. 8. மலபரிபாகம் உற்றபோது தீட்சையினுலே தனக்குள்ளே விளங்கும் சிவஞானத்தால் அம்மலத்தை அகற்றுவன. 9. முதல்வன் திருவடியை முடிவிற் பொருந்துவன என்பவைகளை நாம் தெரிதல்வேண்டும். மற்றும், அவை அவராய் என்பதனுல் ஆன்மா அணுவுமன்று விபுவுமன்று என்பது காணலாம். யாதொன்றைப் பற்றுகின்றதோ அதனேடு கூடிய வியாபகமே இதன் இயல்பாம். எவ்வுடம்புள் வாழ்கின்றதோ அவ்வுடம்போடு ஒன்றுபட்டு அவ்வுடம்பினுற்றலளவு அறிவை உடையது. கடவுளுடன் ஒன்றுபடும்போது இதே நிலையில்தான் வியாபிக்கிறது. பசுஞானமும் பதிஞானமும் ஒன்றல்ல; வேறுன இயல்பின. முதல்வன் பூரண சித்துப்பொருளாவாதலின் அவனது வியாபகம் அணுவினும் உண்டு; மகத்திினும் உளது. ஆன்மா ஐந்தவத்தைபடுவது. இவ்வளவும் இந்தச் செய்யுளால் இந்நூலாசிரியர் நமக்குணர்த்தலுறுகின்றுர் என்னலாம். நித்தமான ஞானத்திற் கிடனுதல் பரமான்மாவுக்கும், அநித்தமான ஞானத்திற்கிடனுதல் சீவான்மாவுக்கும் சிறப்பிலக்கணம் என்பது நியாயநூல். மற்றும், ஜீவான்மா ஞானகுணமுள்ள காலத்துச் சேதனமாக-

வும், அஃதொழிந்த காலத்துச்சடம்போலும் இருக்கும். யான் என்னும் புத்திக்கு விஷயமாவது ஆன்மா; யான் மனிதன் என்னும் ஞானத்துக்கு விஷயமாயிருப்பது சரீரமாம் என்பது அந்நூல். இனி அடுத்த பாடல் கூறும் அவத்தை நிலைகாண்போம்.

---

## செய்யுள் — 7

நேரிசை வெண்பா

*அவத்தை நிலைமை*

**மொழிந்த அவத்தை முதலடியேன் நின்றுங்**
**கொழிந்த நான்கும் உணர—இழிந்தறிந்**
**தேறிற்றிங் கில்லை ; எழில்வெண்ணெய் மெய்த்தேவே !**
**தேறிற்றென் கொண்டு தெரித்து.**

### பொழிப்புரை

*அவத்தைகள் என்று சொல்லப்பட்டவைகளில் முதல் அவத்தையான சாக்கிரத்தை நான் நின்றறிந்த-துண்டு. மற்றுமுள்ள நான்கு அவத்தைகளையும் நான் நினைவோடு இறங்கிக் கண்டதுமில்லை ; ஏறிக் கண்டது மில்லை. அழகிய திருவெண்ணெய்நல்லூரினை உடைய மெய்கண்டநாதரே! அந்த நான்கவத்தைகளும் உண்டென்று எந்தப் பிரமாணத்தால் தெளிவேன் ? தேவரீர் அருள் செய்யும்.*

### கருத்து

சுத்த தத்துவங்கள் நீங்கின இடத்திலே ஐந்தவத்தையும் படும். இதனை அனுமானத்தாலே அறியலாம்.

## விரிவுரை

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என அவத்தைகள் ஐந்தாம். சாக்கிரத்தின் போது ஆன்மாவுக்கு மற்ற அவத்தைகள் புலனாவதில்லை. ஆன்மாவும் சாக்கிர நிலையின் அறிவோடு மற்ற அவத்தைகளில் புகுவதுமில்லை. ஆதலால், சாக்கிர நிலையை அறிவதுபோல மற்ற அவத்தைகளை எப்படித் தெரியலாம் என்பதே இங்குக் கூறப்பட்டுள்ள செய்தி. இந்த நிலை மாறுபாடுகள் தத்துவ மாறுபாடுகளின் விளைவுகளாகும். ஆதலால் ஆன்மா இந்நிலை வேறுபாடுகளை நேரடியாகத் தெரிய முடிவதில்லை. அநுமானத்தாலே உணர நேரும் என்பது சுருக்கமான விடை. இனி அவத்தை இயல்புகளைக் குறித்து நூல்கள் நுவல்வன பற்றிப் பார்ப்போம்.

ஆன்மாக்கள் கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று நிலைமைகட்குரியன. இவற்றுள் ஆன்மா ஆணவமல மறைப்பால் அறிவு விளங்காமற் கிடந்த நிலையே ***கேவலம்*** எனப்படும். இந்த ஆணவமல மறைப்புநிலையை விலக்கி அறிவைச்சிறிது விளக்கிடும்பொருட்டே முதல்வனருளால் கருவிகளுடன் ஆன்மா கூட்டப் படுவதாயிற்று. இருளில் அழுந்தி விளங்காது கிடந்த கண்ணுக்குக் காட்டுகருவியாக விளக்குஒளி சார்ந்தாற்போல்வது ***சகல*** நிலை. கண்ணுக்கு விளக்கு என்னும் ஒரேகருவி காட்டாகச் சார்வதனால் கண் பொருளுணர்ந்து கொள்ளல் எளிதாம். ஆனால், ஆன்மாவுக்குக் காட்டாகச் சாரும் கருவிகள் பல.

அவை அவாவும் பிற கருவிகளும் உள. அதனால் அவத்தைகளும் பலவாயின. இந்தச் சகல நிலையில் ஆன்மா தோற்ற ஒடுக்கமுள்ள பொய்ப் பொருள்களைச் சார்தலால் பிறப்பினை எய்தும். இவற்றை வேறெனக் கண்டு முதல்வனருளைச் சாருமாயின் பிறப்பறுக்கும். இப்பிறப் பிறப்பற்ற பெருநிலை வழியே ***சுத்தம்*** எனப் படும். " நீக்கமில் அதீதம் " என்னும் சிவப்பிரகாசச் செய்யுள் இம் மூன்று நிலைகளையும் சுருங்கவுரைக்கும். ஆன்மாவின் பரப்புநிலை—வியாபகம்—கேவல நிலையில் அஃகியும், சகலநிலையில் தத்துவச் சார்பளவாகியும்—சுத்த நிலையில் இறை வியாபக அளவாகியும் விளங்கும். கண், ஊசிமுனையைப் பார்க்குங்கால் ஊசி முனையள-வினதான பார்வைப் பரப்பே கொள்கிறது. யானை வடிவினைக் காணும்போது அவ்வடிவின் அளவுக்கு வியாபகப்படுகிறது. ஆகாயத்தைக் காணும்போது ஆகாயப்பரப்பினளவுக்கு வியாபிக்கிறது. இதனால் ஆன்மாவின் விபுத்தன்மை சார்பொருளைச்சார்ந்துளதே யன்றித் தன்னையே சார்ந்து நுணுகுவதும் பெருகுவது மாயில்லைஎனத் தெரியலாகும். மாயாகாரிய கருவிகளை ஆன்மா சார்ந்து நிற்கையில் தத்துவ வன்னரூபன் எனப்படும் " தனக்கென அறிவிலாதான் " என்னும் சிவப்பிரகாசப்பாடல் இஃதுணர்த்தும் பெற்றியது. இதனால் ஆன்மா, தங்கிய இடப்பரப்பினை உடையது எனலாம். உலகுடை நாயனாரும், " தாவிலா அறிவு தங்கினஇடமே தகும் உயிர்க்கு இருப்பிடம் " என்றுள்ளமை காணலாம். ஒருவன் படுத்துக்கிடக் கையில் இடப்பரப்பு அகன்றுளது; இருக்கையில் குறைகின்றது; நிற்கையில் இன்னமும் சுருங்குகின்றது. இந்த அஃகுதலும் அகலுதலும் இடத்தைச் சார்ந்

தனவே ; அவனிடம் அவையில. இதுவே ஒருபுடைப் பரப்பு எனப்படுவது.

ஆன்மாவுக்குக் காரணம் முதல் தூலம் இறுதியாக ஐந்து உடலங்கள் உண்டென்பது முன்னரே மொழியப் பட்டது. ஆன்மாவுக்கு முதற்காரணமாகிய மாயை யிலிருந்து தோன்றிய இந்த ஐந்து சரீரங்களும் வடிவ மாம். இதனை "வசித்திட வரும்வியாபி" என்பர். காரணசரீரம் ***ஆனந்தமய கோசம்*** எனப்படும். இந்த நிலையில் ஆன்மாவுக்கு அறிவிச்சை செயல்கள் ***பொது வகை***யால் விளங்கும். இதனால் ஓர் ***ஆனந்தம்*** முன் கேவல நிலையிலிருந்த ஆன்மாவுக் ***குதிக்கும்***. இக் காரணம் பற்றியே எல்லாச் சரீரங்களும் தோன்றுவதற் குரிய மாயையாகிய காரணசரீரம் இப்பெயர் எய்திற்று. இதனையடுத்த கஞ்சுக சரீரம் ***விஞ்ஞான மயகோசம்*** எனப்படும். (விஞ்ஞானம் = விசேடஞானம்) இச் சரீரம் கலைமுதலிய ஐந்து தத்துவங்களாலாகியது. இச்சரீரம் பெற்றதும். ஆன்மாவுக்குச் ***சிறப்பு வகை***யால் அறிவுவிளங்கும். இதன்பின்னர் ஆன்மா குண சரீரத்தைப் பொருந்தும். இச்சரீரம் அந்தக்கரணத் தன்மையுடைமையால் ***மனோமய கோசம்*** எனப்படும். இதற்குப் பிறகு ஆவி சூக்கும சரீரத்தைப் பொருந்தும். பிராணவாயுவின் சம்பந்தம் பெற்ற இச் சரீரமயமாய் ஆன்மா நிற்பது ***பிராணமய கோச*** நிலை எனப்படும். இதன் பின் வருவதே தூல சரீரம். இச் சரீரத்தை அன்னம் வளர்ப்பது. ஆதலால் இஃது ***அன்னமய கோசம்*** எனப்படும். இனி இச் சரீரங்களில் நின்று ஆன்மா நடத்தும் முறையையும் பார்ப்போம்.

மேற் கூறப்பட்ட இந்த ஐந்து கோசங்களும் ஆன்மாவைக் கட்டுப்படுத்துவனவே. இவற்றுடன் ஆன்மா ஒன்றுபட்டு நின்று செலுத்தும். இவற்றுள் ***தூல தேகத்தை*** (அன்னமய கோசத்தை) ஆன்மா, தேர்ப்பாகனைப் போல் நின்று செலுத்தும். தேரோட்டுபவன், குதிரை. வண்டி, ஓட்டுமறிவு, உற்சாகங்களால் தேரைச் செலுத்தி அத் தேரின் வேறின்றி நிற்பன். அவ்வாறே ஆன்மாவும் இத் தூல உடம்பாகிய தனுவைப் ***பிராணன்—மனம்—கலாதி—மாயை*** களால் செலுத்தி வேற்றுமையின்றி நிற்கும். ***சூக்கும சரீரத்***தைச் செலுத்தும் போது மரப்பாவை இயக்குவோன் போல நின்று ஆன்மா நடத்தும். மரப்பாவை இயக்குபவன் கயிற்றால் இயக்கிக் கயிற்றின் வேறின்றி நிற்பன். இவ்வாறே பிராணனால் இயக்கிப் பிராணவாயுவின் வேறின்றி நிற்கும் ஆன்மா. ***குணசரீரத்தை*** ஆன்மா, தோற்பாவை ஆட்டுபவன் போல நடத்தும். தோற்பதுமையை ஆட்டுவோன் தன் அவயவங்களுள் ஒன்றான கையால் ஆட்டி அதனின் வேறின்றி நிற்பன். அவ்வாறே மனோமய கோசமாகிய இச் சரீரத்தை மனத்தால் ஆட்டி அம் மனத்தின் ஆன்மா வேறின்றி நிற்கும். ***கஞ்சுக சரீர***த்தை ஆன்மாவானது பரகாயப் பிரவேசம் செய்பவன்போல் நின்று செலுத்தும். பரகாயப் பிரவேசம் செய்யும்போது உயிரற்றதோருடம்பினுள் வேறோருயிர் புகுந்து ஒன்றாய் நிற்கிறது. இவ்வாறே அறிவாதிகளில்லாத கலாதிகளில் ஆன்மா ஆநந்தத்தால் புக்கு அவற்றின் வேறற நிற்கும். இதனையடுத்த ***காரண சரீர***த்தை ஆன்மா, வேடங் கட்டிக்கொண்டு

ஆடுபவர்போல நடித்து வேறற நின்று நடத்தும். வேடங்கொண்டோன், கட்டிக்கொண்ட வேடத்துக் குரியவனுக நடிப்பன்; மகிழ்வன். இங்ஙனமே, ஆன்மா ஆனந்தமய கோசமான இவ்வுடலுள் அதே மயமாய் வேறின்றி நிற்கும். தூல உடம்பு முதலாகக் காரண தேகம் ஈருகத் தத்துவங்களின் குறைவுகட்கு ஏற்ப ஒன்றுக்கொன்று சூக்குமமான முறையில் ஆன்மா நிற்கும். ஒவ்வொன்றையும் செலுத்துகையில் வேருய் இருக்கு நிலையது ஆன்மா. யாவற்றையும் செலுத்துமுறையில் வியாபி எனப்படும்.

இவ்வைந்து கோசங்களும் ஆன்மா அல்ல. இவ்வைந்து கோசங்களிலும் நிற்குங்கால் தூலமுதல் காரணமீருக முறையே ஐந்தவத்தைப்படும் ஆன்மா. விழித்தபின் சாக்கிரத்தில், கோச கருவிகளாற் காணப் பட்ட கனவைச் ***சொல்லும்.*** சுழுத்தியில் சுகமா யிருந்ததைக் ***கருதும்.*** துரிய துரியாதீதங்களை அவற்றின் மறுதலைகளில் வைத்து ***அறியும்.*** சாக்கிரத்தில் வந்தபோதுதான் இப்படி அறிகிறதே யன்றி அந்தந்த அவத்தையில் நின்று ஆன்மா அறிதல் இல்லை. ஆதலால், கோசங்கள் ஆன்மா அல்ல எனத் தெளியலாம். அறிதற்கு ஐங்கோசங்கள் ஏதுவாம்.

இனி, உடல், பொறி முதலியவற்ருேடு ஆன்மா கூடி நிற்றல் அமைச்சராதியருடன் அரசன் கூடி யிருத்தல் போலாம். அவற்றிற் போக்குவரவு புரிதலும் அவ்வரசன் செயலையே நிகர்க்கும். ஐந்தவத்தையிற் போக்குவரவு புரிதற்கு அரச உவமையே காட்டாகத் தரப்பட்டுள்ளது. அமைச்சர் முதலானவர்களுடன் அரசன் வெளியே சென்று மீண்டு அரண்மனையில்

புகும்போது, மந்திரி முதலானவர்களில் எந்த எந்த வாசலில் எவ்வெவரை நிறுத்தவேண்டுமோ அங்கு அங்கு அவரவரை நிறுத்திவிட்டு இறுதி வாயிலில் காவல்வைத்துப் பின் அந்தப்புரத்துக்குள் தான் மட்டும் சென்று அமர்வான். இவ்வாறே ஆன்மாவும் உலக விஷயங்களை அநுபவிப்பதற்காக மனம், பிராணன், புத்தி, அகங்காரம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரி-யங்கள் இவற்றோடு வெளியே உலாவிவிட்டு மீளுகிறது. அப்படி மீளும்போது புருவ நடு—கண்டம்—இதயம்—நாபி முதலிய இடங்களிலே நிறுத்தவேண்டிய தத்துவங்களை முறைப்படி நிறுத்திவிட்டு உடல் மோசப்படாமல் இருப்பதற்காகப் பிராண வாயுவைக் காவலாக்கித் தான் ***சுவாதிட்டானம்*** எனப்படும் இடத்துக்குச் சென்று மாயையுடன் கூடி ஆனந்தமய கோசனாகி நிற்கும். சுவாதிட்டானம் என்பது மூலா-தாரத்துக்குமேலும் நாபிக்குக் கீழுமாக உள்ள இட-மாகும். இது ஆருதாரங்களில் இரண்டாவதாகும். துரியாதீதத்தில் பிராணவாயு அடங்கிக் காவலாக இருக்கும். இங்ஙனம் பிராணவாயு நில்லாவிடில் பிறகு உயிர்பெற்று எழமுடியாமற்போம்.

**சாக்கிரம்** (நனவு)

இது புருவமத்தியம் எனப்படும் இலாடத்-தானமாம். இங்கு ஆன்மா பொருந்தியிருத்தல் சாக்கிராவத்தை எனப்படும். உலகவிஷயங்களை அறிதல்-முயற்சியைவிட்டு உறங்கப்போம்போது உறங்குமுன் ஆன்மா நுதற்கண்பொருந்தி ஞானேந்திரியம் ***ஐந்து***, கன்மேந்திரியம் ***ஐந்து***, ஓசையாதி ***ஐந்து*** பேச்சுஆதி ***ஐந்து***, பிராணன்ஆதி வாயுப்***பத்து***, மனம் முதலிய

அந்தக்கரணம் ***நான்கு,*** புருடன் என்னப்படும் தத்துவம் ***ஒன்று*** ஆக ***முப்பத்தைந்து கருவிகளு***டன் கூடி நிற்கும் இதன்பின் ஆன்மா இன்னம் உள்ளே சென்று ***சொப்பன*** அவத்தை உறும். இதற்கு இடம் கண்டம். கனவுநிலையில் உடம்புக்கு வேலையிராது. ஆகையால் ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந்திரியம் ஐந்தும் ஆகப்பத்துக்கருவிகள் நீக்கப்படும். எஞ்சிய ***இருபத்தைந்து கருவிகள்***தாம் இந்த அவத்தைக் குரியன. இதன்பின்னர் ஆன்மா பின்னும் உட்சென்று இதயத்தானத்தை எய்தும். இது ***சுழுப்தி***த் தானம் எனப்படும். இங்கு ஆன்மா, பிராணன், சித்தம், புருடன் என்னும் ***மூன்று தத்துவங்க***ளுடன் கூடிநிற்கும். அப்பால் இவ்விடத்தைவிட்டு நாபித் தானத்தினை அடைந்து ***துரியம்*** என்னும் அவத்தை அடையும் ஆன்மா. அப்போது பிராணன், புருடன் என்னும் ***இரண்டு தத்துவங்க***ளுடன் கூடிநிற்கும். இதனையும் நீத்து மூலமாகிய சுவாதிட்டானம் அடையும்போது ***துரியாதீத*** அவத்தைநிகழும். அப்போது புருடன் என்னும் ***ஒரே தத்துவ***த்துடன் ஆவி கூடி நிற்கும். இவை விட்டுநீங்கும் தத்துவ முறைகளாம். ஆனால் விடாமலே உடனுகக் கலாதிதத்துவங்களும் சுத்ததத்துவங்களும் நனவுமுதல் துரியம்வரை வெளிப் பட்டு நின்று துரியாதீதத்தில் அடங்கிநிற்கும். இவை இல்லாவிடில் புருடதத்துவமே இராது. துரியாதீதத்திற் காரண சரீரமே நிற்பது. கஞ்சுக சரீரம் இல்லை. ஆதலால், கலாதிகள் புருடதத்துவத்தோடு ஒற்றித்து நிற்கும் என்ப.

மேற் கூறப்பட்ட ஐந்தவத்தைகளும் ***சகலத்தில்*** கீழாலவத்தை — மத்தியாலவத்தை — மேலாலவத்தை

என மூன்று வகைப்படும். இவற்றுள் ***கீழாலவத்தை*** எனப்படுவது, கீழ் நோக்குதல் மேல் நோக்குதல் என இருதிறப்படும். இவற்றுள் கீழ்நோக்கிச் செல்லும் ஒடுங்கு முறையானது இளைப்பு நீக்கி வலிவுண்டாக்கிக் கன்மம் செய்ய ஏதுவாய்ப் பிறவிக்குக் காரணமாகும். மேல்நோக்குதலாகிய தோன்று முறையானது ஒடுங்கிய வாறே சாக்கிரத்துக்கு வருதலாம். இது கன்மானு-பவஞ்செய்து பிறப்பறுத்தற்கு ஏதுவாகும். இப்பால், சகலத்தில் ***மேலாலவத்தை***யாவது இருதயம்—கண்டம் —நாக்கின்அடி — புருவநடு — பிரமரந்திரம் என்னும் ஐந்திடங்களில் முறையே நனவு முதலான ஐந்தவத்-தைப்பட்டு மேற்சென்றொடுங்குதலும், கீழ்ச்சென்று தோன்றுதலுமாய் இரண்டு வகைப்படும். இவ் விரண்டில் ஒடுங்குதல் யோகசமாதியாலாம். இது பிறவியறுத்தற்குத்துணையாகும். விரிதல் (தோன்றுதல்) அதுகலைதலாம். இது பிறவி உறுதற்குதவும். இவற்றில் ஒடுங்குதலாகிய யோகாவத்தையை ஞானா-வத்தை என்று சிலர் சொல்வர். ஆனால் இதுமயக்கக் கூற்றாம். உண்மையில் இதுவும் அவத்தையே. இவை களை வகை செய்து கூறினால், கீழாலவத்தையில் கீழ் நோக்கி ஒடுங்குதல் ***சகலத்தில் கேவலம்*** எனப்படும். கீழாலவத்தையில் மேல் நோக்கி விரிதலும் மேலால வத்தையில் கீழ்நோக்கி விரிதலும் ***சகலத்திற் சகல***மாம். மேலாலவத்தையில் மேல்நோக்கி ஒடுங்குதல் ***சகலத்திற் சுத்தமாம்.***

இனி ***சகலத்தில் மத்தியாலவத்தை***யும் ஐந்து அவத்தை கொண்டதாகும் எல்லாவிஷயங்களையும் அறியும் முதல் அவத்தை சாக்கிரம் ஆகும் இந்த இலாடத்தானத்திலும் சாக்கிரம் முதலான ஐந்தவத்-

தைகள் உண்டு விஷயங்களை அறியும்போது இவை தொடர்ந்து நிகழும். இதனை நுண்ணுணர்வால் கண்டு கொள்ளக்கூடும். விஷயங்களை நேரே துய்த்தல் சாக்கிரத்தில் சாக்கிரம் எனப்படும். துக்கசுகவர லாற்றை நாடி மனத்து ஆராய்தல் சாக்கிர சொப்பனம் ஆகும். சுகதுக்கங்களில் மூழ்கிவிடுதல் சாக்கிரத்தில் சுழுத்தியாம். சுகதுக்கங்களை அறியாமே பெருமூச் செறியும் நிலை சாக்கிரத்தில் துரியம் எனப்படும். சுகதுக்கங்களைக் கேட்டலுமே திடுக்கிட்டுப் பிராண வாயு அடங்கி மூர்ச்சித்து மயங்குதல் மேலதில் துரியாதீதமாம். நிற்க, கேவலத்திலும் ஐந்தவத்தை உண்டு. சுத்தத்திலும் ஐந்தவத்தை நிகழும். இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம் நிரம்பிய நிலையே ***நின்மலசாக்கிரம்.*** குருதரிசனமடைந்து அருளுப தேசம்பெறல் ***நின்மலச்சொப்பனம்.*** உபதேசவழி உறைப்புண்டு நிற்றல் ***நின்மல சுழுத்தி.*** பாசநீக்கமே ***நின்மல துரியம்,*** சிவப்பேறு ***நின்மலதுரியாதீதம்*** இவை சிவஞானபோதத்து ஏழாம்சூத்திரம் முதல்கூறப் படுவனவாம். இன்னும். மேற்கூறிய காரிய அவத்தை களேயன்றி இவற்றிற்குக் காரணமான கேவல, சகல, சுத்தம் என்னும் காரண அவத்தையும் உள்ளன. ஆன்ம அறிவு பிண்டமாய்த் தொழிற் படுதல் கேவல மாம். கருவிகளுடன் கூடிப் பகுத்துத் தொழிற் படுதல் சகலம். கருவிகளும் மலமும் இரண்டும் நீங்கி யதும் சிவத்தோடுகூடி இச்சா முதலன எங்குமாய் வியாபித்து விளங்கும் அவதரம் சுத்தம் என்பர். இவற்றுள் சுத்தமே சிறப்புடையது. இதுகாறும் அவத்தை நிலைகள் ஏற்ற அளவு கூறப்பட்டன. இப் படிக் கூறப்பட்ட அவத்தைகளுள் சாக்கிரம் ஒன்றே

நினைவுக்கு நிற்பது. மற்றவற்றில் ஒடுங்குதலும் விரிதலும் உணர்வுக்குச் சாக்கிரம் போல வருவதில்லை. இதனையே ஆசிரியர், ***மொழிந்த அவத்தை முதலடியேன் நின்று, ஆங்கு ஒழிந்தன நான்கும் உணர இழிந்து அறிந்து ஏறிற்றிங்கில்லை*** என்றுள்ளார். தத்துவக் கருவிகள் ஒடுக்கத்தில் குறைபடுதலால் சாக்கிரம்போல அறிவு, விஷயங்களை உணர்தற்கியாலாமற் போகின்ற தென்பது தெரியக்கூடியதே. ஆனால் அந்த நான்கு வித அவத்தைகள் உண்டென்பதை எப்படி அறிய லாம் என்ற வினவை ஆசிரியர், ***தேறிற்று என் கொண்டு தெரித்து*** என்று எழுப்பியுள்ளார். இது குருவருளும் வாக்குறுதியினாலே சுத்த தத்துவங்கள் நீங்கினபோது மேற்குறித்த அவத்தைகள் பட்டமை அனுமானத்தால் உணரப்படும் எனக் கொள்க. " பிறிந்திட ஐந்தவத்தை பெருகிய மலத்தாற் பேணி " என்பதன் செய்தி இஃதுணர்த்த வல்லது தன்னை அவத்தையறும் அழகுடையவனாக்கி, வெண்ணெயம் பதியிலே எழுந்தருளியிருந்து, உண்மையை உறுதிப் படுத்தி உபதேசித்த தெய்வமாக இந் நூலாசிரியர், தமது ஞானாசாரியரை மதித்தலால், ***எழில் வெண்ணெய் மெய்த்தேவே !*** என விளித்தலுற்றார். கருவி கழன்ற நிலையிலே, கருவிகளுடன் கூடியிருந்தனுபவித்தமை அனுமானத்தாலறியப்படுதல் மரபாம். மற்றும் ஐந்தவத்தை பற்றித் ***திருமூலர்*** கூறும் " ஐயைந்து பத்துடன்...........இருவரே " என்னும் திருமந்திரப்பாடற் பொருளும், ***தாயுமானார்*** கூறியுள்ள " சாக்கிரமாம் நுதலினில், " சுழுத்தி இதயந் தனில் " முதலியபாடல்களின் பொருளும், இவற்றுள் " ஞானம் பழுத்திடு பக்குவர் அறிவர் அவத்தை

ஐந்திற் பாங்குபெறக் கருவி நிற்கும் பரிசுதானே" என்பதன் கருத்தும், ஈண்டைக்குச் சிந்தித்து ஒப்புக் கொள்ளத் தக்கனவாம். போற்றிப் பஃறொடையுள் "புன்புலால் போர்த்த...........ஆக்கிப் பணித்த அறம் போற்றி" என்பகுதியும் படித்துணரற்பாலதாம். கைப்பொருள் நழுவுதல், இரும்பு உருகிப் பின் இறுகுதல் முதலிய உவமைகளும் ***ஐந்தவத்தைக்குக்*** காட்டப்படும். இவை விரிப்பின் பெருகுமாதலின் நூல்களால் அறிதல் நலம்.

---

## செய்யுள்—8

### *நிலைமண்டில ஆசிரியப்பா*

ஆன்ம தரிசன வழி

**தெரித்ததென் கொண்டெனை உருத்திர பசுபதி!**
**செடிய னேனையும் அடிமை செய்யப்**
**படிவங் கொண்டு வடிவுகாட் டில்லாப்**
**பெண்ணை ஆளும் வெண்ணெய் மெய்ய!**

5 **அவத்தையிற் றெரித்தன னுயின் அவத்தை**
**தெரிந்தாங் கிருத்தலும் இலனே திருத்தும்**
**காலம் முதலிய கருவி யாயின்**
**மாலும் பிரமனும் வந்தெனை அடையார்**
**ஓதுங் காலை ஒன்றையொன் றுணரா**

10 **சேதன மன்றவை பேதைச் செயலிச்**
**சேதன வானுற் செயல்கொள வேண்டும்நற்**
**போத மிவற்றைப் புணர்வதை யறியேன்**
**கருவித் திரளினும் காண்பதோ ரொன்றும்**
**ஒருவுவ தறியேன் உணர்வில னுதலின்**

15 நிற்கொண்டு கண்டன னுயின் எற்குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னுங் கேண்மோ ! மன்ன ! நின்னின்
முன்னம் என்றன் உணர்வில னுதலின்

20 என்னைக் காண்பினும் காண்பல காணு து
உன்னைக், காண்பினும் காண்பல உன்னோடு
ஒருங்கு காண்பினும் காண்பல அருந்துணை
கண்ட வாறே தெனது கண்ணே
அண்ட வாண அருட்பெருங் கடலே !

## பொழிப்புரை

*உருத்திர மூர்த்தியானவரே ! ஆன்மாக்களுக்கெல்லாம் உயிர்க்குயிராய் இருந்து இரட்சித்தருளுகின்ற கர்த்தாவாக உள்ளவரே ! மிகவும் கீழான அடியேனையும் அடிமைப் படுத்திக்கொள்ள விரும்பி, உண்மை உருவினை வெளிக்காட்டாமலே பெண்ணைநதி வளங்கொண்ட திருவெண்ணெய்நல்லூரிலே மெய்கண்டநாதராக எழுந்தருளியிருப்பவரே !*

*யான் என ஒரு முதல் இருப்பதை எது கொண்டு அறியச் செய்தருளினீர் ? அடியேன் சாக்கிர முதலான அவத்தைப்பட்டு வருவதாலே இஃது உணர்த்தப்பட்டது என்பீராயின், அப்படி அவத்தைப்பட்டு வருவதொன்றே தவிர அவத்தைகளை இன்னது இன்னது என்று தெரிந்து யான் நீக்கிக்கொள்ளவில்லேன். அவத்தையின் மறைப்பை நீக்குவது காலம், நியதி முதலிய கருவிகளாம் என்பீராயின், சிருட்டிக்கும் பிரமனும், காக்கும் விஷ்ணுவும் என்னைக் கூடி நிற்பவரல்லர் எனப்படும். மேலும், மேற்சொல்லப்பட்ட கருவிகளும் ஒன்றை ஒன்று அறியாதவையாகும். அக் கருவிகள் அறியாமை*

யுடையவையாயினும் ஆன்மா அறிவுடைப் பொருளாதலால் அக் கருவிகளோடு கூடின் சேட்டைப்படும் என்றருளிச் செய்விராயின், அப்படி அறியுமியல்பு உடையவனாய் அக் கருவிகளாலாம் பயனையும் அடைபவனாக யானிருப்பேனேயாகில், அக் கருவிகள் என்னை வந்து கூடுவதை யான் அறியக் காண்கிலேன்! மற்றும், அக் கருவிகளெல்லாம் கூடித் தொழிற்படும் சாக்கிர அவத்தையின்போதும் ஓசை முதலியவற்றை ஒவ்வொன்றாக அறியலாகிறதல்லால் ஐந்தையும் ஒருசேர அறியமுடிவதில்லையே! அக் கருவிகள் கூடினதை அறியமுடியாமை போன்றே நீங்குவதையும் நான் அறிய முடிந்திலேன்; ஆதலால் யான் அறிவில்லாதவனாவேன். ஐம்புலன்களில் ஒவ்வொன்றாக நீ அறியும்போதும் நீயாக அறியமாட்டாய்; நாம் அறிவிக்க அறிவாய் என்று கூறியருளுவீரானால், கருவிகள்போலத் தேவரீர் எனக்கு அறிவிப்பவராயின், தேவரீரும் அடியேற்கு ஒரு கருவியே ஆவீர். அப்போது கர்த்தா என்னும் பெருமை தேவரீருக்கு இல்லையாய்விடும். அவ்வாறாயின், யானே கர்த்தா எனப்படுவேன்; தேவரீரை எனக்குக் கர்த்தா என்று சொல்ல வேண்டுவதில்லை.

ஞானவேந்தே! இன்னமும் அடியேன் விண்ணப்பிப்பது ஒன்று உண்டு. அதனையும் கேட்டருளும். தேவரீர் அறிவிக்க யான் அறிவனாயின், அப்படி அறிவிக்கிற தேவரீரை எதிர்ப்பட்டு நின்று தேவரீரை அறிவிக்கும் முதல்வரென நான் அறியவேண்டும். அப்படி நான் அறிவில்லாமையால் அறிய முடிவதில்லை. இதனால், தேவரீரும் அடியேனும் இரண்டாக நின்றறியவும் இயலவில்லை; தேவரீர் அறியப்படுமவராகவும் இல்லீர். தேவரீரோடுகூடி ஒன்றுபட்டும் அடியேன் அறியுமாறில்லை. ஆதலால்,

*அடியேற்கு அரிய துணையாக இருப்பவரே! அடியேனுக்கு அறிவாகிய கண்ணாக விளங்குபவரே! தேவர்கட்கும் கர்த்தாவாக உள்ளவரே! அருளமுத வெள்ளத்தை அடியவர்க்கருளும் கடலாக இருப்பவரே! அடியேன் என்னுரு முதலிருத்தலை யான் தரிசித்தது எதுகொண்டு என்பது தெரியவேணும்.*

### கருத்து

இறைவன் தனது பேரருளையே திருமேனியாகக் கொண்டு அறிவித்தால் ஆன்மா அறியும். தானே அறிந்துகொள்ளும் சுதந்தரம் ஆன்மாவுக்கு இல்லை. ஆன்மா, பதிஞான வயப்பட்டால் தன்னைத் தரிசிக்க லாம். இவ்வாறன்றி, வேறு எவ்வகையாலும் அறியும் பகுதி இல்லை.

### விளக்கம்

இச் செய்யுள் செப்பும் செய்தியின் விவரம் இன்ன தென்பது முன்னர்த் தெரிவோம்.

1. ஆன்மா, சாக்கிராதி அவத்தைகளைத் தன்னின் பிரித்துக் காண முடியாமையால் அவ் அவத்தைகள், தன்னைக் காண்பதற்குத் துணையாவன என்று சொல்ல முடியாது அல்லவா ?

2. காலம் முதலிய அசுத்த தத்துவங்களும் பிரகிருதி தத்துவங்களும் ஆகிய கருவிகள் யாவும் சடம். இவை கருவிகளாகி ஆன்ம அறிவை விளக்கும். இவை இல்லையாயின் ஆன்மாவுக்கு அறிவு விளங்காது. இவ்வித ஒருமையால் கருவிகளே ஆன்மா என்ற ஐயம் தோன்றுகிறது. இந்தக் கருவிகளை நீக்கி ஆன்மா தன்னை வேறாகக் காணவேண்டுமானால்

அப்போது அந்த ஆன்ம அறிவை விளக்குவதற்கு வேறு ஏதோ துணை வேண்டியிருக்கும். அப்படியில்லையானுல் ஆன்மா எப்படித் தன்னைக் காண முடியும் ?

3. இறைவன், ஆன்மாவுக்குத் துணையாய் நின்று அறிவிப்பானுயின் அவனும் தத்துவங்களைப் போலவே ஒரு கருவியாவன். ஆகவே கர்த்தா என்னும் பெயர் அவற்குப் பொருந்தாது. ஆயின் ஆன்மாவே முதல்வனையும் தத்துவங்களைம் கருவி-யாகக் கொள்ளும் கர்த்தா ஆகிவிடும். அப்படியானுல் ஆன்மா தன்னைக் காண்பதற்குக் கடவுள் துணையாவது எப்படிக்கூடும் ? மேலும், சிவத்தின் பேரொளியில் ஆன்மாவினெளி மழுங்கும். அப்போது ஆன்மா தன்னுடைய மடங்கின அறிவு கொண்டு தன்னைக்காண முடியாது. சிவத்தையும் காணமுடியாது. அன்றியும் மடங்கும் ஆன்மப்பிரகாசம் மடக்கும் சிவப்பிரகாசத்-தில் கலக்கவும் முடியாது. ஆகவே ஆன்மா தன்னையும் சிவத்தையும் ஒருங்கு காண்பதில்லை எனச் சொல்ல வேண்டிவரும். அவ்வாருயின், ஆன்மா தன்னைக் காண்பதற்கு உதவிசெய்யும் துணை எது? [குரு ***திருவருளே*** அங்ஙனம் துணைபுரிவதாம் என்பது தாற்பரியம் ]

**உருத்திர பசுபதி –**

இச் சொற்ருெடர் இங்கு மெய்கண்டதேவரைக் குறிப்பதாகும். இவர் சிவமே என்பதை ***உருத்திரர்*** என்னும் சொல்காட்டும். இவர் உயிர்களுக்கு நற்கதி விளைதற் பொருட்டு ஐந்தொழிலாற்றும் தலைவராகவும் இருத்தலின் பசுபதி என்ருர். பசுக்கள் ஒரு தலைவனுல்

நடத்தப்படாதவழி வழிகெட்டலைந்து வதையுறும். அவ்வாறே ஆன்மாக்களும் தலைவனில்லாவிடில் கெட்டொழியுமென்பது கருத்தாம்.

**செடியனேனையும் –**

மிகவும் தாழ்ந்த நிலைமையுடைய தன்னையும் காத்-தற்கண் பேரருள் காட்டுதலின் இவ்வாறு தன்னைக் கூறிக்கொண்டனர். பிறப்புட்பட்டு (புன்புலால் யாக்கையுட்பட்டு) வாழும் இவ்வாழ்க்கை தீதென்பதை இச்சொல்லால் நமக்கு ஆசிரியர் நினைவூட்டுகிறார். செடியனேன், நெதியனேன் என்றெல்லாம் திருநாவுக்கரசராதியோர் செப்புவதும் காணலாம். இறைவனைக் காட்டிலும் உயர்வுடையோர்யாருமிலர். ஆன்மாக்கள் யாவும் இழிதகவுடையன. அவற்றுள்ளும் தான் மிகவும் இழிந்துள்ளதாக இச்சொல்லால் கூறுகிறார் ஆசிரியர். இழிந்தோர்க்குதவுதலே இறைவனியல்-பென்பது இதனால் புலப்படும்.

**அடிமை செய்ய –**

உலக வாழ்க்கையே சதமென எண்ணி ஆணவமல பீடிதத்தால் உண்மையுணராது உழலும் தன்னை உண்மையுணர்வித்து (தன் நிலைமை காணவைத்து) இறைவனாகிய தமது நிலைமையினைத் தெரியவைத்து தம்பால் நீங்காத அன்பு பூண்டு ஆட்பட்டுக் கிடக்கும்படிச் செய்தனர் தமது ஞானசாரியராதலால் இவ்வாறு உரைக்கலுற்றார். ஆண்டான் அடிமைத்திறம் தெரிதலே சன்மார்க்கம் என்பர். சிக்கெனப் பிடித்-துக்கிடத்தல் அடிமைத் திறமாம்.

**படிவம் கொண்டு—**

இறைவன் தனது பெருநிலையில் நில்லாமல் எவரெவரை எவ்வாறு வடிவு காட்டி ஆட்கொண்டருளவேண்டுமோ அவ்வாறு தமது திருவருட் சத்தியாலாகிய சகல வடிவந்தாங்கி வருதலை இத் தொடர்காட்டும். *கொண்டு* என்ற சொல்லால் வேறு எவரும் ஆக்கிக்*கொடுக்க* அடைவதன்று இப்படிவம்; தாமே தமதிச்சையால் கொள்ளுதலுற்றதென்பது தெரியலாம். இவ்வாறு எழுந்தருளும் விவரம் முன்னரே கூறப்பட்டது.

**வடிவு காட்டில்லா—**

இறைவன் தன்னுடைய உண்மை வடிவைக் காட்டாமலே மானிடத் திருக்கோலமாக எழுந்தருளுவன். காண்டற்கரிய தன்னுடைய வடிவினை நாம் காண்டற்குரியதாக மாற்றியருளும் திறம் இதனால் தெரிவிக்கப்படுவது. *காட்டில்லா* என்பதனால் இறைவனைக் காட்டினாலல்லது ஆன்மா தன்னுடைய பசுபோதத்தால் ஒருபோதும் காண இயலாதென்பது கருத்தாகும். "காண்பார்யார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்பது இதனை உணர்த்தவல்ல திருவாக்காகும்.

**பெண்ணை ஆளும் வெண்ணை மெய்ய—**

பெண்ணைநதியை ஆளுகின்ற திருவெண்ணை நல்லூரை ஆளும் மெய்கண்ட நாதராக இறைவன் எழுந்தருளியமை இதனில் கூறப்படுவது. உடம்பு, உயிர் என்ற இரண்டுபொருள்களில் அழியாதது உயிர்.

இவ்வுயிர்க்குயிராக இறைவன் எழுந்தருளியிருப்பனு-தலின் ***மெய்ய*** என்றார்.

## என்னை தெரித்தது என் கொண்டு ?

நான் என்பதொருமுதல் இருத்தலை அடியேற்-குணர்த்தியருளினீர். அங்ஙனம் தேவரீர் குருமூர்த்த மாக, எழுந்தருளி உணர்த்தாவிடில் நான் ஒருபோதும் 'யானாகிய என்னை' அறிந்துகொள்ள முடியாமற்போம். அதாவது தத்துவமயமாயிருந்த ஆன்மா, தத்துவங் களைத் தானல்லவெனக்களைந்து நீக்கித் தான் சிவம் தாரகமாயிருந்தலை உணர்வதாகும். இங்ஙனம், இறைவன், ஆன்மாவுக்குத் தானே தாரகமாயிருத்தலை அருள்மிகுதியால் உணர்த்துவதன்றி, ஆன்மாவிட மிருந்து ஏதும் கைம்மாறு கொண்டு செய்வதில்லை என்ற உண்மையை ***என் கொண்டு*** என்ற சொல்லால் அறியலாம்.

## அவத்தையில் தெரித்தனன் ஆயின் —

ஜீவன் அஞ்சவத்தைப்படுவது உண்மை தெரிதற் பொருட்டேயாம். நனவு முதலிய ஐந்தவத்தைப்படப்-பட ஆன்மா இவ்வவத்தைப்படுவது கருவிகளல்ல; தானே எனத்தெரிவுறும். அங்ஙனம் தெரிவுறுதலே ஆன்ம சொரூபத்தை உணரவல்ல நிலையாம். இவ் வாறு ஒருவேளை தேவரீர் அருளிச்செய்வீராயின், இதிலும் ஓர்ஐயம் எழுகின்றது. அதனைக்கேட்டரு-ளுங்கள் என்று மேலும் கூறலுறுகின்றார் ஆசிரியர்.

## அவத்தைதெரித்தாங்கு இருத்தலும் இலனே —

அவத்தைப்படுவது ஆன்மாவே ஆயினும் அவ்-வவத்தைப்படுவது ஆன்மாவினால் உணரப்படவில்லை.

சாக்கிரத்திற்கருவிகள் யாவும்கூடி நிற்றலின் உணரப் படுவதாயினும், கனவு முதலிய நிலைகளில் கருவிகள் பையப்பைய நீக்கம் பெறுதலின், அவ்வவத்தைகள் உணர்ச்சிக்கு வருதலில. மேலும், அறிந்தவற்றை மறத்-தலும், மீள அறிவிக்க அறிதலும், அறிந்த தன்னையுமே அறியாதிருத்தலும், உயிர்களிடம் இயல்பாகவே உள்ள அறிவுக்குறைபாடுகளாம். மற்றும், கனவு முதலிய அவத்தை வரிசைகளில் கருவிகளை முறையே அறிந்து நீக்குதல் ஆன்மாச் செய்துகொள்வதுமில்லை. அதாவது அவை நீங்குதலை ஆன்மா தெரிவதில்லை. கருவிகளும் சடமாதலால் அவைகளும் ஆன்மாவுக்கு அறிவிக்க மாட்டா. இக்கருத்துக்களை இவ்வரியினுல் தெரிவிக் கின்றுர் ஆசிரியர்.

**திருத்தும் காலம் முதலிய கருவி ஆயின்—**

ஆன்ம தத்துவங்கள் யாவும் மாயையின் காரியங்கள். வித்தியா தத்துவங்களும் அன்ன. இவை ஆன்மாவுக்கு அறிவை விளக்குதற்காகத் தரப்பட்டுள. ஆதலால், ஆன்மாவுக்கு அவத்தையின் மறைப்பைக் காலம் முதலிய கருவிகள் அறிவிக்கும் என்று இப்படிச் சொல்லப்பட்டால், இவையும் மாயேயமாதலின் சடமாம். இவற்றிற்குத் தாமே சேரவும், அறிவிக்கவும் திறமை கிடையாது. ஆதலால் இவைகள் அறிவிக்கும் என்றல் அசம்பவமாம். இது இவ்வரியால் தெரிவிக்கப்படுவது. மற்றும், காத்தலும் படைத்தலும் செய்யும் இவ்விரு தொழிலரும் தாமே செய்வதிலர். இறைவன் ஆணைவழி நின்று செயலாற்றுமத்துணையர். இவர்கள் அதிகாரமல-முடைய சகலரேயாதலின் இவர்களும் ஆன்மாவுக்கு

உணர்த்தும் முதல்வர் ஆகார் என்றற்கு ***மாலும் பிரமனும் வந்து எனை அடையார்*** என்றார். வந்து அடையார் என்றமையால் தாமாகச் செயலாற்றும் சுதந்தரம் இவர்கட்கும் இல்லை என்பது தெரிவுறுத்தப்-பட்டது. "படைகொடு பவனி போதும் பார்மன்னன்" என்ற சித்தியார்ப் பாடலையும், "***இத்தகைமை இறையருளால்*** உயிர் அறியும்" என்னும் சிவப்பிரகாசப் பாடலையும் இங்குக்கண்டுகொள்ளல் தக்கது.

**ஓதுங்காலை ஒன்றை ஒன்று உணரா —**

ஆன்மாவின் அறிவினை ஒருசிறிது விளக்குதற்குக் கருவிகள் கூட்டப்படினும் அக்கருவிகள் அறிவுடையன அல்லவாதலோடு, அவை ஒன்றையொன்று அறியவும் மாட்டா. இதனாலும் கருவிகள் சடம் என்பது காணலாகும். வெள்ளெழுத்துக்காரன் கண்ணில் மூக்குக் கண்ணாடியை மாட்டிக்கொண்டு எழுத்தைப் படிக்கிறான். கண்ணாடியால் எழுத்துத் தெளிவாகத் தெரிகிறது, என்றாலும் கண்ணாடி உயிரற்றது. அதற்கு எழுத்தைத் தெளிவாய்க் கண்ணுக்குக் காட்டும் இயல்பு உண்டெனினும், காட்டும் அறிவு அதற்குக் கிடையாது. காணும்போது ஒரு கண்ணாடி வில்லை மற்றொரு கண்ணாடி வில்லையைக் காட்டாது. எனவே காட்டும் இயல்பினும் குறைவிருத்தல் காணலாம். இதனால் கருவிகளே அறிவிக்-கின்றன என்ற கொள்கை பொருந்தாமை தெரியலாம். இது பற்றியே ஆசிரியர், ***சேதனம் அன்று அவை; பேதைச்செயல்*** எனலுற்றார்.

அப்படியன்று, ஆன்மாவுடன் அக்கருவிகள் கூடுகின்றன. ஆன்மா அறிவுடைப் பொருள்.

ஆதலால், ஆன்மா அக்கருவிகளுடன் கூடினால் அவை சேட்டைப்படுகின்றன. இதனால் ஆன்மாவே அறியலுறுகிறது. "தனக்கென அறிவிலாதான் தத்துவ வன்னரூபன் — தனக்கென அறிவானாலிச் சகலமும் நுகரும் தானே" என்பது சிவப்பிரகாசம். ஆகவே, ஆன்மாவே அறியலுறும் என்று இப்படி ஞானசாரியர் கூறியருளியதாகக் கொண்டு அதற்குமேல் எழும் சந்தேகத்தைப் பின்வரு முறையில் ஆசிரியர் விண்ணப்பிக்கின்றாராவர்.

## இச்சேதனவானால் செயல் கொளவேண்டும்; நல்போதம் இவற்றைப் புணர்வதை அறியேன் —

ஆன்மா அறிவுடையது. ஆதலின் அதற்கு அறியும் உரிமை உளது. ஆகையால் அக்கருவிகளின் பயனைக்கொள்ளும் இயல்புடையது. இந்த முறைமை கொண்டு நோக்கினாலும் ஆன்மாவினைத் தானே அறியும் திறமையுடையதெனக் கூற முடியாது. ஏனெனில், தான் பொருளை அறிவதற்குத் துணையாகத் தன்னைக்கூடுகின்ற கருவிகளை அவை எப்போது கூடினவெனவும், எங்ஙனம் கூடினவெனவும், ஆன்மா தெரிந்துகொள்ளக் கூடவில்லை. இதனால் கருவிகள் தன்னைக்கூடியதையே அறிந்து கொள்ள முடியாத ஆன்மா, தானொருமுதலென்பதை எங்ஙனம் அறியமுடியும் ; முடியாதெனலே தக்கது. இவ்வாறு இந்நூலாசிரியர் தமது ஞானசாரியர்பால் கூறலுற்றதை இவ்வரிகாட்டுகிறது. மற்றும் எல்லாக்கருவிகளும் கூடித்தொழிற்படுவதை ஆன்மா அறிகிற சாக்கிர அவத்தையின் போதும் ஐம்புலச்செய்திகளையும் ஒருங்கே அறியமுடியவில்லை. ஒவ்வொன்றாகவே

அறிய முடிகிறது. இதனாலும், கருவிக்கூட்டரவுநிலை-யிலும் ஆன்மஅறிவிற்குறைபாடு இருக்கின்றதென்பது காணக்கிடப்பதே என்பதை விண்ணப்பித்தற் பொருட்டாக, ***கருவி திரளினும் காண்பது ஓர் ஒன்றும்*** என்றுளார் ஆசிரியர். இதுமாத்திரமன்று; இந்தக்கருவிகள் கூடிநிற்கும்போது விஷயங்களை அறிகின்ற ஆன்மா, அக்கருவிகளின் கூட்டுறவை அறியமுடியாமை போலவே, கனவு முதலிய அவத்தைகளின்போது அக்கருவிகள் கொஞ்சங்கொஞ்சமாக விட்டு நீங்கிக் குறைவதையும் அறியமுடியவில்லை; ஆதலால் ஆன்மா அறிவில்லாதவன் அன்றோ! என்று கேட்கும் கருத்தோடு ***ஒருவுவது அறியேன் உணர்-விலன் ஆதலின்*** — என்றும் கூறியுள்ளார்.

ஆன்மா, தானாக ஒன்றை அறியும் சுதந்தரமில்லாதது என்பது சரிதான். என்றாலும், கருவி-களின் துணைகொண்டு ஒவ்வொன்றாக அறியும் போதும் ஆன்மா தானாகஅறியவில்லை; முதல்வன் அறிவுக்கறிவாய் நின்றுணர்த்துவதனால் அறியும். ஆதலால், இறைவனே அறிவிக்கின்றவன் என்பது தெளிக என்று ஞானாசாரியர் அருளிச்செய்வதாகக் கொண்டு இதன்மேல் தோன்றும் ஐயம் கேட்கலுறுகின்றார் ஆசிரியர். ஆன்மா அறிவில்லாதது. அது தனித்து ஒன்றையும் அறியமாட்டாது. சிவம் அறிவித்தால் அறிவது என்பதற்கு " இருள் நனி இரவி தான் வந்திரித்தலும் " என்னும் சிவப்பிரகாசநூற் செய்யுள் பிரமாணமாகக் காணத்தக்கதாகும்.

**நின்கொடு கண்டனன் ஆயின் எற்கு கருவி ஆயினை ; பெருமையும் இலவே —**

ஆன்மா ஆணவ மலமறைப்புள்ளது. தூல சித்தாவது. இதன் உயிர் மறைப்பு நீங்கவேண்டும். அதற்கு அறிவு செயல்கள் படிமுறையாய் விளக்கப்பட வேண்டும். ஆதலால், ஆன்ம தத்துவங்களையும், தாத்துவிகங்களையும், கலையாதி வித்தியா தத்துவங் களையும், இவை கூடிய உடம்பையும், அளவைகளை யும் அறிவு விளக்கத்துக்கான சூக்குமை முதலான வாக்குகளையும் சிவம் தன் கருணையால் பக்குவ வளர்வுக்கியைபப்படைத்தளிக்கின்றது. இக் கருவிகள் கூடியபோது அறிவு விளங்குதலும், கூடாதபோது விளங்காமையும் திருவருள் ஒட்பத்தால் நிகழ்வனவே. ஆகவே, இறைவன்தான் உயிர்கட்கு உயிர்க்குயிராய் நின்று அறிவுக்கறிவாய் அறிவினை வழங்குகின்றான் என்பது சித்தாந்தம். இந்த முடிபினை உள்ளத்தே வகிக்கச் செய்தற்பொருட்டு ஆசிரியர், 'உம்முடைய அறிவுகொண்டு நான் காண்பேனாயின், ஏனைத் தத்துவக் கருவிகள்போலத் தேவரீரும் எற்கு ஒரு கருவியே ஆவீர். அப்படிக் கருவியாகத் தேவரீர் இருப்பதாயின் கர்த்தா என்கிற பெருமை உமக்கு இராதே! என்று கூறுகின்றார் இவ்வரியில். மேலும், தேவரீரைக் கருவியாகக் கொண்டு காண்கின்ற ஆன்மாவாகிய நானே கர்த்தா ஆவேன். தேவரீர் எனக்-குக் கருத்தாவாக இருக்கமுடியாது என்றும் கூறத் தொடங்கி "*யானே பிரமம் கோனே வேண்டா*" என்றும் கேட்டுள்ளார். முன்பே கருவிகளை அறிந்து கூடும் தன்மை ஆன்மாவுக்கு இல்லை என்பது கூறப்

பட்டது. தானே பிரமம் ஆயின் தானே கருவிகளை அறிந்து கூடவேண்டும். அப்படிக் கூடவில்லை. கண்ணுக்கு ஒளியிருப்பினும், சூரியனொளியின் துணை தேவையாயிருத்தல் போலவே, ஆன்மாவுக்கு உணர்-விருப்பினும் உணர்த்துபவனாகிய சிவத்தின் அருள் தேவையாயிருக்கின்றது. எவ்வகையாலும் சிவனருளே ஆன்மாச் சார்ந்துள்ளமையால் அது கோணாகும் இயல்புடையதன்று என்பது கருத்தாகக் கொள்க !

### இன்னும் கேண்மோ மன்ன ! —

மேலும் சிற்சில வினாக்களை ஆசிரியர் கேட்க விரும்புவதனால் இப்படிக் கூறலுற்றார். *மன்ன !* என்றமையால் ஞான வேந்தாக விளங்குதலேயன்றிச் செவிகைப்பக் கூறப்படும் சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் பண்புமிருத்தலை நமக்கு விளங்க வைக்-கின்றார் ஆசிரியர் என்னலாம். அடிக்கடி *மன்ன !* எனவே ஸ்ரீ மெய்கண்டதேவரை இவ்வாசிரியர் விளித்திருத்தல் ஆய்வுக்குரிய செய்தியாம்.

### நின்னின் முன்னம் என்றன் உணர்வு இலன் ஆதலின் —

ஆன்மா அறிவிக்க அறிவது என்பது சரியே. அப்படி இறைவன் ஆன்மாவுக்கு அறிவிக்கும்போது இறைவன் இப்படி நின்று அறிவிப்பதை அறிய வேண்டுமே! ஆனால், அவ்வாறு உயிர் அறியமுடியவில்லையே! அறியமுடியாத ஆன்மா அறிவில்லாத பொருள் தானே ! என்று கேட்பது இவ்வரியின் பொருளாகும். இதனால், ஆன்மாவானது முதல்வனை வேறாக நிறுத்திக்காண்டல் இயலாதென்பதும், இரண்டாய் நிற்க

லாகாதென்பதும் உணர்த்தப்படுவதென்க! சூக்குமமாய்நின்றறிவிப்பதைத் தூலமாயிருப்பது ஒருபோதும் அறிய இயலாது. இந்த இயல்பினை ஆன்மா ஒருபோதும் மீறலாகாது என்பது வெளிப்படையாம். இனி, ஆன்மாவின் சிற்றுணர்வு—சுட்டுணர்வு—பகுத்துணர்வு களால் இறைவன் வேறு பிரித்துக் காணத் தக்கவனல்லன் என்பதையும் ஆசிரியர் கூறியருளுகின்றார் அடுத்து நிற்கும் அடிகளால். அவ்வரிகள்,

**என்னைக் காண்பினும் காண்பு அல - காணாது உன்னைக் காண்பினும் காண்பு அல — உன்னோடு ஒருங்கு காண்பினும் காண்பு அல கண்ட ஆறு எது ? —**

சிவரூபமும் ஆன்ம தரிசனமும் ஒருங்கு நிகழ்வன. சிவஞான போதத்து எட்டாம் சூத்திரம் இவற்றை விளக்குவது. குரு வெளிப்பாடு நிகழ்ந்து மலரடிக் கீழ் வைக்கப்படுவதால் ஆன்மா, மேற்கூறப்பட்டவை உணரும். இதனை இவ்வரிகள் வெளிப்படுத்தும் கருத்தின. " துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை—மன்னுமருட் குருவாகி ***வந்து*** அவரின் ***நீக்கி*** மல***மகற்றி***த் தா***னாக்கி*** மலரடிக் கீழ் ***வைப்பன்*** " என்ற இடம் உணரத் தக்கது. ஆன்மா, தன்னறிவுகொண்டு தன்னைக் காண்டலும் இயலாது. இறைவனை வேறாக நின்று காண்டலும் இயலாது. இறையறிவுடன் தன்னறிவு ஒன்றுபட்டுணர்வதும் இயலாது. உணர்பவனும் உணரப்படுபவனுமான இரட்டைப் பொருளாகி நிற்றல் இயல்பன்று. " தன்னறிவதனால் ஏதும் " என்னும் சிவப்பிரகாசப் பாடல் இஃதுணர்த்தும். இறைவனை அறிதற்கு ஆன்மாவின் கருவி கரணங்கள் பொருந்த

மாட்டா. "இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணுதே" என்பர் திருநாவுக்கரையரும். "ஊன் கண்ணுக்கு ஒளித்துத் துளக்கற நின்ற சோதி" என்பர் பட்டினத்தார். இறைவன் திருவருள் கைவந்து கிடைப்பின் மாயை நீங்கும். ஞான நாட்டம் அணுகும். அந் நிலையில் சிவரூபமும் ஆன்ம தரிசனமும் நிகழும் என்ப. "ஞான நாட்டம் பெற்றபின்.........நின் பெருந் தன்மையும் கண்டேன்; காண்டலும் என்னையும் கண்டேன்" என்பது திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. ஞானசாரியர் வாயிலாக ஆன்மாவானது திருவருளைத் தரிசிக்கும். அத் திருவருள் உதவியால் தான் தத்துவங்கட்கு அப்பாற்பட்டவன் என்று ஆன்மா அறியும். இது ***சிவரூபம்*** ஆம். இதனுல் ஆன்மா தனக்கு உயிரா யுள்ளது திருவருள்தான் என்று அறிந்து நிற்கும். இதுவே ***ஆன்ம தரிசனம்*** ஆம். பிண்டத்தின் வைத் தறிதலால் இதனை ***ஞான தரிசனம்*** எனவும் கூறுவர். இதனுல் இறைவனே—அருளே—துணை எனவும், அவனே ஞான நாட்டம் எனவும், அவனே எங்கும் வியாபகன் எனவும், அவனே திருவருள் நிறைந்தவன் எனவும் நாம் அறிதல் வேண்டும். வேடருட்பட்ட மன்னவகுமாரனை இன்னவன் என மன்னர்த் தொடர் புடைய அறிஞருணர்த்தியபின், அவன் தன்னை மன்னவ குமாரனே என வேடர்த்தொடர்பறுத்து மன்னவ னுன தன் தந்தையைக்கண்டு தெளிதல் ஆன்மதரிசனத் துக்குவமையாகக் காட்டப்படும். இதுகாறும் உரைத்தவிதத்தால் இறைவனே ஆன்மாவுக்கு உற்ற துணை எனவும், அவன் கிடைத்தற்கரிய துணையாவன் எனவும் தெரிதல் நன்றும். "அருந்துணையை" என்ற

தேவாரத் தொடர் இதனைக் குறிப்பது. இதனை ஆசிரியர் நமக்கறிவிப்பதற்காகவே ***அருந்துணை*** என்று தமது ஞானசாரியரை விளிக்குமுகமாகக் கூறியுள்ளார். இறைவனுடைய திருவருளையே ஆன்மா, துணையென நம்பியபின் ஞான நாட்டம் — இறையறிவு விளைய-லுறுகிறது அவ்வாறு இறைவனுடைய ஞானவயப் பட்ட பின்னரே ஆன்மா தன்னைக்காண்டல் கூடுவ தாதலின் ***எனது கண்ணே*** என்று விளித்தருளி-யுள்ளார் ஆசிரியர். அறிவுக்கறிவாய் நுணுகிநின்று ஆன்மாவுக்குக் காணுமுதவி புரிவதோடமையாமல் முதல்வன் அண்டமேயாகியும் காட்டுமுதவிபுரிந் தருளுகின்ருனுதலால் ***அண்டவாண*** என்கின்ருர் ஆசிரியர். ஆன்மாவின் ஞானசொருபம் சிவஞானத்-தால் விளங்கித்தோன்றற்கு இறைவன் அண்டவாண னுகவும் காட்சிப்பட வேண்டுமென்பது தெரிதல் தக்கது. இங்ஙனம், ஆன்மாவுக்கு மலபக்குவம், அறிவு விளக்கம், அருளமுத்தம், ஞான நாட்டம், பாசநீக்கம் முதலிய சகல உதவிகளையும் தாமேதமது பெருங்கருணையால் சிவம் ஆசாரியனுகி அருள் கூர்ந்து செய்திடுவதுபற்றி அவ்வெல்லையில்லாத அருள் வெளியை நாமுணர்தற் பொருட்டு ***அருட்பெருங் கடலே*** என்று இறுதிக்கண்ணும் விளித்துள்ளார். இதனுல் யாவும் ***சிவனருளே*** என்பது தெளிவாம்

இப்பாடலால், சிவம், பக்குவப்பட்ட ஆன்மா-வுக்கு அருள் கூர்ந்து ஞானமுதவித் தத்துவக்களைவு செய்வித்து தன்னுண்மை தெரிவித்துப் பாச வொழிவு செய்திடுகின்றதென நாம் தெரிதல் வேண்டும். "நீயும் நின் செயலொன்றின்றி நிற்றலே தரிசனம் தான்" என்பது ***உண்மைநெறி விளக்கம்.*** ஆன்மா,

தத்துவ தாத்துவிகங்களை என்னுடைய தெனவும், பசுஞானத்தையானென்றும், எண்ணியிருந்த அசத்திய போதம் குருவினுலறிந்து நீங்கிப் பழைய சுட்டுப்போதம் கழன்று நிற்பது ஆன்ம தரிசனம் எனப்படும்.

---

## செய்யுள் – 9

அதீதத்தில் உணருமுறை

*நேரிசை வெண்பா*

**கடலமுதே! வெண்ணெய்க் கரும்பே! என்கண்ணே!**
**உடலகத்து மூலத் தொடுங்கச்—சடலக்**
**கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதான் என்னை**
**மருவியா தென்றுரைக்க மன்.**

### பொழிப்புரை

*சமுத்திரத்திலே உண்டான அமுதம் போன்றவரே! திருவெண்ணெய்நல்லூரிலே உள்ள கரும்பை யொத்தவரே! அடியேனுக்குக் கண்போல் உள்ளவரே; இந்தச் சரீரத்தில் மூலாதாரத்தில் கருவி கூடாமல் அதீதப்பட்டு ஆன்மா கிடக்கையில் உணர்வு தோன்றுமாறு சரீரக் கூட்டமாக நின்று உணர்த்திய கருவி எது? ஆன்மா எதனுடன் கூடி அறிகிறது? இதனை எதுவென விளங்க அருளிச்செய்ய வேணும்.*

### விரிவுரை

சுருங்கச் சொல்லின் இப்பாடல் பகரும் விஷய மாவது—ஆன்மாவின் அயர்ந்த நித்திரையில் தத்துவங்கள் நீங்கிவிடுகின்றனவே! அப்போது அதை எழுப்பும் கருவி எது? எதைப்பற்றிக்கொண்டு ஆன்மா எழுகின்றது—என்பதாம்.

ஆன்மாக்கள் யாவற்றிற்கும் அவை பற்றி நிற்கும் குற்றமாவது ஆணவமலமே. விஞ்ஞானகலர் முதல் மூவகையினரையும் இம்மலம் விட்டபாடில்லை. ஆதலால், அறிவை மறைத்துத் தொழிற்படவொட்டாமல் செய்கின்ற இந்த மலத்தை நீக்கியுதவுவதற்கே இறைவன் ஐந்தொழிலும் செய்கின்றான். இங்ஙனம் செய்வது அவனதியல்பான வரம்பற்ற கடலொத்த கருணையினாலாம். இவ்வாறான அளவிறந்த இயல்பினை இங்குள்ள தொடக்கச்சொல் ***கடல்*** காட்டுகின்றது. இம்மல நீக்கத்தின் பயனாக விஞ்ஞானகலர் எய்துவதும் பேரின்பமே இதனை ***அமுதே*** என்பது தெரிவிக்கும். இங்ஙனம் அவர்கட்கு உள்நின்றே உணர்த்தி இன்புறுத்தும் சிவத்தியல்பைக் ***கடலமுதே*** என விளிக்கு முகமாக நமக்குணர்த்தலுற்றார் ஆசிரியர். சகலரில் விஞ்ஞானகல நிலையினர் உளர். அவர்க்கும் இங்ஙனமே இறைவன் இனித்தலையும் இத்தொடர் காட்டும்.

இனிப்பிரளயாகலர்க்கும் அவர்தம் கோது போக்கி முன்னே காணப்பட்டு உணர்த்தி இன்பூட்டுகின்றான் இறைவன். இதனை ***வெண்ணெய்க் கரும்பே*** என்றசொல் உணர்த்தும். சகலரிலும் பிரளயாகல நிலையினர்க்கு இத்திறமே இறைவன் உதவுவன் என்பதை அறிவித்தற்கே ***வெண்ணெய்*** என ஊர்ப் பெயர் தரப்பட்டது. இப்பால், சகலராவார்க்கும் இறைவன் கேவலம் முதலியமூன்று நிலையினும் உள்நின்றும், குருவாய்வெளிப்படத் தோன்றியும், தன்னுள்ளமுந்தவைத்தும் அறிவித்து இன்பூட்டுகின்றான். எந்த நிலையினும் முதல்வனுடைய காட்டுதல்—காணுதல் உதவி நிகழ்வுறுதலின் ***என்***

***கண்ணே*** என்ருர். கண்ணுனது காணச் செய்தும் கண்டும் அறிவுறுத்தல் வெளிப்படை. இனி, ***என்*** என்றமையால் ஆன்மாக்கள் தோறும் அவரவர் இயல்பு பக்குவங்கட்கேற்ப நடத்துபவன் இறைவன் என நாமறிதல் வேண்டும். இங்ஙனமுணர்தலேயன்றிக் ***கேவல*** நிலையினும் வழிகாட்டிச் ***சகல*** நிலையினும் கோதாட்டிச் ***சுத்த*** நிலையினும் இன்பூட்டுபவன் இறைவன் எனவும் ***கண்ணே! கரும்பே! அமுதே!*** என்ற முறைமைகொண்டு கூர்தலும் தகும். இவ்வாற்ருல், நம் ஸ்ரீ மெய்கண்டதேவர் எல்லாவுயிர்க்கும் இரங்கும் பெரும்பெயர்ப் பொருளாகிய சிவமே என நாம் கோடல் தகுவதாம்.

சகலத்தில் உயிர் ஐந்தவத்தைப்படுதல் முன்பே கூறப்பட்டது. சாக்கிரமுதலாகக் கருவிகள் நீங்கி நிற்பதும் மேலே சொல்லப்பட்டது. இந்த ஐந்தவத்தைகளுள் மூலாதாரத்தே உயிர், புருடன் என்னும் முறையில் ஒடுங்கிநிற்கும். அப்போது பிராணனும் தொழிற்படாது. இஃதோர் அவசநிலை. இந்த நிலையினின்றும் உயிர் விழிப்பு நிலைக்குவருகிறது. அவசநிலையில் ஆன்மாவுக்கு உணர்வு, உணர்வுஉணர்ச்சியில்லை. ஆதலால், திரும்பவும் விழிப்புற்றெழுமாறு எது உணர்த்தும் என்பதே இங்குக் கேட்கப்படுவது. இதனை அறிதற்குமுன் இறைவன் உயிர்களின் ஈடேற்றத்துக்காக வகுத்துள்ள ஏற்பாட்டினை நாமுணர்தல் வேண்டும். கேள்விப்பகுதியை, ***உடலகத்து............ காண்பதுதான் என்னை மருவி*** என்றவரிகள் கூறும்.

[அருள்குணமுடையவன் ஒருவன். அவன் வருந்தும் பிறனெருவற்கு உதவ நினைக்கிருன். இந்த

நினைவு அருளால் வருவது. நினைந்தவன் சிலருக்குக் கட்டளையிடுகிருன். இந்தக்கட்டளை இவனது நினைவால் பிறப்பது. கட்டளைமேற்கொண்ட அச்சிலர், உதவற்குரியவர்களை நியமித்து உடனிருந்து அவ்வப் போது ஆணையிட்டு அவ்வருந்துமொருவனுக்குள்ள துன்பெல்லாம் படிப்படியாகப் போக்கி அவனுக்கும் உணர்த்தி நன்னிலைக்குரியவனுக்கி உதவுகின்றனர். வருந்தியவன் அருளாளனைப் பொருந்தித் துயரமற்று இன்புற்று வாழ்கிருன்.]

இவ்வாறே, ஆன்மாக்கட்கு உதவுகின்ருன் இறைவன். அருளோடுபிரிப்பற்றவன் முதல்வன். இவ்வருளே சிற்சத்தி எனப்படும். இவ்வருள்நினைவால் வேண்டுங்கால் தொழிற்படும் பரிக்கிரகசக்தி ஏற்படு-கிறது. இதனுல் சுத்தம் — அசுத்தம் — பிரகிருதி மாயைகள் விளைகின்றன. இவற்றுள் சுத்தமாயையில் ***சிவதத்துவம்*** ஐந்தும் தோன்றுகின்றன. இவை ஐந்தும் ***உணர்த்துமுதல்***களாயிருத்தலின் ***பிரேரக காண்டம்*** எனப்படும். இந்தச் சுத்ததத்துவம் ஐந்துமே கருவிகளை எழுப்பித் தொழிற்படுத்தும். இதுவே ஞான இன்ப இயல்புடையது. இதனையடுத்தது அசுத்த மாயாதத்துவம் எனப்படும். அவை ஏழு. இவற்றிற்குப் ***போக சயித்துரு காண்டம்*** என்பது பெயர். இவை காலம் முதலன. இவை வித்தியா தத்துவம் எனப்படும். இவைகள் ஆன்மா போகம் துய்த்தற்குக் கருவியாய் நுண்மையாக உடனிற்பன. இப்பால், பிரகிருதிமாயா தத்துவங்கள் உள. அவை ஆன்ம தத்துவங்கள் எனப்படும். இவைகள் இருபத்து நான்காம். இவை நேரே ஆன்மா போகம் துய்த்தற்குக் கருவியாய் நிற்பன இவற்றிற்-

குப் ***போக்கிய காண்டம்*** என்பது பெயர். இவ்வெல்லாத் தத்துவங்களும் கூட்டினுல் மொத்தம் ***முப்பத்தாரு***கும். இத் தத்துவங்கட் கெல்லாம் முதலாய் இருப்பதே ***மாயை*** எனப்படும் உள்பொருள். இறைவன் அருவம், அருவுருவம், உருவம் எனப்படும் ஒன்பது நிலையினனுகி உயிர்கள் நன்மையடைய நடிப்பன். எனவே, இறைவன் உயிருக்கு அதன் எந்த நிலையிலும் பிரேரக முதலவற்றின் மூலமாக ஏவுதல் புரிந்து விழிப்படையச் செய்கின்ருன் எனச் சுருங்கக் கூறலாம். இதன்விரிவு பெருநூல்களால் அறியலாகும். மற்றும் தொகுத்துரைப்பின், ஆன்ம தத்துவம் இருபத்து நாலும் ஆன்மாவுக்கு அகப்புறக் கருவிகளும் தேகமுமாய்ப் பொருந்தி நிற்க, சிவதத்துவங்கள் ஐந்தும், கலாதி வித்தியாதத்துவங்களைப் பிரேரித்து அறிவிக்கும் என்னலாம். இதனை, "வாயாதி சோத்திராதி" என்னும் சித்தியார்ப்பாடலாலும், "*மூல* வருங் கட்டிலுயிர் மூடமாய் உட்கிடப்ப...... மருவி" என்னும் போற்றிப்பஃறெடை அடிக-ளாலும் தெரியலாம். "கொண்டல் கண்படுக்கும்" என்னும் சிதம்பர மும்மணிக் கோவைப்பாடலில் "ஈதொன்று இயம்புவன் கேண்மதி" என்பது முதல் "கூட்டுதி மகிழ்ந்தே" என்பதுகாறும் உள்ள அடிக ளாலும் இச் செய்தி உணரப்படும். ***யாது என்று உரைக்க மன்*** என்பதன் விடையாக உள்ள பகுதி மேலே தரப்பட்ட தென்க! இதனுல் ஆன்மாவின் எந்த நிலையிலும் உணர்த்துவோன் சிவ முதலே யாவன் எனத் தேர்தல் தக்கது.

## செய்யுள்—10

பாசக்ஷய நிலைமை

*நேரிசை ஆசிரியப்பா*

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அன்னிய மாக்கி அருள்வழி யதனல்
என்னுள் புகுந்தனை எனினே முன்னைத்
திரிமலம் தீர்த்த தேசிக நின்னேடு
5 ஒருவுத லின்றி உடங்கையே ஆகும் ;
பெருநிலை யாகல் வேண்டும் மருவிடும்
மும்மல மதனல் எம்முள்நின் றிலைஎனின்
அம்மலத் திரிவும் செம்மலர்த் தாள்நிழற்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
10 பெயர்வில ஞகும் பெரும தீர்வின்
றமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன இலவெனச் சாற்றின் அமைந்த
மாயேயங் கன்ம மாமல மூன்றும்
மாயா தாகவே யார்ச்சக மாயையின்
15 உற்பவந் தீரா தொழுகுமென் றென்றின்
நிற்சம மாயி னல்லது நிற்பெறல்
இல்லென மொழிந்த தொல்லறந் தனக்கும்
ஏயா தாகும் நாயே னுளத்து
நின்றனை என்பனே நின்றிலை என்பனே
20 பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனே
ஒன்றினை உரைத்தருள் மன்ற குன்றுப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி
கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
25 மெய்கண்ட தேவே வினையிலி
மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே.

## பொழிப்புரை

பழமையாகவே அடியேனேடும் பொருந்தி நிலே பெற்று வரும் கன்மம் எனப்படும் புண்ணிய பாவங்கள் சமமாகத் துலேயொத்த போது அடியேனேடும் கூடிய மலங்களைத் தேவரீர் தீக்ஷையாதிகளால்வேருக்கினீர்.

மற்றும், தேவரீர் அநுக்கிரகத்தின் முறையாலே அடியேனுள்ளத்திலே எழுந்தருளினீர்.

பழமையான மும்மலங்களையும் அடியேனுக்குப் போக்கியுதவிய குருமூர்த்தியே! இப்படி உதவியருளிய தேவரீரோடு எப்போதும் நீங்காமல் ஒன்றுபட்டுக் கலந் துறையும் பேரின்பமாகிய திருவருள் ஒளி உண்டாக வேண்டும்.

முன்பு என் உள்ளத்தே தேவரீர் இல்லேயாதல் வேண்டும்; ஏனெனில், என்னுடன் கூடியே வருகிற ஆணவம் முதலிய மூன்று மலங்களுடன் யான் எப்போதும் வாதனை செய்து நின்றவன்.

அப்படித் தேவரீர் எழுந்தருளியில்லா நிலேயிலே மும்மலங்களைத் தேவரீர் போக்கினதும் இல்லே; அடியேனும் சிவந்த தாமரை போன்ற ஸ்ரீபாதத்திலே வந்து பொருந்தினதுமில்லே; அதற்குப் பதிலாக, பிரபஞ்ச வாதனையால் வந்து சேர்ந்த கன்மங்களைப் புசித்து அதனுலேற்படும் புண்ணியபாவங்களிற் கட்டுண்டு பிறப்பு இறப்பு நீங்க வழியற்றவனுகக் கிடந்தேன். தம்பிரானே இது உண்மை. நிற்க,

தேவரீர் "அடியேன் தற்போது கொண்டுள்ள உடலுக்கு அடுத்ததான பிராரத்துவத்தைத்தான் அநுபவிக்கிறதொழிய இனியும் உடல் எடுத்தற்கான

ஆகாமிய கன்மம் ஏருவகை செய்துளோம்' என்று அருளிச்செய்கின்றீர். அப்படியானல்,

பிராரத்துவம் புசிக்கப்பட்டே தீருவதாயின் அப் புசிப்புக்குரிய உடல் உண்டு. உடல் உள்ளவரையில் இதற்குக் காரணமாகிய மாயை நீங்காது. மாயை நீங்காதாயின் கன்மமும் நீங்காது. இங்ஙனம் மாயை கன்மங்கள் இருத்தலின் ஆணவமும் இருந்தே தீரும். ஆக இம் மூன்று மலங்களும் இருத்தலால், ஆகாமியத்தை ஆர்ச்சித்து மாயையின் தோற்றமாயுள்ள சரீர தொந்தம் நீங்காமல் மேன்மேலும் தொடர்ந்தே வரும். இப்படியானல்,

இருவினை ஒப்பு எங்ஙனம் ஏற்படும்? இருவினை ஒப்பு ஏற்பட்டாலொழிய தேவரீரை அடியார் பெற முடியாதெனச் சிவசாத்திரம் சொல்வது பொருந்தாமற் போம். ஆகையால்,

அடியேனுள்ளத்துத் தேவரீர் கூடிநின்றதாக விண்ணப்பிப்பேனே! அந்த 'மலங்கள் கெட்டுப்போனதாக விண்ணப்பம் செய்வேனே! அல்லது, கெடாமலே நின்றதாகச் சொல்லுவேனே! இவைகளில் எது சரியென ஒன்றை அருளிச் செய்யவேண்டும் அடியேற்கு முடிப்புரையாக.

வளப்பமிக்க பெண்ணைநீர் பாயும் வயல்சூழ்ந்த திருவெண்ணைநல்லூர்க்குத் தலைவரே! கைகால் முதலான உறுப்புக்கொண்ட திருமேனி கொண்டு அடியேனுக்குள்ள கன்மங்களை விளைவறப் போக்கியிட்ட மெய்கண்ட தேவரே! உடம்பு பெற்றிருந்து கன்ம வாதனை இல்லாதவரே! நஞ்சக் கறையைக் கண்டத்திற் கொண்டவரே! அடியேனுக்குக் குற்றமற்ற அறிவாய் இருப்பவரே! இந்த வினையின் இயல்பை எனக்கு அருளிச் செய்விராக!

### கருத்து:

ஓர் ஊருக்கு இருவழிப் பகுதி தோன்றுமிடத்துச் செல்வானுக்குத் திகைப்பு வரும். அப்படியே இரு வினை யொப்பு நேரிட்டதும் வினையைச் செலுத்தும் சத்திக்குத் திகைப்பு நேரும். அப்போது சத்தி தன்னுடைய தொழிலைச் செய்யாது. இதனைத் தேவரீர் தாம் அறியவல்லவர்.

### விளக்கம்

பெத்தநிலை மலத்தொடர்புடையது. ஆதலால் அசுத்தமயமானது. ஆன்மா இப்பெத்த அசுத்த சம்பந்தியாகும். சிவம் சுத்தம். ஆதலால், அது இவ் வசுத்தத்தில் கலந்திருத்தல் முடியாது. ஆனால் சிவம் கலந்திராவிடில், ஆன்மாவுக்கு மல நீக்கமும் வீடுபேறும் கிட்ட வழியில்லை. ஆகவே பெத்தான்மா-வில் சிவம் கலந்திருக்குமா? இராதா? என்பது ஓர் ஐயப்பாடு.

ஜீவன் முத்தநிலை எய்திய ஆன்மாவுக்குப் பிராரத்தம் நீங்கும்வரையில் உடம்பு இருந்தே தீரும். ஆனால், ஆகாமியம் குருதிருவருள் வழிநிற்றலால் ஏறாது என்பர். சரீரத்துக்குக்காரணம் மாயை. மாயை சரீரமுள்ளளவும் நீங்கவழியில்லை. மாயை நீங்காமை யால் இன்பதுன்ப அநுபவத்துக்கும் தொழிலுக்கும் காரணமான கருமம் இருந்தே தீரும். கன்மமும் மாயையும் இருத்தலால் இவற்றை இயையச் செய்யும் ஆணவமும் இருந்தே தீரும். இம்மூன்றும் உள வாதலால் ஆகாமியம் ஏறத் தடையிராது. ஆகாமியம் ஏறுவதானால் பிறப்பு இறப்புக்கள் மாறிமாறித்

தொடர்ந்து வந்து கொண்டுதானிருக்கும். ஆகவே, ஜீவன் முத்திநிலை அடைந்த ஆன்மாவில் மலங்கள் நீங்கி நிற்குமா? இல்லையா?

முத்தான்மாவிற்கு மும்மலங்களும் உளவானால், ஆன்மா இருவினை யொப்பினால் பிறப்பிறப்பை நீங்கி வீடடையும் என்கிற சுருதிமொழி பொய்க்கு மல்லவா? உண்மை யாது? இச்செய்திகளே இப் பாடலில் கேட்கப்பட்டுள்ளன.

இறை திருவருள்தான் ஆன்மாவுக்கு விடுதலை யளிப்பது. வேறுமார்க்கமே இல்லை. இறைவன் நீக்கமற நிற்பவன். ஆகையால், ஆன்மாவினுள் எப்போதும் உள்ளான் என்பதே நியதி. பாலில் நெய்போல்வது இவ்வாறிருக்கும் நிலை. சூரியன் எதிரில் இருப்பினும் பிறவிக்குருடன் அறியமுடிவதில்லை. இவ்வாறே ஆன்மா, தன்னுள் இருக்கும் இறைவனை உணர்வதில்லை. இறைவன், ஆன்மாவின் இருவினை யொப்பாதி பக்குவத்திலே குருவாகி வெளிப்பட்டுத் தீக்ஷை உபதேசம். அத்துவசோதனை முதலன செய்து ஆட்கொள்கிறான். ஆதலால், ஆகாமியம் ஏற வழியில்லை. உடம்பும் பிராரத்தப் புசிப்பளவே நின்று நீங்கும். அவ்வளவும் வறுத்த வித்துப்போலும், வெந்த துரும்புபோலும் இருக்கும் என்பர். இதுவே சுருக்கமான விடை. இனிப் பாடலின் விளக்கம் காண்போம்.

ஆன்மா மலத்தோடு அநாதியே கூடியுள்ளது. இதுவே அதன் குற்றம். இக் குற்றம் உள்ள நாள் முதலே ***மூலகன்மம்*** உண்டு. அதாவது, விருப்பு

வெறுப்புண்டு என்பதாம். ஆனால் அது சூக்கும நிலையில் தொழிற்பாட்டுக்குரிய வசதிகளை எதிர்நோக்கி யுள்ளது. "வல்லி மல கன்மம் அன்று உளவாம்" என்பது போத வாசகம். இருவினையின் காரியமே இன்ப துன்பங்கள். இவ்வின்ப துன்பங்கள் விருப்பு வெறுப்பின் பயனே. "ஏகன் அநேகன் இருள் ***கருமம்*** மாயை இரண்டு ஆக இவை ஆறு ***ஆதி***யில்" என்பது திருவருட் பயன். "குழவி குருடர் தம் பிணியினால் உற்ற பால் கோலை நோக்க அவைதமை அளிப்பாரென்ன ***நான்*** சார்***கன்ம*** மாயையை ***விரும்ப*** நீ தந்திடச் சகலன் ஆய்" என்ற செப்பறைப் பதிகச் செப்பு கொண்டும் மூல கன்ம உண்மை தெரியலாம். இறைவன் மூல கன்ம மற்றவன் என்பதையே "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னும் குறள் குறிக்கும். "இரண்டேனும் பழையவினையும்" "இருவாதனையற்றிறந்தான் பெருமை" என்னும் இடங்களும் மூலமல கன்ம உண்மை காட்டுவனவே. இப்போது நாம் அனுபவிப்பது பிராரத்தம். இது ஆகாமியத்தின் பயனே. ஆகாமியத்துக் காரணம் விருப்பு வெறுப்பே. இங்ஙனம் அறிவது அநுமான மாம். "கன்மமும் மூலங் காட்டி.........நிற்கும்" என்பது சித்தியார். ஆகாமியம் ***தூலகன்மம்.*** விழைவு வெறுப்பு ***மூலகன்மம்*** என்பதே சித்தாந்தம். முதற் காரணமாகிய மூலவினை, பதி முதலிய பொருள் போல அநாதியாயுண்டென்பர். வினைதற்றொழில் தொழில் முதனிலையா மாறு காட்டப்படும் பேருரைக்கண். இங்கு இத்தகைய அநாதியான கன்மத்தைச் சுட்டும் பொருட்டே ஆசிரியர் ***மன்னிய*** என்பாராயினர். இதனால் கன்மத்தின் உண்மை உணர்த்தப்பட்டது.

ஜன்மச் சமம்

என்பது இருவினையொப்பு எனப்படும். இருவினை யொப்பு பற்றி வேறு வேறு விளக்க முரைப்பர் பிறர். அவர்காட்டும் சுந்தோப சுந்த நியாயம் பொருந்தாது. இனிச் சித்தாந்தம் காட்டும் விளக்கம் ஏற்புடைத்தாம். காமிய வினைகள் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போல்வன. இவை பலனளித்த மாத்திரையில் கெடும். ஞானத்தைத் தர ஏதுவாகா. சரியை முதலிய தவ வினைகள் பயனைத் தந்தவுடனே கெடுவனவல்ல. ஞானத்தைத் தந்து மோக்ஷத்தைப்பயக்கும். ஆகவே, சரியை முதலிய முறுகி வளருமியல்புடைய தவங்க ளால் அறம் பாவம் இரண்டும் ஒத்தால் ஞான குருவைத் தேடியடைந்து ஞானத்தை அடையலாம். "பசித் துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்" என்னும் சிவஞான போத வெண்பாவுரைகள் இங்கு நோக்கற் குரியன. மேலும் ***இருவினை ஒப்பு*** எனப்படுவது யாதெனில், மலபாகக் குறியும், சத்திநிபாதக் குறியும் ஆன்மாவின் ***அறிவிலே*** விளங்குவது போலவே நல்வினை தீவினை என்னும் இருவினைப் பயன்களும் பிறப்பு இறப்புக்களில் ஆன்மாவைக் கட்டுப்படுத்தும் தன்மையில் சம முடையனவாகும் என்கிற எண்ணம் ***ஆன்ம அறிவின்கண்*** விளங்கி அவ் ***விருவினை களையும் ஒப்ப நாடி உவர்த்து விடுதலாம்.*** இதனுல் சுவர்க்க இன்பத்தைக் கருதி நன்மை செய்வது நன்றன்று; நரகத் துன்பத்துக்கு அஞ்சித் தீமை செய்யாமை போலப் பிறப்புத் துன்பத்துக்கு அஞ்சித் தீமை செய்யாமல் பிற உயிர்கட்குச் செய்யவேண்டிய நன்மையைப் பயன் கருதாமல் தன் கடமை என்று செய்தலே தக்கதாம். திருத் தொண்டர் புராணத்து

அடியார்கள் இவ்விதமே கடமை கருதிச் செய்தனரே யல்லால் பயன் கருதிச் செய்திலர் என்பது காணலாம். இவ்விரு வினையொப்புப் பக்குவம் எப்படியமையும் ? உயிருக்கு இச்சையும் அறிவும் செயலும் குணமாம். ஆகவே உயிர் ஏதேனும் ஒன்றை ***இச்சித்து*** அது நிறைவேறும் உபாயம் ***அறிந்து*** அவ்வுபாயத்தைச் ***செய்தலு***றும் இங்ஙனம் ஒழுகுமிடத்துச் சுவர்க்காதி பலனை இச்சிக்காமல், சிவனடியடைதலை இச்சிக்க வேண்டும் அதற்குரிய உபாயமான சரியையாதி தவங்களான சிவ புண்ணியத்தைச் செய்ய வேண்டும். இதனுல் இருவினை ஒப்பு உண்டாம். அதாவது, பதித் தீவினை விரும்பப் படாமை போலவே பதிநல் வினையும் பதங்கருதி விரும்பப்படாது நீங்குதலாம். இதுவே ***பதி இருவினை ஒப்பு*** எனப்படும் இதனுல். இருவினை ஒப்புக்குறியும் ஆன்ம அறிவின்கண்ணே விளங்கவேண்டும் என்பது தெரியலாம். சங்கற்ப நிராகரணத்தே " இருவினை ஒத்த எல்லையில் வைத்தன ரென்னில்—அருவினை தூக்க வருநிலை நில்லா—ஒருவினை புரிகால் இருவினை ஆகா — ஒப்புமாறு செப்புக " என்னும் சைவவாதி சங்கற்ப நிராகரண முத்தி நிலை மறுப்புரைக்கு மிடத்தேயும் இவ் விருவினை யொப்பு பற்றிக் காணலாம். இத்தகைய விருப்புவெறுப்பில் சமபாவனை அறிவின்கண் உண்டாதலை நம் ஆசிரியர் ***கன்மச் சமம்*** என்றுள்ளார்.

## மலங்கவா அன்னிய மாக்கி

மலம், தன்னுடைய சக்தி தேய்வதற்குரிய துணைக்காரணங்கள் யாவற்றோடும் கூடுதல் மலபரி பாகம் எனப்படும். மலத்துக்கு அனுகூலமாய் நிற்பது

திரோதான சக்தியாம். சிவத்தினது கருணைமறமே இச்சத்தியாகும். இனி ஞானங் கூடுவதற்கான பக்குவ நிலை சிவபுண்ணியத்தால் சரியையாதிகள்மூலம் விளை-யும். இங்ஙனம் ஞானத்துக்கான சூழ்நிலைகள் படிப் படியாக நேரும்போது திரோதானசத்தி, தன் கருணை மறத்தியல்புமாறிக் கருணைச் சத்தியாகிப் பலவாறு மலபரிபாகம் விளக்கும். இந்நிலையிலே இறைவன் திருவருள் வீழ்ச்சி ஆன்மாவிடத்து உண்டாம். இதனைச் சத்திநிபாதம் என்பர். அப்போது ஆன்மா, மனைவி மக்கள் முதலிய உலகத்துழனியின் அச்சந்தோன்றப் பெற்று, உலகவாழ்க்கைக்கு வெருவி உண்மைக் குரவனை நாடுமாறு தூண்டும். இவ்வவதரத்தே ஞானகுரு தரிசனம் நிகழும். அப்போது, அக்குரு திருவருளால் ஒளிகண்ட இருள்போன்று மலங்கள் அகற்றப்படும். குருவினாலே ஞானம் நிகழும் என்பர். தவத்தால் ஞானம் நிகழும் என்பதும் இக் கருத் துடையதே. எனவே, இறப்பில் தவத்தால் இருவினை யொப்பு முதலன தோன்றப்பெற்றுக் குரு வருகை நிகழும். அக் குருவினால் ஞானம் விளக்கப்படும். இதுவே படிமுறை. தவமில்லாவழி குருவருளினாலும் ஞானம் விளைதராது. எனவே, ஞானம் நிகழ்தற்குக் குரு துணைக்காரணமாயிருத்தல் பற்றி அன்னியம் ***ஆக்கி*** என்றார்.

**அருள்வழியதனால் என்னுள் புகுந்தனை—**

பயன் கருதாமே எவ்வுயிர்களிடத்தும் இரங்கி யுதவுதல் அருளுடைமையாம். எல்லா அறத்தினையும் அகப்படுத்து நிற்பது அருளுடைமை. ஆகவே ஆன்மாவுக்கு இது மேம்பாடுடை விரதமாம். இதன்

பயன் ஞானம் பெறுகை. ஞானத்தின் பயன் வீடு பேறு. எனவே, ஆன்மா, அருளறம் பற்றியொழுகி வினை மாசுதீர்ந்து அந்தக்கரணத் தூய்மை எய்தி ஞானத்தை எதிர்பார்த்து நிற்கும். அப்போது ஞானமே திருமேனியாக உடைய ஞான குரவர் (சிவம்) காட்சியளிப்பர்; தீக்கையாதி புரிவர்; ஞான நிட்டை மேவுவிப்பர். அதாவது, அதுகாறும் ஆன்ம அறிவின்கண் தாம் மறைந்துறைந்து வந்தமை புலப்படுமாறு செய்து தம்மைச் சிவமே எனத் தெளிவித்து ஞானநன்னெறியில் நிறுத்திச் சீவன் முத்தராக்குவிப்பர். "அன்பின் வழியது உயிர்நிலை" அருளின் வழியது குரு (ஞானம்) நிலை. இதுபற்றியே "அல்லல் அருளாள்வார்க்கு இல்லை" என ஞாலங் கரியாகக் கூறியருளினர் செந்நாப்புலவர். இங்கு, ஸ்ரீ மெய்கண்ட தேவர் தமக்கு அருள்வழியால் காட்சி யளித்த தன்மையை நமக்கு இவ்வரியால் தெரிவித்தா-ராவர் நூலாசிரியர் "எம்பிரான் என்றதே கொண்டு ***என்னுளே புகுந்து*** நின்றிங்கு" என்பர் திருநாவுக் கரையரும் இனி, சூரியன் உதிக்கப்பெற்ற பின்னர் இருள் ஒழிதருவது போலவே. குருவருளால் ஆன்மா, தான் திருவருள்வழியிலே நிற்றலை உணரத்தலைப் படலும் அதன்பாசங்கள் நீங்கப்பெறும். "ஞாத்வா தேவம் முச்யதே சர்வபாசை:" என்பது சுவேதா சுவதரம். இதுபற்றியே, ***முன்னைத் திரிமலம் தீர்த்த தேசிக*** " என்றுள்ளார் ஆசிரியர். ஏகனாகி நிற்றலால் மலவாதனை இன்றுதலும், இறைபணி நிற்றலால் மாயா கன்மங்களின் வாதனையின்றுதலும் பெறப் பட்டமையின் ***மலமாயை*** தன்னொடு வல்***வினை*** இன்றே என்பதனை வேறோரதிகரணமாகவைத்து

ஓதல் வேண்டாவாயிற்று" என்பது பேருரை. இதனால் தேசிகரருள்வழி நில்லாது மும்மலவாதனை யறுதல் கூடாதென்பது உணர்த்தப்பட்ட தென்க.

## நின்னோடு ஒருவுதலின்றி உடந்தையே ஆகும் பெருநிலை ஆகல் வேண்டும்.

அரும்பொருள் கைவரப் பெற்றாெனொருவன், அதனாலாய பயனையும் நுகர்ந்தபின் அப்பொருளை இழக்க ஒருக்காலும் ஒருப்படான். அவ்வாறே இவ் வாசிரியர், தமது ஞானாசாரியருடன் என்றும் இருந்து பேரின்ப முற்றுவாழும் நிலையினை வரமாக வேண்டு கின்றார். "சிக்கெனப்பிடித்தேன் எங்கெழுந்தருளு வது" என்ற திருவாசக உரைகளும் இந்நிலை புலப் படுத்துவனவே. இதுகாறும் இறைவன், ஆன்மா வாகிய தன்னுடன் ஒருவுதலின்றி உடனாய் இருந்தமை ஞானகுரவர் திருவருளாலே தெரிதருதலால் தான் இனி அவ்விறைவனுடன் ஒருவுதலின்றி உடந்தையா-யிருத்தலே தக்கதென நமக்கறிவித்தற்கு இங்ஙனம் அருளினாராவர் ஆசிரியர். "ஏகனாகி இறைபணி நிற்றல்" சீடராவார்க்கு ஏற்புடைச்செயலாம். இதுவே சிவத்திடம் — ஞானாசாரியரிடம் — நாம் பெறலரும் பரிசில் ஆகலால் இதனைப் ***பெருநிலை*** என்றார். முத்தியில் ஆன்மா சிவனேயாய் ஒற்றுமைப்படுத லினும் சிறந்தபேறு வேறு ஏதும் இன்றாம். அவ் வொருமையும் "அவனேதானே ஆகிய அந்நெறி" போல்வதொன்றாமன்றிப் பிறர் பலவாறாகக் கூறும் ஒருமைப்பாடு அன்றாம் என்றற்கும் இங்ஙனம் ***பெருநிலை*** எனலுற்றார் என்க. ஆன்மா என்றும் அடிமையேயாதலால் ***"ஆகல் வேண்டும்"*** என்று

வேண்டித்தமது அடிமைத்திறம் புலப்படுத்துள்ளார் ஆசிரியர். இனித்தனது ஐயம் கேட்டல் தொடங்கப் படுகின்றது.

அடியேன் அநாதியே மும்மல வாதனையும் உடையேன். ஆதலால், தேவரீர் அநாதியே அடியேனது உள்ளத்தில் இல்லை என்றல்லவா சொல்லவேண்டியுள்ளது? இதனால் முன்னே என்னிடத்தில் தேவரீர் இல்லை என்பது சரிதானா? என்பது ஆசிரியர் விடுக்கும் வினாவாம். இறைவன் வியாபகன், வியாபகமாவது உள்ளும் புறம்பும் நிறைந்திருத்தலாகும். மற்றும் இறைவன் கருணையன். ஆதலால், உயிர்கள் மலப் பிணிப்புண்டு கிடக்கும் கேவல நிலையிலேயும் ஆன்மாவுக்குள் வீற்றிருந்தே அதனைக் கரையேற்றற்கான கருவிகளை விருப்பு வெறுப்புக் கேற்ப அளித்து, தானிருப்பது தெரியா வண்ணம் உதவி செய்தே வருகிறான். பக்குவம் எய்தியபிறகு, தான் தொன்றுதொட்டு மறைந்திருந்து அருள் புரிந்து வருதலைத் தெரியச் செய்கிறான். இது குருவருளாகித் தெரிவிக்கும் அருள் நிலைமையாம். ஐயப் பகுதியை "*மருவிடும் மும்மலம் அதனால் எம்முள் நின்றிலை* எனின்" என்ற வரி தெரிவிப்பதாகும். சிவஞான சித்தியாரில் "உரை தருமிப் பசுவர்க்கம்" எனத் தொடங்கும் பாடலில், "மும்மலங்களுடைய சகல வர்க்கத்திற்குக் கன்ம ஒப்பில் நால்வகைச் சத்திநிபாத முறைமையில் வைத்து அரிதுணர்த்த வேண்டியிருத்தலால், இவ்வுலகிலே அவ்வுயிர்கட்காகவே குருமூர்த்தியை அதிட்டித்து நின்று சாதார தீக்கை செய்து மலத்தை நீக்குவன்". எனக் கூறியிருப்பது காணலாம். மற்றும், "குறித்தடியில் நின்று"

என்னும் பாடலில், "நிறத்துவதோர் குணமில்லான் தன்னையொருவர்க்கு நினைப்பரியான் ஒன்றுமிலான் *நேர்பட வந்துள்ளே* பொறுப்பரிய பேரன்பையருளி அதன் வழியே *புகுந்திடுவன்* எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே" எனக் கூறப்பட்டிருத்தலும் தெரிதல் தக்கதாம்.

இப்படித் தேவரீர் உள்ளே புகுந்திருந்து அருள் செய்யாக்கால், அடியேனுக அந்த மலங்களை எப்படிப் போக்கிக்கொள்ள முடியும்? பக்குவ நிலை எய்தித் தேவரீரது திருவடிகளிலே எப்படி வந்து பொருந்த என்னால் இயலும்? இவையிரண்டும் இயலாமையால், பிரபஞ்ச வாதனையாலே வந்தடையும் கன்மங்களைப் புசித்து அப் புசிப்பில் நிகழும் புண்ணிய பாவங்களில் கட்டுண்டு பிறப்பு இறப்புத் துயரங்களை ஒழிக்க வழி இல்லாதவனாகவே கிடப்பேன் என்பது நிச்சயம். பாசம் உள்ளளவும் இறைநிலை விளங்காது. பாச நீக்கத்தின்போது இறைநிலை விளங்கும். பாச நீக்கம் இறையருளால் விளைவது. குருவருளே பாசநீக்கம் பண்ணுவது. "அருக்கனேர் நிற்பினும் அவ்விருளே காணார்க் கிருட்கண்ணே பாகத்தார்க்கீசன்" எனவும், "தன்னுணர்வு, நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல் — பாசத்தார்க்கின்றாம் பதி" எனவும் சாத்திர நூல்கள் இச் செய்தி சாற்றுதல் காணலாம். இவ்விடயங்களை "*அம்மலத் திரிவும் செம்மலர் தாள்நிழல் சேர்தலும் இல ஆய் சார்பு அவை பற்றிப் பெயர்விலன் ஆகும் தீர்வு பெரும*" என்ற அடிகளிற் கூறியுள்ளார் ஆசிரியர்.

குரு திருவருள் செய்தபின் ஆகாமிய கன்மம் ஏறுமென்று நினைக்கவேண்டாம். இப்போது எடுத்துள்ள இந்த உடலுக்கமைந்த பிராரத்துவம் ஒன்றே அநுபவிப்பதாகும். ஆகாமியம் ஏருமையால் அடுத்த பிறப்பு இல்லை என்று தம் ஞானசாரியர் அருளிச் செய்வதாக, ***"இன்று அமைந்த கருமத்து இயைந்தவை அல்லது சமைந்தன இல என சாற்றின்"*** என்ற பகுதியில் தெரிவிக்கின்ருர் ஆசிரியர். முகந்துவந்துவிட்ட பிராரத்தவினை யொன்றே உடற்புசிப்பாய் நிகழும் குருவருள்வழி யொழுகுதலாலே ஆகாமியம் ஏறவழியில்லை. அதனைக்குருவருளே தொலைத்திடுகிறது. இதனை, "என்றவினை உடலோடேகும்; இடை ஏறும் வினை தோன்றில் ***அருளே சுடும்"*** என்பது ***திருவருட்பயன்.*** "ஞானத்து அழுகுற அழிந்து போம் இருவினை" என்பது ***சிவப் பிரகாசம்.*** "இனிச் செய்கன்ம மூலமலம் ஞானத்தால் இடிப்பன்" என்பது ***சித்தியார்.*** "பின் செய்வினை மாயையுடன் நில்லாது" என்னும் ***சிவஞான போதம்.***

**அமைந்த மாயேயம் கன்ம மாமலம் மூன்றும் மாயாது; ஆகவே ஆர்ச்சனம் மாயையின் உற்பவம் தீராது ஒழுகும்.**

இப்பகுதி மும்மலங்களும் நீங்க ஏது வில்லை போலும் என்று தெரிவிப்பதாகும். பிராரத்துவம் இப்போதுள்ள உடம்பால் புசிக்கப்பட்டு ஒழிந்துபோமென்பது சரிதான்; ஆனல் இந்த உடம்பு மாயையின் காரியமாகும். ஆதலால், உடம்பிருப்பது பற்றி மாயையும் உள்ளதென்றே கொள்ளவேண்டும்.

ஏனெனில், உடல் காரியம்; மாயை காரணம். மாயை உண்டெனப்படவே கன்மமும் போகாது. இப்படி மாயையும் கன்மமும் இருத்தலால், ஆணவமலம் இருந்தே தீரும். இவ்வாறு மும்மலங்களும் உளவாயின் ஆகாமியம் நிகழ்ந்தே தீரும். ஆகாமியம் நிகழ்வதனாலே மேலும் மேலும் பிறப்புகள் வந்து கொண்டேதானே இருக்கும்? என்று இந்தப் பகுதி ஐயத்தை வெளியிட்டு நிற்றல் காணலாம். இதற்கு விடையாகச் சித்தியார் நூலில் " அங்கித்தம் பனம் " என்ற செய்யுள் செப்புமதை நோக்கலாம். சுடும் தன்மை உடையது அக்கினி. அதைத் தம்பனம் செய்ய வல்லவர் அக்கினிக்குள்ளே முழுகிக் கிடந் தாலும் அவரை அந்த நெருப்புச் சுடுவதில்லை. கொன்றுவிடும் இயல்புடைய விஷத்தினைத் தடுக்கக் கூடிய மந்திரம் மருந்து தெரிந்தவர்களை விஷத்தை அவர்கள் புசித்தாலும் ஒன்றும் செய்வதில்லை.

ஞானமடையப் பெற்றவர்கள் இந்திரியங்களைத் தம் வசப்படுத்தியவராவர். ஆதலால், அவர்கள் இப் பிறப்பில் பிராரத்துவம் பற்றி ஏது தொழில் செய்து கிடப்பினும் அவர்கள் அறிவின்கண் விருப்பு வெறுப்பு ஏற்படாது. ஆதலால் தவாப் பிறப்பு ஈனும் வித்தாகிய அவா அவர்கட்குப் பிறப்புத்தரமாட்டாது. இவர்கள் தம் பணியென ஏதும் கருதார்: எல்லாம் இறைபணி யெனவே கருதிக்கிடப்பர். இவர்களுடைய பிராரத்துவ வினையும் வன்மையாக இவரைத் தாக்கமாட்டாது. தணிவுடையதாகவே தாக்கும். வெந்த துணிபோலும் காட்சிமாத்திரையாய் நிகழும் இவர்களுடைய உடற் புசிப்புகாயம் இருந்தபாண்டம்போலும்நிகழும் இவர்தம் பிராரத்துவத்தின் தீவிர வாதனை. இவ் வாசனை கறிக்கு

உதவாமை யாவரும் அறிவர். பாண்டங்கள் செய்யப்பட்டு முடிந்தபின்னர் குயவனுடைய சக்கரம் மந்தமாகச் சுழன்றாலும், வனைதல் தொழிலுக்குரியதாகிப் பயன்படாது. வினை தவிர்ந்த சக்கரத்தை மந்த வாதனைக்குவமை காட்டுவர் நூலோர். எனவே, தாக்கும்வன்மை தளர்ந்துபோய்விட்ட பிராரத்துவத்தை ஞானிகள் புசிக்கும்போது ஆகாமிய வினை எழுதற்கு வழியில்லை. இவர்தம் மலவாதனை உடம்பு மாயும்போது வேறு பற்றில்லாமையால்,—மரம் வீழ்ந்து காயும்போது அதனைச் சார்ந்திருந்த புல்லுருவியும் உடன் வீழ்ந்து மாய்தல்போல—தானும் மாய்ந்து ஒழியும். ஆகையால், மேன்மேலும் பிறப்புறுதற்கு வழியில்லை. பிறப்பின் வழியடைகல் குரு திருவருளேயாமென்க. "எல்லா மலங்களும் பின் காயமொடு மாயுமன்றே" என்பது சித்தியார். ஆகாமியமே விளைதற்கு வழியின்மையால் அதனை ஆதாரமாகக் கொண்டு பிறப்பு வருதற்கு ஏது இன்றாம் என நாம் தெரிதல் தக்கது. வறுக்கப்பட்ட வித்து—ஆயன் வெட்டின மரம்—புடம் பண்ணின பாஷாணம்—வெந்தெரிந்த துணி—இவை உருவ மாத்திரையில் உளவாமேயல்லது வேறு பயன்படுவதற் குரியவாகா. ஆகையால், காரண மலங்களும் காரியமாகிய உடம்போடு தேய்ந்து அறும் என்ப.

ஆன்மா, இருவினை யொப்புப் பக்குவம் எய்தினாலன்றிக் குரு திருவருளை அடைய இயலாது. இருவினையொப்புப்பக்கும் எய்துவது எளிதன்று. பிராரத்தப் புசிப்பின் போதே ஆகாமிய விளைவுக்கு வழியுண்டு. இதனால் மும்மலங்களும் நீங்காத வலிவு அடையக் கூடும். ஆகையால், சாத்திரம் சொல்லும் புண்ணிய

பாவச் சமம் என்கிற தன்மம் விளைவ தெப்படி என்பது மற்றுமோர் ஐயப்பாடாம். இதனே, *"ஒன்ருென்றினில் சமமாயின் அல்லது நின் பெறல் இல் எனல் ஒழிந்த தொல் அறம் தனக்குமே யாதாகும்"* என்ற வரிகளால் ஆசிரியர் கூறியுள்ளார். புண்ணிய பாவத்துக்கு ஏற்ற தேகம் இருக்கையில் வினை யொப்பது எப்படி ? என்பது வினவாம். இதற்குரிய விடை மேலே சொல்லப்பட்ட விஷயத்தில் இருப்பதேயன்றிப் பின் தருவதும் கொள்ளப்படும். இருவினை யொப்பு என்பது சரீரத்தை முன்னிலையாகக் கொண்டு ஏற்படுவதென்பது சரியன்று. அது புண்ணிய பாவங்களிரண்டிலேயும் ஆன்ம அறிவின்-கண் சமமாக வெறுப்புத் தோன்றுதலே ஆகும். இந்த அவதரத்திலே சிவன் ஆசாரிய மூர்த்தமாக வந்து இரட்சிப்பதால் பிறவிக்கு வழியில்லையாம். இதனை "எல்லை இரண்டும் இடை யொப்பில்—பல்பிறவி—அத்தமதி லன்ருே அளவென்று பார்த்திருந்து சத்தி பதிக்கும் தரம் போற்றி" என்ற போற்றிப் பஃருெடையடிகளால் அறியலாம். தீவிரதர அருட் சத்திப் பதிவின் போது மலச் சத்தி மடங்கிப் போம் என்பது கருத்தாம்.

**நாயேன் உளத்து நின்றனை என்பனே ? நின்றிலை என்பனே ? பொன்றிய பொன்றிற்றில மலம் என்பனே ? ஒன்றினை உரைத்தருள் மன்ற —**

முன்பே ஆசிரியர் "நின்னோடு ஒருவுதல் இன்றி உடந்தையே ஆகும் பெருநிலை ஆகல் வேண்டும்" என்று தமது ஞானசாரியரை வேண்டிக் கொண்டமைக் கிணங்கவும், தற்போதமடங்கி அரன்

பணிக்கே ஆளாகியமைக்கிணங்கவும், இங்குத் தன்னை ***நாயேன்*** என்று கூறிக்கொள்ளலுற்றார் ஆவர். உலகங்கூறும் மான அவமானங்களை நோக்காது எசமானனுக்கே அடிமைப்பட்டு அவனருளே நோக்கிக்கிடத்தல் நாய்க்கு இயல்பு. "முடங்கு சுருள்வாய் ***நாய்க்கும்*** ஒருமுடி சூட்டினன் எம்பெருமானே" எனப்பிறரும் தமது ஞானசாரியரைப் போற்றுதல் பேணத்தக்கது. உயிர், கரணங்கள் யாவும் சிவமயமேயாகும். என்றாலும், இவ்வியாபகத்தில் வேறுபாடுண்டு. இவ் வேறுபாடில்லையாயின் நாம் முத்திபெறுதற்கான முயற்சியே செய்யவேண்டுவ தில்லையாய் முடியும். உடம்பிலுள்ள ஐந்து இந்திரியங்களிலும் உயிர் ஒப்ப நிற்கிறது. என்றாலும், ஏனை இந்திரியங்கள் கண்ணிந்திரியம் போன்று சேய்மைக்கண் சென்று விடயத்தை வியாபித்தறிதல் இல்லை; தம்மிடம் வந்தவிடயத்தை மட்டிலேயே அறி கின்றன. இவ்வாறுள்ளது இறைநிறைவு ஆன்மாவினிடத்தும் தத்துவங்களிடத்தும் என நாமறிதல் வேண்டும். ஒளியிழந்த கண், மாசுநீங்கப்பெற்ற பிறகு தன் ஒளியையும் தனக்கு உள் ஒளியாய் நிற்கும் ஆன்ம போதத்தையும் ஒருங்கே பெறும். இவ்வாறே ஆன்மா, கருவிஞானத்தைக் கைவிட்டுச் சிவஞானத்தை அடையப்பெறுதல் உள்ளது. இதனால் ***இறைவன்*** ஆன்மாவின் ***அறிவுக்கறிவாய்த் தோன்றுபவ***னென நாம் கோடல் வேண்டும்.

மலம் பொன்றியதா அல்லது பொன்றவில்லையா என்ற ஐயப்பாட்டினைச் சித்தியார் 'நெல்லினுக்குத் தவிடுமிகள்" என்று கூறும் பாட்டின் பொருளா லறியலாம். மலம் அநாதியானது. அது அழியும்.

ஆனல் ஆன்மா அழியாது. அநாதியாகவே அரிசியோடு கூடியுள்ளமுளை தவிடு உமிகள் நீங்குவதைக் காண்கிறேம். இதனல் அரிசிக்குக்கேடில்லை. அதன் முளைப்புத்தான் நீங்குகிறது. இவ்வாறே, மும்மலங்களும் நன்மையாகிய சிவமுத்தியில் விட்டொழியும். இவ்வாறு ஒழியும் என்றதனல் அது ஏனைப்பெத்தரிடத்திருத்தலால் நித்தப்பொருள் என்றற்கு இழுக்கில்லை. இதுவே ***பொன்றிய பொன்றிற்றில மலம் என்பனே*** என்ற வினுவுக்குரிய விடையாம். இக்கருத்து ' அழிந்திடும்பாசம் என்னில் நித்தம் என்றுரைத்தல் வேண்டா'' எனத்தொடங்கும் சிவப்பிரகாசப் பாடலாலும் உணரப்படும். இவற்றுல் இறைவன் நிறைவுக்கும், மலத்தின் உண்மைக்கும் நீங்குகைக்கும், ஞானசாரியன் திருவருள் ஆன்மாவினை நன்னெறிப்படுத்துப் பாசம் நீக்குகைக்கும், ஏதும் குறைவில்லை என்பது தெளிதரவேண்டும், முப்பொருளுண்மைக்கும் எப்போதும் இழுக்கில்லை என்பதே ***ஒன்றினை உரைத்தருள் மன்ற*** என்பதற்கான விடையாமென்ப.

**குன்று பெண்ணை புனல் வயல் வெண்ணெய்க்கு அதிபதி—**

இவ்வரி ஸ்ரீ மெய்கண்டதேவரை நம் ஆசிரியர், தமது தலைவராக ஏற்று விளித்தலை உணர்த்தும். பெண்ணைக்குச் சிறப்புப் புனலுடைமை. வெண்ணெய் ஊருக்குச் சிறப்பு வயலுடைமை. அங்ஙனமே ஊரார்க்கு (சகலர்க்கு) இன்றியமையாச் சிறப்பளிப்பவர் ஸ்ரீ மெய்கண்டதேவர் என்பது கருத்தாம். ***அதிபதி*** என்றமையால் ஞானசாரியரது ஒப்பற்ற

பெருமை புலப்படுத்தப்பட்டது. குன்றுப் பெண்ணைப் புனல், வயலுக்குள் பாய்ந்து தங்கி வளம் செய்தலொப்ப, சிவமும் ஆன்ம அறிவுக்குள் அறிவாய்த் தங்கி முத்தி விளைப்பதென்க! இது காறும், ஸ்ரீ மெய்கண்டார் உலகர் யாவர்க்கும் முத்தி யளிக்கும் பெரியோரெனப் புலப்படுத்தி இதன்மேல் தனக்கு அங்ஙனம் புரிந்தருளியமையைப் போற்று கின்றார் ஆசிரியர்.

**கை கண் தலை வாய் கால் செவி மூக்கு உயிர் மெய் கொண்டு என்வினை வேரற பறித்த மெய்கண்டதேவே!**

ஆண்டவன், சகலராவார்க்கு அவர்தம் மும்மலங் களையும் பற்றறப் போக்கவேண்டி மானிடச் சட்டை தாங்கி வந்தருளுவன். விஞ்ஞானகலர், பிரளயா கலர்க்கு அருள்வது போல வந்து பயன் படான். ஒரு தாய்க்குப் பல பருவத்துப் பிள்ளைகள் இருந்து அவர்கட்குப் பல் வேறு வகையான குறைகளிருக்கு மாயின், அவள் அவரவர்கட்கும் ஏற்றாற் போல உதவி செய்ய வேண்டிப் பலவகை முறைகளை மேற்கொள்ளு கிறாள். இதனால் அவளது அன்புக்கு ஏதொரு ஏற்றத் தாழ்வும் இல்லை. இவ்வாறே இறைவனும் ஒரே நிகரான அன்புடையனாய் அவரவர் பண்புக் கேற்ப நிராதார சாதார முறைகளை மேற்கொள்ளலுற்றுச் சகலர்க்கு மானிடக் கோலத்துடன் போந்து திருவருள் புரிகின்றான். ஆனால் இங்ஙனம் அவன் மானிடக் கோலத்துடன் காணப்படினும், அவ்வடிவம் அருள் மயத்ததாம் ஞானத் திருமேனியேயாகும். அது வினை வழி வந்ததன்று. இரும்பை இரும்புகொண்டே வெட்டுதல் போலச் சகலர்க்குச் சகலராகி வந்தே அருள்

புரிய வேண்டியிருத்தலின் இங்ஙனம் மானிடசரீரத்தை ஆதாரமாகக் கொண்டு அருள்புரியலாகின்றான். ஆதலால், *கை கண்.........கொண்டு* என்றார். ஞானாசாரியன் நமக்குக் கைகொடுத் துதவுதல் நோக்கிப் போலும் கை என முதற்கண் கூறலுற்றார். அங்ஙனம் வெளிப்பட்டுத் தீக்கையாதிகளால் வினைகளைப் போக்குதலால் ஆன்மாவுக்குப் பிறப்பறுகிறது. ஆதலால் *என் வினை வேர் அறப்பறித்த* என்றார். இறைவன் அத்துவாக்களே திருமேனியாகக் கொள்வன் என்பதும் இங்குச் சிந்தித்தற் குரித்தாம். வேரை வைத்து வெட்டினால் மீளவும் துளிர்க்கும். ஆதலால், வேரையும் களைய வேண்டியுள்ளது. ஆகாமியம் முதல் ஆணவம் இறுதியாக யாவும் நீக்கப்படுதல் இதனாலுணரலாம். இங்ஙனம், தனக்குச் செய்ததையே நமக்குச் சான்றாகக் காட்டியுள்ளார் ஆசிரியர். இங்ஙனம் புரிந்தருளியவர் சத்திய ஞானானந்த சிவமே யாதலால் *மெய்கண்ட* தேவே என்றார்.

தான் வினை இல்லாதவனாக இருந்தாலன்றி மற்றொருவன் வினையை நீக்க இயலாது. அட்ட தரித்திரன் மற்றொருவனுக்குப் பொருளுதவி வறுமை துடைப்பது இயலாது. அநாதியே வினையில்லாதவன் ஆண்டவன். அநாதிமுத்த சித்துரு என இறைவனைப் புகழ்வர். ஆதலால், அவனே இங்குக் குருமூர்த்தமாக எழுந்தருளியமையின் ***வினை இலி*** என்றார். இதனால் இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் எனப்பட்டது. சூரியன் இருளின் நீங்கியமை போன்றது இந்நீக்கம்.

அவன் பேரிரக்கமுடையான். நம்மாட்டுள்ள குற்றங்களைப் பொருட்படுத்திலன். காப்பதே

குறிக்கோளாகக் கொண்டவன். மரணமென்பதே இல்லாத நித்தியன். இவ்வாறெல்லாம் அவன் பெருங் குணமுடையவனுயிருத்தலால் நாம் அவனுல் உதவி பெறுதல் தவறுபடாது. இதனுலேயே ***மை கொண்ட கண்ட*** என்றூர். கதை தெரிந்ததே. இதுபற்றியே ஔவை யாரும் அதியனை வாழ்த்தும்போது " நீல மணி மிடற்று ஒருவன்போல மன்னுக " எனலானுர்.

இத்தகையன் ஆன்மாவின் அறிவிக்குள் அறிவாய் இருந்து கரையேற்றுகிறுன். தெப்பம், நீந்துபவன் கைக்குள் கிடந்து அவனை வெள்ளங் கடக்கச் செய்கிறது. இங்ஙனமே இறைவனும் குற்றமற்ற அறிவாயிருந்து நம்மை நடத்தும் நடத்தினைப் புரிகின்றுஞதலின் ***வழு இல் என் மதியே*** என்றுர் ஆசிரியர். ஆகவே, இப் பாடலால், மலசத்தி எப்போது மடங்கும்; திருவருட் சத்தி எப்போது பதியும்; பாசம் எங்ஙனம் நீங்கும் என்ற விஷயங்கள் விளக்கப் பட்டன.

---

## செய்யுள் — 11

### *நேரிசை வெண்பா*

ஆன்மாவின் அஞ்ஞான மயக்கம்

**மதிநின்பால் இந்த மலத்தின்பால் நிற்க**
**விதிஎன்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய—பதிநின்பால்**
**வந்தால் இதின்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலேன்**
**எந்தாய் இரண்டாமா றென்.**

## பொழிப்புரை

*அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட அறிவு தேவரீர் பகுதியிலே உண்டானது. அப்படியிருக்க, அடியேன் இந்த மலத்தின் பகுதியிலே கூடி மயங்கி நிற்கைக்கு முறைமையாது? திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளி யிருக்கும் மெய்கண்ட நாதனே! கருத்தாவாக உள்ள தேவரீரை அடியேன் வந்து கூடினால், இந்த மலத்திலே மீள வருவதற்கு முறைமை இல்லை. தேவரீரைக் கூடினால் அந்த அருளோடும் இந்த மலத்தோடும் ஒக்க நிற்கிறது அடியேனுக்கு உண்டாகாது. அடியேனுக்குச் சுவாமியாக உள்ளவரே! அடியேன் தேவரீரோடு கூடி அறிந்தும், இந்த மலத்தோடு கூடி அறியாமலும் இப்படி இரண் டோடும் கூடி அது அதுவாய் நிற்பதற்கு வழக்கு ஏது.*

### விளக்கம்.

ஆன்மா சிவத்தையும் மலத்தையும் ஒருங்கே சார்ந்திராது. ஆயினும் சிவத்தோடு சாரின் ஞானத் தையும், மலத்தோடுசாரின் அஞ்ஞானத்தையும் அடை கின்றது. இரண்டையும் ஒருங்கே சார்ந்திருக்க மாட்டாத அது ஒவ்வொன்றையும் தனித்தனி சாருவது எப்படி? என்பதே வினாவிளக்கம்.

தெய்வம் நின்றுணர்த்தினாலல்லது ஆன்மா எதனையும் அறிய இயலாது. எனவே, அறிதல் தொழிலுக்கு ஆன்மாவானது முற்றிலும் இறைவனையே சார்ந்துள்ளது தெளிவாம். அவ்வாறிருக்கையில் ஏன் மலவாதனை ஆன்மா அடைகின்றது? ஆன்மா சார்ந்ததன் வண்ணத்தது. பளிங்குபோலும் இயல்பு உடையது. பளிங்கு சார்ந்ததன் வண்ணத்ததாக மாறும் தன்மை உடையது. ஆன்மாவும் அப்படிப்பட்ட

இயல்பினதே. கடவுள் ஆன்மாவுடனும், தத்துவங்களுடனும் — பந்தத்துடனும் — எப்போதுமே அத்துவிதமுறையில் கலந்து நின்று இரண்டையும் நடத்துகிருன். இதனுல், ஆன்மா கன்மங்களைச் செய்யலுற்றுப் படிப்படியாக இருவினையொப்புநிலை அடைகிறது. இது அநுபவத்தின் விளைவாம். இதனுல் கன்மத்தில் வெறுப்பும் இறையருளில் விருப்பும் ஆன்மாவுக்கு அதிகரிக்கிறது. இம்முறையால் கன்மம் விட்டு நீங்கலுறுகின்றது. பிறகு இறைவன் திருவருளிலே எப்போதும் சார்ந்துள்ளது. கண்ணுனது படலத்தால் மறைப்புண்டு கிடக்கையில் சூரியனைக்காண முடிவதில்லை. படலத்தை உடனே நீக்கிவிட முடியாது. படலமும் உரிக்கத்தகுந்த பக்குவம் அடையவேண்டியுள்ளது அப்பக்குவம் எய்தி உரிக்கப்பட்டபின் கண்ணுனது சூரியனைக்காண்டல் முடிகிறது. இவ்வாறே உள்ளது ஆன்மாவிஷயமும். இதுவே சுருக்கமான விடை விளக்கம்.

### கருத்து

அறிவு மிகுத்தவனும் ஆகாமல், அறிவில்லாத மூடனும் ஆகாமல் கதி அடையவேண்டும் என்கிற நடுவாம் தன்மையடைந்தவன், தான் பாசத்தின் மாட்டும் பரத்தினிடத்தும் ஆசைபற்றியபோது இரண்டிலும் ஒருங்கிருக்க வொண்ணுமையால் பற்றியது அதுவதுவாய் நிற்பன்.

**மதி நின்பால் இந்த மலத்தின்பால்**

**நிற்க விதி என்கொல்? —**

முழுமுதல்வன் அடிமையாலும் உடைமையாலும் எப்போதும் சாரப்படுவன். உயிர்கள்

எப்போதும் அடிமையே. மாயையும் வினைகளும் இறைவனுக்கு உடைமையாம். மலம் இறைவனருளால் தொழிற்படுவது. இறைவன் உயிர்களோடு அன்பால் அவையேயாய், அறிவால் தானேயாய், ஆற்றலால் அவையேதானேயாய் உள்ளான். ஆகவே, கர்த்தா கன்மத்தின்வழி உயிரை நடத்துதல் பெறப்படும். "அவையே தானே ஆயிருவினையின் போக்கு வரவுபுரிய ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" என்ற சிவஞானபோதச் சூத்திர உரை ஈண்டுப் படித்தறிதல் பயன்படும். நாம் ஓரிடத்துக்குச் செல்லவேண்டுமென்று நினைத்தால், இந்த நினைவே நம் உடம்பை அங்ஙனம் செல்விக்கிறது. இவ்வாறே, இறைவனது ஆணையால் ஆன்மாக்கள் தத்தம் கருமஅளவிலே போக்குவரவு புரியும். உயிர்களின் கன்மத்துக்கேற்ப இறைநடத்தும். இங்ஙனம் இறைபுரிசெயலாலே மதியானது இறையின்பாலும் மலத்தின்பாலுமாக நடக்க விதியாயது. மற்றும், ***வெண்ணெய் வாழ்மெய்ய*** என்பதனுல் இறைவன் உயிர்களின் பொருட்டுத்தான் படிப்படியாகப்பக்குவநிலை வ ரு வி த் து ப் ப க் கு வ முதிர்வின்போது குருமூர்த்தமாகி ஆட்கொள்ளுகின்ருன் என்பதை உணர்த்தியுள்ளார். ***வாழ்மெய்ய*** என்று வினைத்தொகையாகக் கூறியுள்ளமையால் முக்காலும் இப்பரமனே யாவர்க்கும் அருள்புரிபவனென்கிருர். ஆதலால், நாம் இக்காலத்தும் அங்ஙனமாய நிலையில் வழிபட்டால் பாசநீக்கமும் சிவப்பேறும் எய்துதல் ஒருதலையாம்.

மற்றும், குருவினுல் ஆட்கொள்ளப்பட்டபின் ஆன்மாவினிடம் மலம் இருத்தலாகாது. அதாவது உயிர் மலவாதனையிற் பொருந்தாது என்பதாம். திருவருளி

லேயே திளைத்தல்வேண்டும். ஆனால், ஒரோருகால் அருள்வயப்பட்டும், ஒரோருகால் பிரபஞ்ச வயப் பட்டும் ஆன்மா ஒழுகுதல் எதனாலோ எனக்கேட்டல் கருதி, *பதி நின் பால் வந்தால் இதின் வரத்து இல் வந்து இரண்டும் பற்றுகிலேன் இரண்டும் ஆம் ஆறு என்?* என் றுள் ளா ரா வர். சிவபெருமானிடத்து நீங்காத அன்போடு அச்சிவத்தைப் பொருந்தி அங்ஙனம் பொருந்தி நிற்கிறோம் என்ற நிலையினையும் கடந்த அதீதத்தை அடைய விரும்புபவர் அச்சிவமாய் நிற்பர். ஆனால் பாசி படர்ந்துள்ள தடாகத்தில் கல் எறியும் போது பாசி நீங்குகிறது. எறியாத போது பாசி படர்ந்து மூடிக் கொள்ளுகிறது. இவ்வாறே சிவபெருமான் திருவடியை உணரும் போது மலம் மாயை கன்மங்களாகிய பாசம் நீங்குகின்றது. அத்திருவடியை உணராத போது மறுபடியும் அவை தலைப்பட்டு நிற்கின்றன. இங்ஙனம் தலைப்படுதல் பழைய பழக்கத்தால் நிகழ்வதாம். இப்பழக்கத்தால் சிவனிடத்தும் கருவிகளிடத்தும் நிலை பெறாது சுழல நேருகிறது. ஆதலால் அப் பழக்கத்தை அறவே தொலைத்தல் வேண்டும். இதற்கு ஒன்பதாம் சூத்திரம் உரைக்கும் உபாயங்களை மேற்கொள்ள வேண்டும். பிரபஞ்சத்-தைக் கானற் சலமாகவும், கான்ற சோறாகவும் கருதிச் சலிப்புண்டாம் போது மூத்தி பஞ்சாக்கரத்தினை விதிப்படி உச்சரிக்கவேண்டும் என்ப. பதிப்பொருளை அடைதலே பேறு. அதற்கு வேண்டுவது ஞானம்; அது ஞானசாரியனால் உண்டாவது. அவன் சொல்வழி நிற்றலே பாச நீக்கமும் சிவப் பேறும் பயக்கும் என்பது முறை. இவ்வெல்லாம், "பாசி படு குட்டத்திற்

கல்லினை விட்டெறிய" என்ற தொடக்கமுடைய சித்தியார்ச் செய்யுளுரையினால் அறியலாகும். இதனால், *இரண்டா மாறு என்?* என்ற வினாவுக்கு விடை தரப்படுகின்றமை காணலாம். " தந்தை தாயாவானும் சார்கதி இங்கு ஆவானும் குரு மூர்த்தமே யாதலால் *எந்தாய்* என்றார். தன்னின்படைவித்தல் தந்தையின் கடமையாம்.

---

## செய்யுள்—12

*நேரிசை ஆசிரியப்பா*

சிவனது கலப்பு முறைமை

[நிறைந்திருத்தலும் பொருந்தியிருத்தலும்]

எண்திசை விளங்க இருட்படாம் போக்கி
முண்டகம் மலர்த்தி மூதறி வருளும்
மேதினி உதய மெய்கண்ட தேவ !
கோதில் அமுத ! குணப்பெருங் குன்ற !
5 என்னின் ஆர்தலும் அகறலும் என்னைகொல் !

உன்னில் உன்னி உணவிடில் பெயர்குவம்
என்னும் அதுவே நின் இயல் பெனினே
வியங்கோ ளாளனும் ஆகி இயங்கலும்
உண்டெனப் படுவை ; எண்தோள் முக்கண்
10 யாங்கணும் பிரியா தோங்குநின் நிலையின்

யான்வந் தணைந்து மீள்குவ னயின்
ஆற்றுத் துயருற்றோர் அணிநிழல் நசைஇ
வீற்றுவீற் றெழுதர வேண்டலும் வெறுத்தலும்
இன்றிச் சாயைக்கு நன்றுமன் இயல்பே
15 அனையை ஆகுவை நினைவருங் காலை

இந்நிலே அதனின் ஏழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயேல்
அருள்மா றுகும் பெருமஅஃ தன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவம் உண்டெனும்
20 சொற்பெறும் ; அஃதித் தொல்லுல கில்லே

அவ்வவ் வமைவும் சோர்வு மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே!

## பொழிப்புரை

*எட்டுத் திசைகளிலும் இருக்கும் இருட்டை நீக்கித் தாமரை முகிழையும் மலர்த்துகின்ற சூரியனைப் போல, அடியேன், தேவரீரை அடைவதற்கு என்னென்ன அறிய வேண்டுமோ அவற்றையெல்லாம் கேட்டலும், விளக்கம் செய்தருளும் பொருட்டாக அடியேனை மறைத்துள்ள அஞ்ஞானத்தை நீக்கி அடியேனுடைய இருதயத் தாமரையையும் மலர்வித்து அநாதியான திருவருளேயும் அடியேனுக்குக் கடைக்கணித்தருளின தரையிலுதயஞ் செய்தருளிய ஞான சூரியனே! மெய்கண்டதேவ ரென்னும் திருப்பெயருடையவரே! குற்றமற்ற அமுதமாயிருக்கப்பட்டவரே! நற்குணமலேயே!*

*எங்கும் பூரணனுய் இருக்கும் தேவரீர் அடியேனுடன் ஒருகால் கூடியும் ஒருகால் நீங்கியும் நிற்பது எப்படி? என்பதை அருளிச் செய்யவேணும்.*

*தேவரீர் கூடியும் பிரிந்தும் நிற்பது, அடியேன் நினைக்கும்போது கூடியும் நினையாதபோது நீங்கியும் நிற்குமதாம் இதுவே முறைமை என்று சொல்வீராறுல்,— தேவரீர் அடியேனுக்கு ஏவல் தொழில் செய்கிறவராவீர் ; பூரணமில்லாதவராவீர் ; போக்குவரவு புரியும் ஏகதேசியாவீர். அல்லீரோ ?*

அப்படியல்ல ; நாம் நின்றபடி நிற்க நீதான் கூடியும். பிரிந்தும் வருவாய் என்பீராயின்—எட்டுத் திருத்தோளும் மூன்று திருநயனங்களும் கொண்டு எங்கும் நீக்கமற நிற்கும் உம்முடைய பூரண நிலையிலே அடியேன் வந்து கூடி மீளவும் பிரிகின்றேனுவேன் என்றால்,

பொடியிலே அடி சுட நடப்பவர்கள் வருந்தியபோது அழகிய குளிர்ந்த நிழலுக்கு ஆசைப்பட்டுச் சென்று தாம் தாம் விரும்பிய இடங்களிலே இருந்து போவர். இவர்கள் நம் அடியிலே வந்தார்கள் என்றும் மரம் பிரியங் காட்டுகிறதுமில்லை. நம்மைப் பிரிந்து போனார்களே என்று வருந்துகிறதுமில்லை. அத்தகைய விருக்ஷம் போன்றவர் தேவரீர் என்றல்லவா சொல்லப்படுவீர். சர்வஞ்ஞராகிய தேவரீர் அங்ஙனம் கூறப்படுவது ஏதாம்? அப்படியல்ல, நீயும் நாமும் போக்குவரவு இல்லாமல் நின்ற நிலை, நீ நினைக்கும்போது நாம் பிரகாசித்தும் நினையாதபோது மறைந்தும் நிற்போம். அவ் வளவே என்பீராயின்—

இந்த முறைமையாகத் தேவரீர் கொச்சையாகிய அடியேன் பொருட்டாகக் கிருபை பிறந்து எழுந்தருளி, மீளவும் மறைந்து நிற்பீராயின்,—தம்பிரானே! தேவரீர் அநுக்கிரகவான் என்று கூறப்படுதற்கு மாறுபாடு உண்டாம். அல்லாமலும், தேவரீர் திருவடியை அடைந்தவர்களுக்கும் மீளவும் பிறப்பு உண்டு என்று சொல்லவேண்டியிருக்குமே! தேவரீர் திருவடி யடைந்தோரென ஒரு சிலர் இங்குப் பிறக்கப்போவதே இலர். ஆகையால், அடியேன் விண்ணப்பஞ் செய்து கொண்ட அந்தந்த நிறைவும்—அடியேனுக்கு மயக்கமும் ஐயமற அருளிச் செய்யின், அடியேன் மறுபடியும் எதிர் உத்தரம் விண்ணப்பம் செய்யாதபடி அருளிச் செய்ய வேண்டும். வாக்கினாற் சொல்லப்படாதவரே!

*சிவம் நிறைந்திருப்பதும் ஆன்மா பொருந்தியிருப்பதும் எப்படி என்பதே இப் பாடலில் உள்ள செய்தியாகும்.*

**விளக்கம்**

சிவபிரான் வேறு இடத்தே இருந்து கொண்டு உயிர்கள் நினைக்கையில் அவற்றிடம் வருகிறானா? நினையாதபோது விலகி விடுகின்றானா? அப்படிச் செய்வானாயின் இறைவன் ஆன்மாக்களின் பணியாளனாகக் கருதப்படுவானன்றோ! ஆன்மாக்கள் ஏவும் தலைவராக எண்ணப்பட வேண்டிவரும். மேலும், வரவும் போக்கும் இறைவன் உடையவனாயின் நிச்சலன் என்னும் பெயர் அவனுக்குப் பொருந்தாது அல்லவா?

அவ்வாறன்றி, ஆன்மாக்களே இறைவனிடம் செல்லுகின்றன; மீளுகின்றன என்றால் மரத்தின் நிழல் போலத் தன் பால் வரும் ஆன்மாக்கள் பற்றிய மகிழ்வும், மீளுமவை நோக்கி வருந்துதலும் இல்லாதவன் இறைவன் என்னப்படுவான். அவ்வாறாயின் அவன் சடப்பொருள் ஆவான். மற்றும், செல்லுதலும் மீளுதலுமாகிய சுதந்தரம் ஆன்மாக்கட்கே உள்ளதெனப்படும்.

அங்ஙனமன்றி, ஆன்மாக்களிடத்தே இறைவன் தங்கியே உள்ளான். அவைகள் தியானிக்கும் போது வெளிப்படுகிறான். இல்லாவிடில் மறைகிறான். இது முதல்வனுக்கியல்பாயின் அவனை ஒரு முறை தரிசித்தவர்க்குப் பிறப்பு இறப்புக்கள் கூடா. வெளிப்பட்டவன் திரும்பவும் மறையாமலிருந்தால் தான் முத்தி

கூடும். மறைவானுயின் பிறப்பு இறப்பு ஆன்மாக்கட்கு வந்தே தீரும். அப்படியானுல் சிவத்தைக் கண்டவர்க்குப் பிறப்பிறப்புத் துன்பம் இல்லை என்னும் மறைமொழி பொய்யாகுமே என்ற இவைகள் விஞக்களாகும்.

கடவுள் நம்முடன் ஒன்ருயும் வேருயும் உடனுயும் உள்ளான். இதுவே அவனுடைய பொது இயல்பு. என்ருலும் தன்னை நினையாதார்க்குச் சேயனுகவும், நினைப்பவர்க்கு அண்மையனுகவும் காணப்படுகிருன். எந்த நிலையிலும் ஆன்மா இறை வியாபகத்துள் இருந்தே வருகிறது. இங்ஙனம் இருந்தும் மலப் பிணிப்புடைமையால் ஆன்மா இவ்வுண்மையை உணர முடிவதில்லை. மலமற்ற நிலையில் ஈசன் இருப்பை அறிகின்றது. இதுவே சுருங்கிய விடை விளக்கம். இனிச் செய்யுளின்படி விரிவு காணப்படும்.

சூரியன், உலகின் எட்டுத் திக்குகளிலும் பரவி மூடியிருக்கும் இருட்டினைத் தான் உதிக்குங் காலையில் போக்குகின்ருன். அப்போது குளப் பரப்பிலுள்ள தாமரைகள் மலர்கின்றன; பக்குவம் அடைகின்றன. மலர்ந்த மலர்கள் தேன் பொழிகின்றன. இவ்வளவும் ஆதித்தன் தோன்றுதலால் நிகழ்வன. இவ்வாறே, ஆன்மாக்களின் உள்ளத் திருளாகிய அஞ்ஞானத்தைப் போக்குகின்ருன் இறைவன். அவ்வுயிர்களின் இருதய கமலங்களை மலர்த்துகின்ருன். எல்லா ஐயப்பாடுகளும் அறுமாறு குரு வடிவாகி வெளிப்பட்டுத் திருவருளைப் பொழிகின்ருன். சூரியன் பாசப் பொருட் காட்சியே நல்குகின்றது. ஆனுல் ஞானகுரவர் ஞானக் காட்சி நல்குகின்ருர். சூரியன் ஆகாயத்தே

தோன்றுகின்றான். ஆனால் ஆசாரியர் மேதினியிலே நம் பக்கலிலே தோன்றுகின்றார். இங்ஙனம் நம்ம னோர்க்கும், தமக்கும் அருள்புரியுமாறு சிவம், ஸ்ரீ மெய்கண்டாராக எழுந்தருளிய தகைமையை *முதல் மூன்று வரிகளால்* ஆசிரியர் பாராட்டுகின்றார். போக்குதல், மலர்த்தல், அருளுதல் யாவும் கதிரோன் தொழிலாதல் போன்று ஆசாரியர் தொழிலாக நிகழ் வுறுதல் காணலாம்.

## கோதில் அமுத !

உண்ணுதற்குப் போக்கிய மாயிருப்பது அமுதம். அரிதின் அடைவது. உண்டாரை வாழ்விப்பது. என்றாலும் தேவாமுதம் போலக் குறைபாடுடைய தன்று ஆசாரியனும் அவனுபதேசமும். பக்குவ முதிர்வில் தானே வெளிப்பட்டுப் பிறப்பில்லாப் பேரின்ப வாழ்வினை எஞ்ஞான்றும் அளித்துதவுவது ஆசாரியப் பொருள். அமுதமுண்ட தேவரும் துயருற்றனர். ஆனால் ஞானாசாரியரால் ஆட் கொள்ளப்பட்டார் எஞ்ஞான்றும் துயர்தலைப்படார். இதனால் ***கோது இல்*** எனப்பட்டது.

## குணப் பெருங் குன்ற !

"அளக்கலாகா அளவு" முதலன ஆசானுக் குரைக்கப்படும் இலக்கணம். சலியாமை. பெருமை முதலன உடைமையால் குணம் குன்றாக உருவகிக்கப் பட்டதென்பர். அடைந்தாரைத் தாங்கி ஏறுவித்து நெடுங்காட்சி நல்கல் மலைக்கியல்பு. அங்ஙனமே ஆசாரியரும் சீடரைத்தாங்கி, நன்னிலைப் படுத்தி, தெய்வக்காட்சி நல்குவர். மலையடுத்து நின்றார்

எந்த வெள்ளத்துக்கும் அஞ்சவேண்டுவதில்லை. அவ்வாறே, ஆசாரியர் அநுக்கிரகம் பெற்றார் அநாதியாகவரும் பிறப்பிறப்புப் பிரவாகத்துக்குச் சிறிதும் அஞ்சவேண்டுவதிலர். சாதாரணமலையினும், உயிர்க்கு ஆக்கமளிக்கும் இயல்புடைமைபற்றி ஆசாரியரை, ***பெரும்குன்ற!*** என்றார். "குணமென்னும் குன்றேறி நின்றார்" என்ற குறட்பாடற் கருத்தும் ஈண்டுக் கருதத்தக்காகும்

முதல்வன், ஒரோருகால் ஆன்மாக்களுடன் கூடியிருத்தல் போலவும், ஒரோருபோது விலகியிருப்பது போலவும் உணரப்படுகிறான். இவ்வாறான இரண்டு நிலையும் இறைவன் உடையவனா? அப்படியானால் பூரணத்துவம் எப்படி உடையனாவான்? என்கிற இந்தச் செய்தியின் ஐயப்பாட்டினை விண்ணப்பித்தற் பொருட்டாக ***என்னின் ஆர்தலும் அகல்தலும் என்னை கொல்*** என்று வினவலுற்றார் ஆசிரியர்.

முதல்வன், உயிர்களைஎல்லாம் தன்னுட் கொண்டிருத்தலால் இரு திறமான இலக்கணங்களுடன் இலகுகின்றான். ஒன்று பொது இயல்பு, மற்றது சிறப்பு இயல்பு. உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருந்துகாட்டி அநுபவமூட்டித் தன்னை அடைவிக்கின்றமை பொது இலக்கணமாம். இம் முறையில் சத்தியாகவும், பதியாகவும், ஆசாரியனாகவும் இருந்தருளுகின்றானவன். இங்ஙனம் உபகரிக்காவிடில் உயிர்கட்கு உய்தியே இராது. ஒரு வயலில் வளர்ந்து நிற்கும் கரும்பினுள் இனிய சுவைச்சாறிருப்பினும், மற்றும் ஆங்கு வளரும் கரும்புகட்கெல்லாம் இனிய சாறூட்டுதற்கான இனிமையை அந்நிலப்பரப்பு

எங்கும் குறைவறப்பெற்றிருப்பதுபோல், முதல்வன் மேற்கூறியவாறு சிறப்புவகையில் நடிப்பினும் தன் இயல்பிலே சித்துச் சத்தாக யாண்டும் விளங்குகின்றுறுவன். இது அவனுடைய சிறப்பிலக்கணமாம். இச்சிறப்பியல்பின்றேல் மேற்கூறிய பொது இயல்பு நிகழாது. ஆதலால், இவ்விரண்டியல்புகளும் இறைவற்கு வேண்டுவனவாயின. மேற்கூறப்பட்ட பொதுத்தன்மையில் உயிர்கட்கு நிலைத்தல் உதவியைச் செய்தற்பொருட்டு உடம்புடன் உயிர்கலந்திருத்தல் போல உயிருடன் இறைவன் ***கலந்தே*** உள்ளான். மேலும், உயிர்கட்கு அறிதல் எனப்படும் உதவியை யாற்றுதற் பொருட்டுக் கண்ணொளியும் சூரியனும் போலப் பொருள் தன்மையால் ***வேறுகவும்*** உள்ளான். அகர உயிரும் ஏனைய அக்கரங்களும்போல என்ற உவமமும் இதற்குத் தரப்படும் மற்றும், உயிர்கட்குச் செல்லுதலுதவிபுரிதற்பொருட்டு ஆன்மாவும் ஆன்ம ஞானமும் போல ***உடனுய்*** நின்றும் உபகரிக்கின்றுன். இறைவன் எங்கும் வியாபகமாயிருத்தலால் அங்கங்கே உயிர்களோடு உடனுய் நிற்பவனுகின்றுன். இங்ஙனம் முதல்வன் திருவருள், உயிர்களோடு யாண்டும் பிரிப்பின்றி நிற்றலால் அத்துவிதமா யுள்ளான் என்பர்.

இறைவன் உயிர்களோடு அநாதியே பிரிப்பின்றி நிற்பினும், உயிர்கள்ஆணவ மலத்தோடு அநாதியே கூடிநிற்றலால் முதல்வன் விளங்கித் தோன்றுவதிலன் ஆணவமலம் நீங்கிய விடத்து விளங்கித்தோன்றுவன். இதுவே சிவத்தின் நிறைவில் ஆன்மா பொருந்தி-யிருக்கும் விதம் என்ப.

இவ்வாறன்றி, ***உன்னிற்று உன்னி உன்னுவிடில் பெயர்குவம் என்னும் அதுவே நின் இயல்பு எனின்*** ஏ— ஆன்மா நினைக்கும்போது கூடிநின்றும் நினையாத போது நீங்கியும் இருப்பதே இறைவற்கு இயல்பாம் என்று கூறப்படுமாயின் — உலகெலாம் தானேயாய் நிற்கும் முதல்வன் நினைக்கும் உள்ளமுமாய் நிற்றலால் கூடி நிற்றலும் பிரிந்து நிற்றலும் கொள்ள இயலாதென்பதை நாம் கருத்தாகக் கொள்ளவேண்டும் என்க. மற்றும், மேற்கூறியவாறு கூடியும் பிரிந்தும் இறைவன் ஒழுகுவனாயின், ஆன்மாவிற்கு ஏவல்புரிபவனாக இறைவன் கருதப்படும். மேலும், போதலும் வருதலும் உடைமையால் இறைவன் ஏகதேசி எனவும்படும். ஆதலால் பிரிவின்மையே யாண்டும் உள்ள நிலை என்பதாம். இதனை, ***வியங்கோளாளனும் ஆகி இயங்கலும் உண்டு எனப்படுவை*** என்ற வரி காட்டும். இங்கு, "பன்னில் ஊறும் பழத்திலும் இன் சுவை" என்ற தேவாரப்பாடல் மேற்கோளாகக் கற்கத்தகுவதாம்.

இங்ஙனமன்றி, ***எண்தோள்முக்கண் யாங்கணும் பிரியாது ஓங்கும் நின் நிலையின் யான் வந்து அணைந்து மீள்குவன் ஆயின்*** — இறைவன் பூரண நிலையினனே ; ஆன்மாவே வந்து கூடுதலும் பிரிதலும் செய்கின்றது என்றும் ஐயம் எழுவதை இவ்வரிகாட்டும் இதனால், ஆன்மா மலபோதம் நீங்கின இடத்துச் சிவனைப் பொருந்துவன் எனவும், அப்போதம் மேலிட்டபோது சிவனை இழந்து நிற்பன் எனவும் கருதவேண்டும். கையால் விலக்கியபோது பாசிநீங்கித் தண்ணீர் காணப்படும். விட்டபோது பாசி மூடத்தண்ணீர் தெரிவதில்லை. இதனால் தண்ணீர் எப்

போதும் ஒரேநிலையில் உள்ளதுதான் என்பது தெரிய-லாம். மல அறிவைக்கைவிட்டுச் சிவனடி எய்தி அதுவேயாய் உறைத்து நின்ருல் சகலநிலையில் ஐம் பொறிகள் விட்டு நீங்காதவாறு போலச் சிவமும் நீங்காநிற்றல் காணலாம். ஊஞ்சற்குத் தரையே நிலைத்த தாரகமாதல் தெரிவதுபோல் வது இங்நிலை. இதனுல், திருவடி ஞானம் பெற்ற உயிர் மீளவும் பாச வழிச் செல்லுதல் கூடாதெனவும், ஒரோவழிமீள நேருமாயின் மீளாது சாதித்துக் கொள்ளவேண்டு மெனவும் அறிதல் தக்கதாம். இதனுலும் பிரிவின்மை'' தெளிவுறுத்தப்பட்டது. ''ஐம் பொறியினல்லையெனும்'' என்னும் சிவஞானபோத வெண்பாவுரை இங்குணரத் தக்கதாம்'' போதம் பதைப்பறவே பூரணமாம்; பூரணமும் போதம் பதைத்தெழவே பொய்யாகும்'' என்பது ஒழிவிலொடுக்கநூல் வாக்கு. இவ்வாறு கொள்ளாமல் கூடுவதும் பிரிவதும் ஆன்மாவின் செயலெனக்கொள்வோமாயின், வழிநடப்பவர்கள் குளிர்ந்த நிழலுக்கு ஆசைப்பட்டு மரத்து நிழலிலே வேண்டுமாறு தங்கியும் நீங்கியும் செல்வதுபோலாகும். இதில் தங்குபவர் இச்சையும் வெறுப்புமேயல்லாமல் மரத்துக்கு அவை ஏதுமின்மை புலப்படும். இதனுல் இறைவன் மரம் போன்ற நிலையினன் எனப்படும். இது முறைமையன்ரும். சர்வஞ்ஞுன இறைவன் அவ் வாறிரான். *'' அனையை ஆகுவை நினைவரும் காலை ''* என்பதன் கருத்து இதுவாம்.

அவ்வாறன்றி, பரிபூரண இறை நிலையிலே போக்குவர வில்லாமல் ஆன்மா பத்தி மேலிட்டு நினைக்குங்கால் பிரகாசிப்பதும், அங்ஙனம் நினையாத போது மறைதலும் இறை இயல் என்றும் ஐயம்

எழக்கூடும். இதனை, ***இந் நிலையதனின் ஏழையேற்கு இரங்கி நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீ யேல்***- என்ற இடம் தெரிவிப்பதாம். இது அடிமைக்கு இரங்கி அநுக்கிரகம் செய்தலையே குறிப்பதாம். " இருஞ் சுரபிக்கு எங்கும் உருக்காண ஒண்ணாத பால், முலைப்பால் விம்மி ஒழுகுதல் போல் வெளிப்பட்டு அருளுவன் அன்பர்க்கு " என்ற சித்தியார் அடிகளை நினைவூட்டும். அப்போதும், பசுவின் உடம்பில் எங்கும் வியாபகமாய்ப் பால் நிலைத்தற்கு இழுக்கில்லையாம் நிலை போல்வது இறை உறைவும் மறைவும் என்பர். இதுவரை கூறியுள்ள மூன்று முறைகளால், இறைவன் கலப்பால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும், உடனிற்றலால் உடனாயும் இருந்தும் அத்துவித நிலையே உடையானென்பது, உணர்த்தப் பட்டது.

மேலும், இறைவன் எழுந்தருளி மீளவும் மறைவது அவனது அனுக்கிரக இயல்புக்கு மாறுபடும். இதனை, ***அருள் மாறு ஆகும் பெரும !*** என்பதனால் அறியலாம். அன்றியும், அனுக்கிரகமடைந்தவர்க்கும் பிறப்புண்டெனப்பட்டு இழுக்காய் முடியும். அனுக்கிரகமுற்றார் மீளத் தோன்றுதல் ஒருபோதுமில்லை. இச் செய்திகள், "***நின் பெற்றவர்க்கும் உற்பவம் உண்டு எனும் சொல் பெறும் ; அஃது இத் தொல் உலகு இல்லை***" என்றவரிகளில் உள.

முடிவாக, ஆசிரியர் ***அவ்வவ்வமைவும் சோர்வும் மயர்வற சொல்லில் சொல்லெதிர் சொல்லாச்- சொல்லே சொல்லுக*** என்று விண்ணப்பிக்கலுற்றாரவர். இவ்வரிகள், ஞானாசாரியரின் சொல்வன்மை

யியல்பினைப் புலப்படுத்துவனவாம். கேட்போர் வினை முடிதற்குத் தேசிகரின் சொல்வன்மையே துணையாம். " சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச் சொல்லை—வெல்லும் சொல் இன்மை அறிந்து " என்ற குறட் சொற்கள் இவ்வடிகளிலே பொருந்தி நிற்றல் காணலாகும். இதனால் மாற்ருரது மறுதலைச் சொல் நிகழாவண்ணம் குணத்தால் வெல்லும் பயனுடைச் சொற்கள் ஆசாரிய ருபதேசம் எனத் தெளிக.

இறைவன், ***வாக்கு*** மன ***அதீத*** கோசரன். ஆதலால், ***சொல் இறந்தோயே !*** என இங்குச் சிவமேயாகிய ஸ்ரீ மெய்கண்டதேவரை ஆசிரியர் விளிக்கின்ருர். தாம், சொல்லற நிற்றற்பேறெய்தற் பொருட்டு இங்ஙனம் பொருளுரை கூறினுர் என்னலாம். வேதங்கள், இறைவன் திருவடியை இன்னதெனச் சொல்லலுற்று இயலாமே வறிதே மீண்டன என்பதும் இக் கருத்ததே. இறைவன் பகுதியால் வெளிப்படும் சொற்கள் இறைவனையே கட்டுப்படுத்துதல் ஒருபோதும் இயலாதென்பது வெளிப்படை. " மறையினல் அயனல் மாலால் மனத்தினல் ***வாக்கால்*** மற்றும் குறைவிலா அளவினுலும் ***கூருெணு தாகி நின்ற இறைவனுர்*** கமலபாதம் " என்பது சித்தியார். இப் பாடலால், சொரூப சிவம் தடத்தமாய்ப் பிரிவற இருந்து ஆன்மாக்களை உய்தியுறுவிக்கின்றதெனத் தேறல் வேண்டுவதாம்.

---

## செய்யுள் — 13

நேரிசை வெண்பா

*காய வாழ்வு*

**இறந்தோய் கரணங்கள் எல்லாம் எனக்குச்**
**சிறந்தோய் எனினுமெய்த் தேவே!—பிறந்துடனும்**
**காயம் கொளவும் கொளாமலும் கண்டதுநீ**
**ஆயன்கொல் பாதவத் தற்று.**

## பொழிப்புரை

*கருவி கரணங்களுக்கெல்லாம் எட்டாதவரே! அடியேனுக்கு உயிரொப்பச் சிறந்தவரே! ஸ்ரீ மெய்கண்ட தேவரே! இத்தகைய தேவரீர், அடியேன் உடனுய்ப் பிறந்துள்ள இந்தச் சரீரத்தை மெய் என்று பொருந்தி யிருக்கவும், அது பொய்யென்று பொருந்தாமலிருக்கவும் பண்ணியது தேவரீரே. இடையன் வெட்டின மரம் பாதி பச்சையும் பாதி உலர்ந்ததுமாயிருப்பதுபோல, இந்த உடம்பு, பொய் என்று அறிவித்து நீங்கியும் நீங்காமலும் இருந்த தன்மையுடையதாயிற்று.*

*இதனுல், சரீரத்தில் பொருந்தியிருக்கும்போதே அதனின் நீங்கி இருப்பது எவ்வாறுகுமென்றுல், சிவ பெருமான் குருமூர்த்தமாகிக் காயம் மாயம் என அறிவித்துத் தீக்ஷை முறையினுலே மலங்களைப் போக்கி அருளிலே பொருந்தச் செய்வதனுலாகும் என்று தெரிதல் வேண்டும். இதுவே இப் பாடற் கருத்தாகும்.*

### விளக்கம்

சிவத்தினது அநுக்கிரகத்தை அடையப் பெறுவ தற்கு முன்பு உடம்புதான் மெய் என்றிருந்தது

ஆன்மா. அதனைப் பெற்ற பிறகு ஆன்மா உடம்பைத் தானல்ல வெனக்கண்டு நீங்குகிறது; ஆனால் அந்த உடம்பினுள்ளே தானிருக்கிறது. இஃதெப்படி? என்பது இச் செய்யுள் எழுப்பும் வினவாகும்.

உடம்பும் இந்திரியங்களும் ஆன்மாவுக்குக் கன்மத்தைப் புரிதற்குத் துணையாம் பொருட்டு அளிக்கப் பட்டன. இருளில் செல்வார்க்குத் துணையாக ஒரு விளக்குக் கொடுப்பது போல்வது இச் செயல். ஆனால் சூரியன் உதயம் செய்த பிறகு கைவிளக்கு ஒளி மங்கிப் பயனின்றி மறைவது போல, ஞானாசாரியன் வெளிப்பட்டு உடம்பு முதலன கானல் நீர் போல்வன எனத் தேற்றியபிறகு உடற்பற்று நீங்கி விடுகின்றது. இதனாலேதான் உடம்பினுள் இருந்து கொண்டே தாமரைஇலைத் தண்ணீர் போலப் பற்றற்று ஒழுக முடிகின்றது. இதன் காரணம் மலசத்தி மாயாதே மாய்தலின் வினைவாம். அதாவது, அருட் சத்தியாதலின் பயனும் என்பது சுருங்கிய விடை விளக்கமாகும்.

ஆன்மாவுக்கு வேண்டுவது பிறப்பறுகை—பேரின்பம். இதற்கு வேண்டாதது பிறப்பு—பற்று. பிறப்பறுகைக்கு ஆன்ம அறிவு வியாபகப்பட வேண்டும். பிறப்புறுகை மலசத்தி விரிவால் மாயை கன்மங்களின் வழி நிகழ்வது. மலசத்தி மடங்கினால் அறிவு விரியும். அறிவை மறைப்பது ஆணவம் அறிவை வளர்ப்பது அருள். ஆதலால், நாம் அருளை எய்த வேண்டியுள்ளது. இந்த அருள்வாய்ப்பு, படிப்படியாக உடம்பும், உள்ளமும், அறிவும் பண்படுவதால் ஏற்படும். உடம்பு சரியையால் தூய்மையுறும். உடம்பும்

உள்ளமும் கிரியையால் பதப்படும் உள்ளம் யோகத்தால் மாசறும். அறிவு ஞானத்தால் —சிவஞானத்தால் விரிவுறும். இவ்விரிவுக்குத் தத்துவ ஞானம் எனப்படும் பாச ஞானத்தின் இயல்பறியப் படவேண்டும். அதன் பின்னர் ஆன்ம ஞானம் எனப் படும் பசு ஞானத்தியல்பும் அறியப்பட வேண்டும். இதன் பின்னர் நிகழ்வதே சிவஞானம் எனப்படும். ஆன்ம அறிவு, உடம்பு முதலான பாசப் பொருள் வழிப்படரின் குறுகிய நிலையதான சுட்டறிவாகும். அங்ஙனமின்றி ஆன்மா தன்னையே தற்போதத்தால் கண்டு மதித்தலுறின் சிற்றறிவுடையதாகும். இவ்விரண்டையும் விட்டுத் திருவருள் வழிச் சென்று தன்னை மறந்து சிவத்தே அழுந்தலுறின் முற்றறி வுடையதாகும். தச்சன், எவ்வளவு கெட்டிக் காரனு யினும் மரமும் கருவிகளும் அவனுக்குக் கிடைத்தா லல்லது அவனல் தொழிலாற்ற இயலாது. அவ்வாறே, ஆன்மா இவ்வளவையும் அறிதற்கு அதன் கேவலநிலை பயன் படாது. இதனுலேதான் இறைவன் ஆன்மாவுக்கு மாயையால் இயன்ற கருவி கரணங்களை அதன் விருப்பு வெறுப்புக்கு ஏற்றவண்ணம் உதவுகின்றான். இக்கருவி கரணங்கள் யாவும் சடம். ஆதலால் இவை, தம்மை உதவுவோனை அறியமாட்டா. உளி முதலியன தச்சன் வழித் தொழிற்படுமேயன்றித் தச்சனை — அவன் கருத்தை— அறியமாட்டா. இவ்வியல்புடையனவே கரணங்கள். ஆகையால், ***இறந்தோய் கரணங்கள் எல்லாம்*** என்றார். இறைவன் ஆன்மாவின் ஈடேற்றமே கருதி உதவுகின்றான். அவன் கருத்து வழிச்செல்வது சிறப்பு. அவ்வழிச்செல்லாமையால் வருவதே பிறப்பு. அவன்,

ஞானநெறிப்படுத்தி நம்மைச் சிறப்பென்னும் செம் பொருள் காண்பதான அறிவு அடைவிப்பதால் அவனினும் நமக்குச் சிறந்தோர் யாருமிலர். ஏனையோர் எவரும் அங்ஙனம் செய்தல் இயலாது. இதனாலேயே ***எனக்குச் சிறந்தோய்*** என்கிறார் ஆசிரியர். உண்மைத் தெய்வம் ஞானாசாரியரே யாதலால் ***மெய்த்தேவ*** என விளிக்கலுற்றார். ஞானாசாரியன் ஆன்மாவுக்குக் காட்சியளித்துத் தத்துவங்களையெல்லாம் அறிவித்து அக்கருவிகள் ஆன்மாவல்ல, என்று காட்டுகிறான். ரூப தரிசனசுத்தி முறைகளால் இங்ஙனம் செய்தருளு வன். இதனால் நாம் அபிமானித்திருந்த உடம்பு நம்மின் வேறெனவும், அது நிலையற்றதெனவும் தெரிய லுறும் அப்போது ஆன்மாவின் அறிவு, உடம்பின் பற்றற்று விளங்கும். ஆனால், பிராரத்தமளவும் ஆன்மா உடம்பினுள்தான் தங்கியிருக்கும். இது புளியம்பழத்தின் ஓடும் பழமும் ஒன்றாயும் ஒட்டா மலும் இருக்கும் நிலைபோல்வதாம். இந்த நிலையை நமக்குண்டாக்கித் தருபவன் ஞானாசாரியனே — சிவமே ஆவன். இது பற்றியும் பற்றற்றும் இருக்கும் அரியதொரு நிலையாம். இதனையே ***பிறந்து உடனும் காயம் கொளவும் கொளாமலும் கண்டது நீ*** என் றுள்ளார் ஆசிரியர். இது சிவசம்பந்தத்தால் விளைவது. தத்துவ உபதேசத்தாலும், தீக்ஷைக்கிரமங்களால் மலசத்திமாயப் பெறுதலாலும், திருவருளில் பொருந் தப் பெறுதலாலும் விளைவது. இத்தெளிவு நிலையில் சிவசம்பந்தமின்றிக்காய சம்பந்தமும் இல்லையாமென்ற உண்மை உணரப்படும். "தெரிவரிய மெய்ஞ்ஞானம்" என்னும் சித்தியார்ப்பாடல் இந்நிலை விளக்குவதாகும். மற்றும், அந்நூலிலுள்ள "மண்டனில் வாழ்வும்"

என்றபாடல், காயம் பொய்யாகிக் காட்சிப்படுவதைத் தெரிவிக்கும். "வாழ்வாவது மாயம்" என்பது போன்ற தேவாரப்பாக்களும் இஃது உணர்த்தும். இந்நிலையெய்தினேரைத் தேவரும் வழிபடுவர் என்ப. இவ்வாறு உடம்பைப்பற்றி நின்றுகொண்டே உடம்பினது பற்றற்றிருத்தல் ஆயன் வெட்டிவிட்டமரம் போலக் காணப்படுவதாகும். இம்மரம் பாதிபச்சையும் பாதிஉலர்ந்தும் காணப்படும். இது *நீங்கியும் நீங்காமலும் இருக்கும் நிலை* எனப்படும். ஆனதுபற்றியே *ஆயன்கொல் பாதபத் தற்று* என்று உமித்துக்கூறியுள்ளார் ஆசிரியர். இதனுல், தத்துவஞானம் அடைந்த ஆன்மா பிராரத்துவப்புசிப்பு முடிவடையும் வரை எங்ஙனம் காயத்திலே கூடி நின்றும் நிற்காமலும் வாழவேண்டும் என்பதை நாமறியலாகும்.

---

## செய்யுள் — 14

### நேரிசை யாசிரியப்பா

### *வினை விளைவு*

அற்றதென் பாசம் உற்றதுன் கழலே
அருட்டுறை உறையும் பொருட்சுவை நாத!
வேறென் றிருந்த என்னை யாண்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ!
5 இருவினை என்ப தென்னைகொல்? அருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்
இதமே அகிதம் எனுமிவை ஆயில்
கணத்திடை அழியும் தினைத்துணை யாகா
காரணம் சடமதன் காரியம் அஃதால்
10 ஆரணங் காம்வழி அடியேற் கென்னைகொல்?

செயலென தாயினும் செயலே வாரா
தியமன் செய்தி யதற்கெனின் அமைவும்
பின்னை யின்றுகும் அன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை அருத்தின்
15 மையல்தீர் இயமற்கு வழக்கில்லை மன்ன !

ஒருவரே அமையும் ஒருவா ஒருவற்கு
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணை சொல்லன வின்றே
அமைந்தது துய்ப்பின் எமக்கணை வின்றும்
20 உள்ளது போகா தில்லது வாரா(து)

உள்ளதே உள்ள தெனுமுரை யதனல்
கொள்ளும் வகையால் கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலாம் உன்னிட அமையும்
ஈய வேண்டும் எனும்விதி இன்றும்
25 ஆயினும் என்னை அருந்துயர்ப் படுத்த

நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமும் கரும பந்தமும்
தெருள அருளு சிவபெரு மானே !

## பொழிப்புரை

*தேவரீருடைய அருளினலே அடியேனுடைய பாசம் நீங்கியது உண்மை. அடியேனும் உமது திருவடியிலே கூடியதும் உண்மையே. திருவருட்டுறை எனப்படும் திருவெண்ணெய்நல்லூரிலே அடியேனுக்கு இனிமைப் பயனக எழுந்தருளியுள்ள தம்பிரானே! தேவரீர் வேறனவர் ; யான் வேறனவன் என்று எண்ணியிருந்த அடியேனை அடிமைத் தன்மை கெடாத விதமாகவே அந்நியமாகாத முறைமையும் கடாக்ஷித்தருளின மெய்கண்டநாதரே !*

அடியேனுக்குப் புண்ணிய பாவங்கள் உண்டென்பது எந்தக் காரணம் கொண்டு? தேவரீரால் அருளிச் செய்யப்பட்ட மனம் வாக்குக் காயங்களின் தொழிலா லுண்டான விருப்பு வெறுப்பினுல்தான் இருவினைகள் உண்டாயின என்று தேவரீர் அருளிச் செய்வதாலுல்— அங்ஙனம் உண்டாக்கப்பட்ட நினைவும், சொல்லும், தொழிலும் தோன்றின உடனே அழியுமியல்பின; அவற்றிற்கு ஒரு நினையளவும் கண்டிப்பு இல்லை. மற்றும், அந்த மனம் வாக்குக் காயங்களாகிய காரணம் சடமா-யிருப்பது போலவே, அவற்றின் காரியங்களும் சடமே யாம் அன்றே! ஆதலால், சடமாயிருக்கப்பட்ட கன்ம காரியங்கள் அடியேன் மேன்மேலெடுக்கும் பிறப்புகளிலே வந்து பொருந்தி வருந்துவதற்கான வகை ஏது?— கன்மங்கள் சடமாயிருப்பினும் நீ அறிவுள்ளவனுதலால் உன்னோடு கூடும்போது செயலுண்டாகும் என்னலாம். அப்படி அடியேனுக்குச் செயலுண்டாமெனினும் அடியேன் இச்சைப்படி செய்கைகள் நிறைவேறக் கண்டதில்லையே; அன்றியும், அடியேனுக்கு வேண்டின காரியங்களைச் செய்துகொள்ளும் சுதந்தரமிருப்பின் இயம தண்டனை உண்டாக்கத் தக்க பொல்லா வினை களைச் செய்துகொள்ளமாட்டேனல்லவா? அதுவு மல்லாமல், அடியேனுக்கு வேண்டுங் காரியங்களை அடியேனே செய்துகொள்ளக் கூடுமாயின் தேவரீர் செய்விக்கிறதென்பது இல்லையாம் அன்றே! அவ்வாறன்றி, தேவரீர் செய்விப்பது, இப்போது அடியேன் செய்யும் கன்மத்துக்குத் தக்க வண்ணம் மேலைக்குப் புசிப்பாவது என்றுல்,— நம்பிரானே! மயங்குதலில்லாத இயமன் அடியேனைத் தண்டிப்பதற்கு நியாயமில்லையாம். ஒருகால், நீ செய்ததற்குத் தக்கதை நாமும் செய்விப்போம் இயமனும் தண்டப்படுத்துவன் என்பீராயின், —

ஒப்பில்லாதவரே! அடியேனைத் தண்டித்தற்கு ஒருவரே போதும் அன்றோ! தேவரீரும் இயமனும் ஆகிய இருவரும் கூடித் தண்டிக்க வேண்டுவதில்லையே. இதனால், இன்னொருவரைக் கூடித் தேவரீர் தொழிற்படுத்துவீராயின் சர்வகர்த்தா என்பது தேவரீர்க்கு இல்லையாய் முடியும். அது ஏன் என்று கேட்டருளுவீராயின்,—தேவரீருடைய கருணைத் தன்மைப் பகுதியை அடியேன் அளவுபடுத்தியுரைக்கலாகாதே! அவ்வாறாக,

அடியேற்கு உள்ளதாகிய கன்மம் போகாது. இல்லாதகன்மம் வாராது. யாதொன்று ஊழிலே அமைக்கப்பட்டதோ அதுவே இப்போதும் உண்டாம் என்று தேவரீர் அருளிச்செய்திருக்கின்றீர். ஆகவே, அடியேனுக்கு உண்டான பிராரத்தத்தைத்தானே நான் புசிக்க வேண்டும். மேலைக்கு உற்பத்தியாக ஆகாமியம் உண்டாவதற்கு வழி இல்லையே!— அப்படியன்று, பிராரத்தம்புசிக்கும் போதே ஆகாமியம் உண்டாகும் என்பீராயின் — தேவரீருடைய கொடையியல்பினையெல்லாம் எண்ணியிருந்தால் போதுமே; பிராரத்தப் புசிப்பிலேயே, ஆகாமியம் ஏறுமாயின், கொடுத்துப் புண்ணியம் பெறுக, என்று நூல்களில் விதிக்கவேண்டுவதில்லையல்லவா? என்னுடைய வினாவுக்குத் தேவரீர் அருளிச்செய்யாமல் அறிந்துகொள்வதற்கு வேறுவழியில்லை. ஆகையால், அடியேனுக்கு அரியதுக்கங்களை உண்டாக்கும் கர்மம் எனப்படும் புண்ணியபாவங்கள் உண்டாம் முறைமையும், அவற்றைப்புசிக்கும்போது மீண்டும் பிறப்பதற்கேதுவான ஆகாமிய மெனப்படும் கர்மபந்தம் உண்டாம் விதமும் நாய்போன்ற அடியேனுக்குத் தேவரீர் திருவுள்ளங்கொண்டு விளங்குமாறு அருளிச்செய்யவேணும். சிவமேயாகிய பெருமானே!

இதன் கருத்தாவது, **கன்மம், ஆன்மா, சிவம்** என்ற மூன்றும் அநாதியேயாம். அவரவர் செய்த

*கன்மத்தைக் கர்த்தாவாகிய சிவன் கூட்டி முடிப்பன் என்பதாம்.*

## வினா விளக்கம்

மனம், மொழி, மெய் இவை முறையே நினைத்தல் பேசுதல், செய்தல் புரியும் கரணங்களாம். இவற்றின் தொழில்களால் நல்வினை தீவினைகள் உண்டாகின்றன. இவ்விரு வினைகள் உயிரைப் பந்திக்கின்றன. இவ் வினைகள் தோன்றி உடன் அழிவன. அவ்வாறிருப்பவும் இவை எப்படி நீடித்து நின்று தத்தம் பயனளிக்கும் வரை பந்தமாகின்றன ?

கரணங்கள் யாவும் சடப்பொருள்கள். இவற்றின் காரியமும் சடமேயாதல் வேண்டும். அப்படியாயின் இவை எவ்வாறு வினைமுதலாகி ஆன்மாவைப் பந்திக் கின்றன ?

வினைகளைக் கரணங்கள் தாமே செய்யவில்லை. அக்கரணங்களைக் கொண்டு உயிர்தான் செய்கிறது. ஆகவே கரணங்களை இயக்குவது உயிராம். உயிரின் சுதந்தரத்தில் இப்படி நடப்பதானால் ஆன்மா நல்வினை-களையே தனக்குச் செய்து கொள்ளாமல் தீவினைகளையும் ஏன் செய்து கொள்ள நேருகிறது ? மேலும், உயிர் தானே வினைகளைச் செய்துகொள்ள வல்லதானால், இறைவன் இருப்பது எதற்காக ?

ஆன்மாவுக்குப் பிராரத்துவ கன்ம பயனை ஊட்டுவ தற்காக இறைவன் இருக்கிறான் என்றால் இயமன் வேண்டுவதில்லை. இயமன் இருப்பதானால் இறைவன் இருப்பது மிகுதியாம் அன்றோ ! இருவருமே இருப்ப தானால் முதல்வனுடைய முழுமுதன்மை கெட்டொழி யாதா ?

அல்லாமலும், இல்லாதது ஒரு போதும் பிறவாது. உள்ளதே எப்போதும் தோன்றும். இதுதான் சற்காரிய வாதம். இது உண்மையானால், ஆன்மா, பிராரத்-துவத்தை அனுபவிக்கும்போது ஆகாமியம் என்னும் புதுவினை முன்னே இல்லாதது பின்னே எப்படி உண்டாகும்? இப்படி முளைப்பது சற்காரிய வாதத்துக்கு விரோதமல்லவா? ஆகாமியம் எப்போதும் உள்ளதுதான் என்று கூறினால் அதற்குப் புதுவினை என்று ஏன் பெயரிடவேண்டும்?

பிராரத்துவத்தை உயிர்புசிக்கும்போதே அதன் மூலமாக ஆகாமியத்தைச் சிவமே செய்விக்கிறதாயின் அதுவே போதும். ஆன்மா, அப்படிச் செய்விக்கும் சிவத்தை எண்ணிக் கொண்டிருந்தாலே போதும். தானாக ஆகாமியத்தைச் சம்பாதிக்க வேண்டுவதில்லை. ஆனால், வேதத்தில், " தருமம் செய்; தானம் கொடு " என்று இப்படி யெல்லாம் புதுவினை ஈட்டுதற்கான விதிகள் ஆன்மாவுக்கு விதிக்கப்பட்டுள்ளனவே. ஆன்மா ஏன் அவைகளைச் செய்ய வேண்டும்? செய்தால் உயிர், தானாகவே ஆகாமியத்தைத் தேடிக் கொண்டதாகுமே. ஆதலால், இந்த விதிகளும், இவ்விதி வழி ஆன்மா வினைகளைச் செய்தலும் எதற்காக?—இவையெல்லாம் இப்பாடலில் கேட்கப் பட்டுள்ளன.

## விடைச் சுருக்கம்

ஆன்மாவும் இறைவனும் வேறு வேறாக இருக்க வில்லை; இருக்கவும் முடியாது. ஆடையும் வெளுப்பும் போல எப்போதும் ஒன்றியிருப்பதே இயல்பு.

இவ்விரு பொருள்களின் ஒருமையை முக்தி என்பர். இந்த முத்திநிலைபற்றிச் சித்தாந்தம் சொல்லுவதே நன்கு உணரப்படவேண்டும். இவ்விரு பொருள்களில் இரண்டும் வேறு வேருக இருப்பினும், ஒன்று கெட்டு ஒன்ருறலும் அதுமுத்தி எனப்படாது. இறைவன் என்ற ஒரே பொருள்தான் உள்ளது என்று கொண்-டால் முத்தி அடைவதற்கான பொருள் இல்லையாய் விடும். உயிருக்கு முதன்மை கொடுப்பின் இறை வற்கு முதன்மையில்லை யெனப்படும். ஆகவே. ஆன்மாவையும் இறைவனையும் ஒன்ருயிருத்தல் உணர வொண்ணுதபடி எது தடுக்கிறதோ அது அழிய வேண்டியுள்ளது. அதாவது, ஆன்மா அகங்கா ராதிகள் நீங்கி அவற்றின் எண்ணமே இல்லாததாய் சிவ நிறைவில் அழுந்திச் சிவாநுபவத்தால் ஒன்று படவேண்டியுள்ளது. இதுவே ஏகமாய்நிற்றல் எனப் படும். இதுவே போகம் எனப்படுவது. இதுதான் சுத்த அத்வைதம் என்று கூறப்படுவது. இதுவே வேதாந்த சித்தாந்தங்கள் கூறும் நன்னிலை. இதனல் ஆன்மா, தற் போதமிழந்து ஒன்றுபடுதலே புனிதநிலை என்றறியப்படும். தன்னை வேருக அறியும் தற்போதம் உள்ளவரையில் ஆன்மா இறைவனின் ஒரு பகுதி யாகுமேயன்றி இறைவனேடு ஒன்ருகாது. " என்னை இல்லாமற் செய்து " " என்னையும் தந்தாய் " என்று இவ்விஷயம் கூறப்படும் " இதனலேதான் முத்தியிலும் மும்முதல் உண்டு " என்று கூறுகிருர்கள். இதனல், ஞாதுரு, ஞான, ஞேயங்கள் என மூன்ருயிருத்தல் என்பது சரியன்று. தற்போத அழிவால் இவை ஒன்றுபடுவதே சரியானதாகும். ஒரு பொருளை அறிதலும் அநுபவித்தலும் என்பது

உண்மையில் அப் பொருளில் அழுந்திவிடுதலேயாகும். அதாவது, தான் வேறு என்னும் எண்ணம் மறைந்து பொருளில் உறைந்துவிடுதலாகும். ஆகவே இரு வேறு பொருள்கள், தம்முள் வேரும் தன்மை கெட்டு ஒன்றுதலே உயிர் முத்தியில் எய்துவதாகும்.

மனமொழி மெய்கள் பிராரத்துவப் புசிப்பின் போது, வாசனைப்பழக்கத்தால் வேண்டாதனவற்றை எண்ணவும், பேசவும், செய்யவும் வைத்துக் கர்மபந்தத்தை ஆக்குகின்றன. இவைசடப் பொருளேயாயினும், உயிர்களின் மூலவெறுப்பு விருப்பின் பழக்கத் தடிப்பின் வாதனையால் இப்பந்தம் தோன்ற இடமாகிறது. உயிர்கள் நன்மையே அடையவேண்டுமென்று விரும்பி ஒன்றைச் செய்யினும், அவ்வுயிர்களின் மலசத்திவேகத்தால் அந்நன்மை, தீமையாக நேருகிறது. இதுபகைவர்வாயிலும் நல்லசொற்பிறத்தலும், நண்பர் வாயிலும் தீயசொற் பிறத்தலும் போல்வதாகும். இதனுலேதான் " மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்றனர் திருவள்ளுவனுரும். உயிர்கள் இன்பம் துய்ப்பதற்கு மாத்திரமே உரிமையுடையன என்று எண்ணுமல், அத்துய்ப்புக்கான கடமைகளையும் செய்து, எல்லாவற்றையும் தாம் செய்வதாகக்கருதாமல் சிவார்ப்பணமாக்கித் தற்போதக்கழிவுக்கு வழி செய்வதால் விருப்பு வெறுப்புக்களில் சமபாவனை ஏற்பட்டு இருவினை ஒப்பு நிலை எய்துகின்றன என்பதே உண்மையாம். வினைபுரியும் அநுபவத்தாலேயே. அவற்றில் உயிர்கட்டு உவர்ப்பு ஏற்பட்டு, இன்பத்துள் இன்பமும், துன்பத்துள் துன்பமும் விழையாமையும் அடையாமையும் ஏற்படுகின்றன என்பதே கன்மம்பற்றிய உண்மையாம். இதுவே

மேலுள்ளவினுக்கட்குரிய விடைச் சுருக்கம் என்க. இனிப்பாடற்போக்கின் வண்ணம் விளக்கம் காணப் படும். கன்மம் பற்றிய எல்லாச் செய்திகளேயும் விவரித்துரைப்பின் இந்நூல் பல்குமாதலால் ஏற்ற அளவு விரிவே தரப்படுதலாயிற்றெனக் கொள்க !

பாச அநுபவம் உயிரினுடையதே யாதலும், பாச விடுதலேயும் உயிருக்கே உரியதாதலும் தெரியும் வண்ணம் இப்பாடல் தொடங்கப்பட்டுள்ளது. கயிறு அறுபட்டதும், அதுகாறும் உத்தரத்தை ஆதாரமாகக்கொண்ட ஊஞ்சல் அவ்வாதாரத்தின் நீங்கி, எப்போதுமுள்ள நிலேத்த ஆதாரமான தரை-யிலே வீழ்ந்து, ஆட்டம் அற்றுக்கிடந்து விடுகிறது. இப்படித்தான் உயிரினுடைய நிலேமையும் என்று நாம் கருதவேண்டும். மேற்கூறப்பட்ட ஊஞ்சலில் நின்று ஆடுபவனுக்கு உண்மை ஆதாரம் தரையே என்பது கண்கூடாம். இறைவன் குரு வடிவிலே எழுந்தருளி யாட்கொள்ளுகையில் ஆன்மாவுக்கு மலம்தாரகமன்று என்பதும், இறைவனே தாரகம் என்பதும் தெரியவரும். அங்ஙனம், தம்மை மெய்-கண்டதேவர் ஆட்கொண்டதும் ஏற்பட்டதொரு நிலேயை நம் ஆசிரியர், ***அற்றது என்பாசம்; உற்றது உன் கழலே*** எனக் கூறிக்காட்டியுள்ளார். இறைவன், பசு, பாசம் என்னும் இரண்டிடத்தும் வியாபித்திருப்-பவன். எனினும் உயிரினே ஆட்கொள்ளும்போது உயிரறிவு வியாபித்தறிதலே அடையும் ஆனல் பாச உணர்வு வியாபிக்காது. ஏகதேசமாகவே நிற்கும். இது ஆன்ம அறிவு கண்ணினிடத்தும், ஏனே இந்திரி யங்களிடத்தும் வியாபித்திருப்பினும் கண்ணிந்திரியத் தினிடத்து அதிகரித்த வியாபகம் பெற்றிருத்தல்

போலாம். "கண்போலவயங்கள் காணு வக்கண்-ணில்லார் கண்பேறே காணக்கழல் " என்ற இடத்து உண்மையுரை இங்கு அறிதல் தக்கது. இதனால், கருவிகளால் உண்டான பாசஞானத் தடையிலிருந்து உயிரானது கேடில்லாத சிவபிரானது திருவடியைப் பொருந்தி அத்திருவடி நிறைவேயாயது என்பது கருத்தாம். ***"உற்றது உன் கழலே"*** என்ற தொடரில் ***கழலின்*** வியாபகம் உணரப்படவேண்டும்.

**அருட்டுறை உறையும் பொருட்சுவை நாத!**

தாம், பல இடங்களுக்குச் சென்றும் இருந்தும் கண்டும். இத்திருவெண்ணெய்நல்லூரிலேயே ஸ்ரீ சுந்தர மூர்த்திச் சுவாமிகட்குப்போலத் திருவருள் பெற்றமையால் ***அருள்துறை*** எனலுற்றார். ஒரு நீர்த்துறை, பலருக்கும் உரித்தாதல் போல இத்துறையும் மக்களா-வார் யாவர்க்கும் அருள்வழங்கு நிலம் என்பது புலப்படுத்தற்கு இங்ஙனம் கூறலுற்றார். "உண்ணீர் மருங்கின் அதர் பலவாகும்" என்ற பழந்தமிழ்ப் பாட்டின்படி கூறினால், எக்கொள்கையாளர்க்கும் இஃதொருதுறைசாலும் என்பதும் போதரும். திருவடி வியாபகத்தில் அழுந்தியபிறகு, அதுகாறும் உயிருக்குத் துன்ப ஏதுவாக இருந்த பொருள்களும் இன்பத்துக்குரிய பொருள்களாகிச் சுவைபயக்கும். முதலாளிக்கும் நமக்கும் பழக்கம் உண்டாகி விட்டால், அதுவரை நம்மை வெருட்டி வந்த ஏவலாளர்களும் இதம் புரி-பவர்களாகமாறி விடுதல்லே உலக இயலில் நாம் கண்ட அநுபவமேயாம். சீவகரணம் சிவகரணமாதல் என்பது இப்படித்தான். இது பற்றியே ***பொருட்சுவை நாத!*** என்றார். ஏகதேச இன்பம், பலதுளி பெருவெள்ள

மாவது போலப் பேரின்புக்கே துணையாய்விடும் என்பது கருத்தாம். *நாத!* என்றமையால் எல்லா ஆன்மாக்களும் இறைவற்குத் துணைவி முறையின என்பது பெறப்படும்.

**வேறென்றிருந்த என்னை யான்பெற வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ !**

இறைவன் வேறு, ஆன்மா வேறு என்று எண்ணி யிருத்தல் வேறென்றிருத்தலாம். பொருள் தன்மை யால் இவை வேறெனப்படினும் கலப்புத்தன்மை செலுத்தும் தன்மைகளால் இவை எப்போதும் பிரிப்பற இருப்பவையாம். இப் பிரிப்பற இருக்கும் இயல்பு இல்லாக்கால் ஆன்மாக்கள் நிலைக்கள மற்றும், என்றும் பாசமே பற்றாகக் கொண்டும் துன்புற்றே கிடக்க வேண்டிவரும். இங்ஙனம் வேறாகக் கருது வது ஆன்மா பதிஞானமெய்தும் வரையில்தான் இருக்கும் பரமனையே பற்றிக்கிடத்தலை அறியாமல் பாசத்தையே பற்றிக்கிடப்பதாக அறியும்படி மல மறைப்பு செய்வித்தலால் இவ்வேறுபாட்டுணர்ச்சி விளைந்து வருகின்றது. பாசப் பொருள்தான் ஆன்மாவினின்றும் பிரிக்கப்படுவது. பதிப்பொருள் பிரிக்கமுடியாதது. பாசப்பற்றால் இறைவனை வேறெனக் கருதியிருக்கும் இயல்புள்ள தென்பதை "*வேறென்றிருந்த என்னை*" என்று கூறிக் காட்டி யுள்ளார் ஆசிரியர். *என்னை* என்றமையால் அங்ஙனம் கருதிக்கிடந்த குற்றம் ஆன்மாவி னுடையதெனப் புலப்படலாகும். பாசப் பொருள் ஆன்மா அல்ல எனத் தெளிந்தபின்னர் விளைவது தற்போதம். இதனால் யானே பரம்

என்ற எண்ணம் எழும். ஆன்மா என்றும் இறை வற்கு அடிமையே அன்றி முதலாகாது. பசுபோதம் நீக்கமடைந்த பின்னர் இந்த உண்மை தெற்றென விளங்கும். அங்ஙனம் விளக்குபவர் ஆசாரியரே. ஆகவே, ஆன்மா கெடாமல், ஆன்மாவின் பாசம் மட்டிலே கெட்டு, ஆன்மா யானெனனும் செருக்கறுப் புண்டு முதல் கெடாத அடிமை பூண்டிருப்பதை இங்கு ***யான்பெற*** என்ற சொற்களால் ஆசிரியர் குறித்துள் ளார். பதிப் பொருளை, சார்ந்த பொருளின் தன்மை யடைவதே இயல்பாகக்கொண்ட ஆன்மா அடைவதே ***பெற*** என்ற சொல்லால் குறிக்கப்படுவது. அங்ஙனம் பதிப் பொருளைச் சார்ந்தபின்னர் பதியேயாய் நிற்றல் விளங்குதலை ***வேறின்மை கண்ட*** என்ற இடம் தெரிவிக்கும். ஆன்மாவுக்கு அறிவு செயல்கள் இறை-வனையில்லாமல் விளங்கமாட்டா. இதற்காக இறை வன் உயிர்களோடு கலந்து நின்று ***காட்டும் உபகாரம்*** புரிவன். விளங்கிய அறிவு செயல்கள் விஷயத்திற் சென்று பற்றுதற்கு இறைவன் உயிர்களை இடமாகக் கொள்வதோடு வழி அறிந்து செலுத்தி, விஷயங்களிலும் உடனுகக் கலந்து நிற்பன். இதுதான் ***காணும் உபகாரம்*** எனப்படும். எனவே காணுமுபகாரம் நிகழாவிடில் வேறின்மை உணரப்பட முடியாது. ஆனது பற்றியே ***கண்ட*** என்றுர். மலத்துக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு அரிசிக்கும் உமிக்கும் இருப்பதுபோன்ற அநாதி சையோகமாம். இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு குண குணிக்குப் ***போல*** அநாதி தாதான்மியமாம். ஆதலால், ஆன்மா மலத்தினின்றும் பிரிந்து நிற்றல் போன்று, இறைவனை விட்டு ஒரு

போதும் (பந்தம் முத்தி இரண்டினும்) நீங்குமாறில்லை. இங்ஙனம் உள்ள மெய்ப்பொருளை (அது நான் ஆனேன்) என்பதன் உண்மைப் பொருளைத் தனக் கறிவுறுத்த தகைமை கருதி இங்கு *மெய்கண்ட தேவ !* எனலுற்றார் ஆசிரியர். "அறிவானும் தானே; அறிவிப்பான் தானே; அறிவாய் அறிகின்றான் தானே" என்பன போன்ற இடங்கள் இங்கு நோக்கியுணரத் தக்கன. "எவ்விடத்தும் இறை அடியை இன்றி யமைந் தொன்றை அறிந்தியற்றியிடா உயிர்கள்" என்பது சித்தியார்.

## இருவினை என்பது என்னை கோல்?

ஒருபொருளை ஒருவன் செய்தற்கு முதற்காரணம் துணைக் காரணம் என்ற இரண்டு உதவிகள் தேவை. இறைவனுக்கும் புதுச் சிருட்டிக்கண் இங்ஙனமே இரண்டும் தேவையாம். முன்பிறப்புகளில் சம்பாதிக் கப்பட்டு மாயையில் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணிய பாவங்களின் பலன்களாகிய சுகதுக்கங்கள் உயிர் கட்கு இறைவனுடைய சிற்சத்தியால்வரும் என்பது சித்தாந்தம். நல்வினை தீவினைகளை இருவினை என்பர் என்றாலும் முற்பிறவிகள் தோறும் உயிர்கள் செய்த முயற்சிகள் அழிந்து சூக்குமரூபமாகி மாயையிற் கட்டுப்பட்டிருக்கும். அப்போது புண்ணியபாவம் என்று பெயர் பெறும். இது சஞ்சிதமாம். இந்தச் சஞ்சிதமெனப்படும் புண்ணியபாவங்களே இருவினை எனப்படும். இருவினையை அவரவரும் பற்பலவாறு கூறுவராதலால் எது உண்மையெனத்தெரிய வேண்டும் பொருட்டு இங்ஙனம் *வினவி*யுள்ளார் ஆசிரியர்.

**அருளிய மனமே காயம் வாக்கு எனும் மூன்றின் இதமே அசிதம் எனும் இவை** (ஆயில்)—

உயிர்கள் மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் வினைகளை நினைத்தல் முதலான வழிகளால் செய்யும். இவற்றின் ஊடே நிகழ்வனவே விருப்பும் வெறுப்பும். இவ்விருப்பு வெறுப்புகளாலே இருவினை எனப்படும் புண்ணிய பாவங்கள் உண்டாகும். இவ்வரி இருவினை விளையுமாறு கூறுவது காண்க !

**கணத்திடை அழியும் தினை துணை ஆகா—**

இருவினைக்கு மன முதலியன காரணமாயின் அந்த நினைவு முதலியன தோன்றின உடன் அழிந்து போகின்றன. காரணமான இவை அழியும்போது இவற்றின் காரியமும் அழிந்துபடுமல்லவா ? ஆகையால், இருவினை விளைவதற்கு ஏது இராதென்று இவ்வரி மேலுரைத்ததை மறுத்துக் கூறுகின்றது. மேலும்,

**காரணம் சடம் அதன் காரியம் அஃதால்—**

காரணம் சடமானல் காரியமும் சடமாகவே இருக்கும். இதனுல், மனம் வாக்கு காயங்களாகிய கன்மத்தின் காரணம் சடம் என்பது ஒப்பமுடிந்த ஒன்ருதலால், அவ்விருவினைகளும் சடமே என்பதில் ஏதும் தடையில்லை. ஆதலால்,

**ஆர் அணங்கு ஆம் வழி அடியேற்கு என்னை கொல் ?**

மேலே சொன்னபடி இருவினையின் காரணங்கள் அழிபடுவதாலும், அவை சடமாதலாலும் அவ்வினைகள்

என்னைக் கட்டுப் படுத்தற்கும் வருத்துதற்கும் இயலாது. ஆனால் கட்டுப் படுத்துகிறது; வருத்து கிறது. இங்ஙனம் அவை செய்வதற்கு வழி எது ? என்பது இவ்வரி தரும் **கேள்வியாகும்.**

ஆனால், கன்மத்தைப் புரிவது மனம் முதலிய கருவிகளல்ல அவற்றின் வழியாக ஆன்மாவே புரிகின்றது. ஆன்மா அறிவுள்ளவன். ஆகையினாலே அறிவுடைப் பொருளோடு கூடிய அறிவற்றவற்றிற்கும் செயல் உண்டு. இதனாலேதான் கன்மம் அழிந்துபட வழியில்லை எனத் தெரியவேண்டும். மற்றும், ஆன்மா சடப் பொருளன்மையால், அதனாற் செய்யப்படும் கன்மம் செயற்பட முடிகின்றது. இது மேலுள்ள வினாவுக்குத் தரப்படும் விடையாகக் கொள்ளப்பட வேண்டும். இதன் மேல்,—

**செயல் எனது ஆயினும் செயலே வாராது—**

ஆன்மா அறிவுடைய பொருள். ஆதலால், மனம் முதலியவற்றால் செய்யப்படும் கருமங்கள் ஆன்மா-வினால் செய்யப்பட்டனவாகக் கொள்ளப்படும். அவ்வாறு ஆன்மாவின் செயலாகக் கொள்ளப்படுவது பொருந்தாதென வாதிடுகின்றது இவ்வரியின் கூற்று. செயல் ஆன்மாவினுடையதாக இருப்பின், அவ்வான் மாவின் விருப்பப்படியே செயல்கள் நடைபெறவும் நிறைவேறவும் வேண்டும். ஆன்மாவின் விருப்பப் படியே செயல்கள் நடவாமை காணப்படுகிறது. ஆதலால், ஆன்மா செய்வதாகக் காணப்படினும் உண்-மையில் அச்செயல் ஆன்மாவினுடையதன்று என்றற்கு இங்ஙனம் கூறிக் காட்டுகின்றார் ஆசிரியர். ஆன்மா வின் விருப்பப்படி செயல்கள் நிறைவேறாமையால்

அதனிடம் ஒரு குறைபாடிருத்தலை நாம் அறிய வேண்டும். "படைத்த தொருபடி" எனத் தொடங்கும் சிவப்பிரகாசப்பாடல் இங்குக் கருதப்படல் தக்கது. மேலும், ஆன்மாவே, தன்விருப்பப்படி கன்மங்களைச் செய்து கொள்ளுகிறதெனக் கொண்டால், அது தன்னைத்தானே துன்புறுத்திக்கொள்ளும் வினையைச் செய்துகொள்ளாது. தானே தனக்குத்தீங்கினை விளைத் துக்கொள்ளுதல் அறிவுடைப்பொருளின் காரிய மன்று. ஆனால், ஆன்மாவானது, தீவினைகளின் பயனை அடைதற்பொருட்டு இயம தண்டனை அடைகின்றது. இதனாலும் ஆன்மாவின் செயல்தான் கருமம் என்பது கூடாது என ஐயமெழுப்புகின்றது ***இயமன் செய்தி அதற்கு என் ?*** என்ற வினா ? இயமதண்டனை ஆன்மாவுக்கு உண்டு என்பது சாத்திரமுடிபு. "தான் மாள, வெற்றிக்கடுந்தூதர் வேகத்துடன் வந்து பற்றி" எனச்சொல்லும் ***போற்றிப் ப:றொடை*** நூலின் வரிகள் இங்கு நோக்கத்தக்கனவாம். மற்றும், ஆன்மாவே, தனக்கான கருமத்தைச் செய்து இன் புறுவது கூடுமாயின் சுதந்தரம் ஆன்மாவுக்கே உள தாகிறது. ஆதலால், முதல்வன் செய்கை என்பு தில்லையாய் முடியும். எனவே முதல்வன் செய்விக் கிறான் என்பது பொருளற்ற கொள்கையாகிவிடும். இதனாலும், வினை ஆன்மாவின் சுதந்தரச்செயல் எனக் கூடவில்லை என்பதை "***நின் அமைவும் பின்னை இன்று ஆகும்***" என்ற வரி உணர்த்தும்.

**அன்னதும் இங்கு செய்திக்கு உள்ள செயல்**
**அவை அருத்தின் –**

ஒருவேளை, ஆன்மா செய்யும் வினைக்கு ஏற்பத் தேவரீர் செய்விக்கிறபடியால் மேலைக்குப்புசிப்பாகும்

என்று சொல்லக்கூடும். இதனுல், செய்வதும், செய்விக்கிறதுமான இரண்டும் ஒப்புக்கொள்ளப்படுதல் காணலாம். செய்வது ஆன்மா; செய்விக்கிறது சிவம். இப்படி இருவர் இருக்கையில் இடையிலே இயமனுக்கு அவசியம் இல்லை என ***மையல் தீர் இயமற்கு வழக்கு இல்லை மன்ன !*** என்ற வரி கூறுகின்றது. செயலைப்புரிவது ஆன்மா. அதனைமேலைப் புசிப்புக்கேற்ப ஆக்கித்தருவது சிவம் எனக்கொண்டால் ஒருபிறப்பில் செய்வதும், மேல் பிறப்பில் புசிப்பதும் என இரண்டே அமையும். இடையில் இயம தண்டனை எதற்கு என்ற ஐயம் எழுதல் இயல்பே. அங்ஙனம் இயமன் தண்டித்தல் மிகையாகும் என இவ்வரிபுலப்படுத்துகின்றது. "சாற்றுநாள் அற்ற தெண்ணித் தருமம்பார்த்துத் " தண்டிக்கும் நடுவு நிலைமை இயமற்கு இருத்தலால் அவன் மயக்கமற்ற செயலினை உடையான் என நாமுணரும் பொருட்டு ***மையல் தீர் இயமன்*** என்றுர். இங்ஙனம் அறிவுத் தெளிவமைந்த இயமன் மிகைச்செயல் புரிதல் வழக்கன்று என்பார் ***வழக்கில்லை*** எனவுற்றுர். ஆசாரியர் (சிவம்) நடுவு நிலைபிறழா இயல்புடைய பொருளாதலால் ***மன்ன !*** என்றுர். "கெடுவல்யான் என்பதறிக" என்ற குறள் அரசனின் நடுவுநிலை உணர்த்தும் இங்ஙனம், நடுவுநிலைக்குரிய அதிகாரத்தை உடையவராயிருந்தும் அந்நிலை பிறழ்வது எற்றுக்கு என்று கேட்பார்போலக் குறிப்பினுல் ***மன்ன*** என்றுர் ஆசிரியர் என்க.

" ஆன்மா புரியும் வினைகள் பல. அவற்றை அனுபவிக்கச் செய்து விரைவில் நற்கதியடையச் செய்தற்கு நாமும் செய்விப்போம் : இயமனும்

தண்டிப்பன். இருவருடைய செயல்களும் தேவை-தான்'' என்று ஆசாரியர் கூறியருளுவதாகக் கொண்டு அடுத்த ஐயத்தை வெளியிடுகின்றூர் இனி வரும் வரிகளில் ஆசிரியர்.

**ஒருவரே! அமையும் ஒருவா ஒருவற்கு இருவரும் வேண்டா —**

குற்றம் புரிந்தவனைத் தண்டிப்பதற்கு ஒருவரே போதும். அப்படியிருக்க இரண்டுபேர்கள் கூடி-ஒருவனைத் தண்டிக்கத் தேவை இல்லை. ஆதலால், ஆன்மா செய்த குற்றத்திற்கு இயம தண்டனையே அமையும்; அன்றிக் கடவுள் அதனை மேலைப் புசிப்பு முறையால் தண்டித்தலே போதுமானது. எனவே இருவரும் கூடித் தண்டித்தல் வேண்டுவதில்லை என இவ்வரியால் கூறப்படுகிறது. ஆன்மா இறை வியாபகத்தில் எப்போதும் அடங்கியிருப்பதாதலாலும், இறைவனும் ஆன்மாவில் ஒன்றுயும் வேறுயும் உடனுயும் கலந்திருத்தலாலும், எப்போதும் பிரிவின்றியிருக்கும் நிலை ஆன்மாவுக்கு உள்ளது. கூடியிருக்கும் இருவரில் ஒருவர் பிழைக்க நேரிடின் இன்னொருவர் அவரைத் திருத்துதலே போதும் எனத் தெரிவித்தற்பொருட்டே *ஒருவா ஒருவற்கு* என்றூர். *ஒருவரே* என்பதை விளியாகக் கொண்டு ஒப்பற்ற தனி முதலாக உள்ளவரே எனவும் கூறுவர். தனக்கு மேல் வேறொருவரில்லாத தலைவராக இறைவன் இருத்தலால், அவர் இன்னொருவரோடு கூடித் தண்டிக்க வேண்டுவ-திலர் என்பது காட்டப்படுகிறது. அவ்வாறன்றி, வேறொருவரான இயமனுடன் கூடித் தண்டிப்பதாயின் ''எல்லாம் இறைவன் செயல்'' என்பதும்

" முதல்வனே கருத்தா " என்பதும் இல்லாமற் போம். ஆகலால், ***இறைவனும் நின்றனே*** என்ருர் ஆசிரியர்.

நோயாளியின் நோயினைப் பரிகரிக்க நினைக்கும் அவனது பெற்ருேர், வைத்தியனைக் கொண்டு நீக்க முயல்வர். அப்போது அவர்கள் நோயாளியை வைத்தியரிடமே ஒப்படைத்து ஏற்ற சிகிச்சை செய்யுமாறு கூறுவர். மருத்துவரும் அவ்வுரையை மேற்கொண்டு நோயினை நன்கு நாடிக் கைப்பூட்டல், சூடுதல், அறுத்தல், உரித்தல் முதலிய வருத்தம் தரும் முறைகளால் பிணியாளனைச் சுகமுறுவிப்பர். " வரும் நோயின் குறிப்பறிவார்–மண்டெரியில்—காய்ச்சிச் சுட வறுக்கக் கண்ணுரிக்க நன்னிதியம் ஈத்துத் தாய் தந்தை தமர் இன்புறுவர் " எனப் போற்றிப் பலெருடை கூறுதலால் இஃதுணரப்படும். இவ்வாறு செய்விக்கும் பெற்ருேரை எவரும் ஏசார்; இகழார். அவரைக் கருணை மிக்கவர் என நோயாளியாயிருந்தவனும் பிறரும் புகழ்வர். இயமனையும் இகழமாட்டார். வாழ்த்திப் பொருளும் அளிப்பர் " வாளால் அறுத்துச் சுடினும் மருத்து வன்பால் மாளாத காதல் நோயாளன் " என்று நூல் களில் இச் செய்கை உவமை காட்டப்படும். ***சிவமே*** பெற்ருேர். ***ஆன்மா***வே நோயாளி. ***இயமனே*** மருத்துவன். அவன் புரியும் தண்டனைகளே ***சிகிச்சைகள்***. ஆகையால், சிவம் கருணை கூர்ந்தே ஆன்மாவினை இதமூட்டற்கு இங்ஙனம் செய்விக்கின்ற தென்பதே முறைமையாம் இதனையே, ***நின்னது கருணை சொல்லளவு இன்றே*** என்ற வரியினுல் ஆசிரியர் கூறியுள்ளார். பயன் கருதாமல், காலத்தால், செய்யாமற் செய்யப்படும் இவ்வகைச் சிவம்புரியுதவி

அளவுக்குட்பட்ட தன்றென்பார் ***சொல்லளவு இன்றே*** எனலானுர். கடலிற் பெரிது எனவும், ஞாலத்திற் பெரிது எனவும், வையகமும் ஆற்றலரிது எனவும் நீதி நூல்கள் இவ்வகை நன்றியினைப் புகழ்ந்துரைத்தல் காணலாம். விருப்பு வெறுப்புற்று ஆன்மா அறிவுக் குறைபாடுடைமையின் கன்மத்தைப் புரிகிறது. அதனை இதப்படுத்துதற்கு இயமனைக் கொண்டு சிவம் தண்டனைக் குள்ளாக்குகின்றது. இனி நெறியறிந்து நிற்றற் பொருட்டு ஆன்மாவினைப் பிராரத்தப் புசிப்புக்கு உட்படுத்துகின்றது சிவம். இவ்வாறு நிகழுகையில் ஆகாமியம் ஏன் உண்டாக வேண்டும் என்பது இனி எழும் ஐயம். அதனை, ***அமைத்தது துய்ப்பின் எமக்கு அணைவு இன்ரும், உள்ளது போகாது; இல்லது வாராது; உள்ளதே உள்ளது எனும் உரை அதனுல்*** என்ற பகுதி கூறுகிறது. "உள்ளது போகாது; இல்லது வாராது" என்பது ஒரு நியதி. இது சித்தாந்தத்தின் அடிப்படை. இதன்படி பார்த்தால், ஆன்மாவுக்கு உள்ளதாகிய கன்மம் இருந்தே தீரும்; அது போகாது; இல்லாத தாகிய எந்தக் கன்மமும் ஆன்மாவுக்கு வரமாட்டாது. ஆகையினுல், எந்த ஒன்று நியதியாக உள்ளதோ அது தான் ஆன்மாவுக்குரிய புசிப்பாகும். அப்படிக் கொண்டால் ஊழினுல் உளதாகிய பிராரத்தமே இப்போது புசிக்க (அநுபவிக்க) வேண்டியதாக வருமேயன்றி வேறு புதியகன்மம் (முன்பு இல்லாதது) உண்டாவதற்கே வழியில்லை. எனவே, ஆகாமியம் முளைத்தற்கு நியாயமில்லை அவ்வாறிருந்தும் ஆகாமியம் முளைத்துச் சஞ்சிதமாகிறது எப்படி என்பதே இந்த வரிகள் கூறும் ஐயப்பாடு. இதன்

விடையாகக் கூறப்படுவது:— ***கொள்ளும் வகையால் கொளுத்திடும்*** (ஆயின்) என்பதாம். அ தா வ து, பிராரத்தப் புசிப்பின்போது ஆன்மா எல்லாம் இறை செயல் எனத் தற்போதம் அற்று இயங்காமல் தானே செய்வதான செருக்குடையதாகி வினைகளைப் புரியும். இதனல், இவ்வாகாமியம் விளைந்து புரிவோனது புத்தி த த் து வ த் தி ல் பொருந்திப் பின் புசிப்புக்கு ஏற்ற முறைப்படி வருகிறது. நம்கையில் உள்ள ஒரு பொருளை அப்பொருட்குரியானிடம் கொ டு த் து விட்டுக் கவலையற்றிருப்போமாயின் அப் பொருளால் ஆகிய இன்ப துன்பங்கள் நம்மைப் பாதிக்கமாட்டா. "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன் ' என்ற பாடல் இதனை அறிவுறுத்து வதாகும். அவ்வாறே பிராரத்தப்புசிப்பை இறை வழி நின்று புசித்தால் ஆகாமியம் விளையாது. இவ்வாறன்றி "***யான்***" என்னும் தற்போத முனைப்போடு புசிக்கப் படுவதாயின் ஆகாமியம் விளைந்தே தீரும். இதுதான் இவ்வரியால் உணர்த்தப்படுவது.

இறைவனே எவற்றையும் தருபவன். அவன் போலும் தரும் கருணையாளர் எவருமிலர். ஆதலால் இறைபணியாகவே கருதிக் கிடத்தல் ஆன்மாவுக் குரிய கடமையாம் என உபதேசிக்கப்படுகின்றது. அப்படியானல் முதல்வனுடைய வள்ளல் தன்மை யையே நினைந்து ஆன்மா யாதொரு முயற்சியுமின்றி இருந்தால் போதுமல்லவா என்று ***வள்ளன்மை எலாம் உன்னிட அமையும்*** என்றவரி தெரிவிக்கின்றது. இங்ஙனம் ஒழுகவேண்டியதே முறைமையானல் தரும நூல்களிலே "கொடுத்துப் புண்ணியம் பெறுக" என்று விதிக்கவேண்டுவதில்லை யல்லவா?

***"சும்மா இரு"*** என்று கூறிவிட்டு, உடனே ***"தருமத்தைச் செய்"*** என்று கட்டளையிடுவது பொருத்தமில்லையே என்று ***ஈயவேண்டும் எனும் விதி இன்று ஆம்*** என்றவரியால் கேட்கப்படுகின்றது. பிறருக்கு ஒரு பொருளைக் கொடுத்தலால், பொருள்பெற்றான் அதனைப்பயன்படுத்தித் துயரின் நீங்குகிறான். மேலும், பொருளைக்கொடுத்தவன் அப்பொருட்பற்றினை நீக்கி விடுகிறான். பின்னர், "பொருளைக்கொடுத்தோம்" என்ற எண்ணத்தையும் நீக்கிவிடுவது நல்லதாதலால், அவ்வாறு செய்பவன் தற்போதமுற்றும் கழியப் பெற்றவனாகிப் பற்றின்பற்றும் நீங்கப்பெறுகிறான். இப்பற்றின்பற்றும் நீங்கப்பெறுதலே ஆகாமியம் எழாமல் தடுப்பதாகும். பற்றின்பற்று நீங்குவதற் காகவே பற்றற்றான் பற்றினைப்பற்றுமாறு நீதிநூல்கள் கூறுகின்றன. பற்றற்றான் பற்றினைப்பற்றுதலாவது, ***முதல்வனாலளிக்கப்பட்ட உடல், பொருள்களை அவன் வசமாக்கி, ஆவியை அவனது நிறைவிலே அழுந்துவித்தலாகும்.*** இங்ஙனம் செய்திட்டால் பிறகு நமக்கென எதுவும் புதியவினைவு தோன்ற வழியில்லை. "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றிருக்கும் நிலையாகும் இது. ஆகையால், கொடுத்தலைக்காட்டிலும் பற்றறுகைக்கு முதன்மையான உபாயம் வேறில்லை. என நாமறியலாம். இதனாலேயே "தருமம் சர" என நூல்கள் விதிக்கலுற்றன. எனவே, நாம் ***கொடுத்தலும்,*** கொடுத்தோம் என்னும் பற்றினை அறவே ***விடுத்தலும்*** மேற்கொள்வோமாயின ஆகாமியமார்க்கம் அடைபடும் எனத் தெளியலாகும்.

**ஆயினும், என்னை அரு துயர் படுத்த நாயினேற்கு**
**நன்று மன்மாய கருமமும் கருமபந்தமும்**
**தெருள அருளு சிவபெருமானே ! —**

எனவே இந்த ஆசிரியப்பாவினுல் இந்நூலாசிரியர் தமது ஞானசாரியரைக் கரும வினைவும், கருமபந்த வினைவும் எப்படியுண்டாகின்றன எனக் கேட்டுத் தெளிவதாக விளம்பியுள்ளார். ஆன்மா, யாண்டும் முதல்வனுக்கு அடிமைப்பட்டே கிடப்பதென்ற உண்மை நம்மால் உணரப்படவேண்டும் என்பதற்காக ***நாயினேற்கு*** என்ற சொல் அமைக்கப்பட்டுள்ளது. இருள் சூரியனைப்பற்ருது- விழியையே தடுக்கிறது. அவ்வாறே, பாசம் பதியினைப்பற்ருது ஆன்மா வினையேபற்றும் என்பதை ***"என்னை அரும் துயர் படுத்த கருமம்"*** என்பதால் ஆசிரியர் தெரிவித்துள்ளார். இறைவன் உணர்த்தாவிடில் நாம் ஏதும் உணர்வதற்கில்லை. அறிவிக்க அறியும் இயல்புடையதே ஆன்மா. ஆதலால், ஆன்மா ஈடேறுவதற்கு ஞான சாரியன் காட்சியும் திருவருளும் தீட்சையும் உபதேசமும் இன்றியமையாதன என்பதைத் ***தெருள அருளு*** என்று கூறுவதால் காட்டியுள்ளார் ஆசிரியர். ஞானசாரியனுக வந்தருளுபவன் சிவபெருமானே என நாம் தெளிதற் பொருட்டே இங்குத்தமது ஞானசாரியரைச் ***சிவபெருமானே*** என விளித்துள்ளார். வினையினை நமக்குச் சேர்ப்பதும், அவ்வினையில் நமக்கு உவர்ப்பு உண்டாகச் செய்வதும், இதனுல் கருமமும் கருமபந்தமும் நீக்குவிப்பதும் எல்லாம் இறைசெயல் என்பதை நமக்குத்தெரிவித்தற்காகவே ***மாய கருமமும் கருமபந்தமும் நன்று மன் அருளு*** என்றுள்ளார்

நூலாசிரியர். யாவும் இறைவனருளால் நிகழ்வனவே என்பதுதான் நாம் இப்பாடலால் தெரிந்துகொள்ள வேண்டும் கருத்தாகும் "கன்மபந்தத்தினுல் சன்ம பந்தம் பெறக் கற்பித்தது உன்ன தருளே" என்னும் தாயுமானுர் வாக்கும் இங்கு ஒப்புக்கொள்ளுதற் குரியதாகும். மற்றும், "மேலைக்கு வருவினை ஏதென்னில்" என்று தொடங்கும் *சிவப்பிரகாச* நூல் பாடலும் இங்குக்கற்றுக் கருதுதல் பொருந்தும். ***அநியத கன்மம்*** பற்றிய அறிவினுல் கருத்தா எங்ஙனம் உபகரிக்கிருன் என்பது புலப்படும். பொதுப்பட வுரைப்பின், கன்மங்கள் மாயையிலே பொருந்திப் பக்குவப்பட்டுப் படைப்புக்காலத்திலே புசிக்கப்படு வன எனவும், இப்புசிப்பின்போது ஆகாமியம் ஏருமற் செய்து கொள்வதற்கு முதல்வன்பாற் பற்றிக் கிடத்தலே வழியெனவும், இதுதான் கன்மபந்தத்தால் ஆகும் சன்மபந்தம் துடைக்கும் நெறியெனவும் நாம் உணர்ந்து மேற்கோடல் வேண்டும் எனத் தெரிய லாகும்.

---

## செய்யுள் – 15

### *நேரிசை வெண்பா*

கன்மக் கூட்டுரவு—திருவருட் செயல்

**மானமரும் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன !**
**போனவினை தானே பொருந்துமோ ?—யானதனில்**
**ஆவனே ? ஆக்காய் அமலனும் நின்னருள்தான்**
**தேவனே ! யாதுக்கோ ? தேர்.**

## பொழிப்புரை

*மான்மறியைச் சிவந்த தமது திருக்கரத்திலே தாங்கிக் கொண்டு, திருமதில் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருக்கும் தலைவரே! முற்பிறப்பில் அடியேன் செய்த வினைகள், தாமாகவே வந்து அடியேனைக் கூடுமோ? அல்லது அடியேனை அந்த வினைகளைக் கூடுவேனே? இவ்விரண்டு விதமும் இல்லையாயின் தேவரீர் கூட்டியருளவேண்டும். அப்படியுமில்லையானல் குற்றமற்றவரான தேவரீருடைய திருவருள்தான் எதற்காக உள்ளது? இவற்றை அடியேனுக்கு அருளிச் செய்ய வேணும் தேவனே!*

## வினு விளக்கம்

ஒருவன் செய்த வினையானது தானகவே அவனுக்கு அனுபவமாதற் பொருட்டு வந்து சேருமா? அல்லது, ஆன்மாவே அவ் வினையை அடைந்து புசிக்குமா? அல்லது, முதல்வன் இவ்விரண்டையும் கூட்டிப் புசிக்கவைப்பானு? இம் மூன்றுமில்லையானல் உடல், உறுப்பு, உலகு, உறுசுவை என்பன எவ்வாறு விளைந்தன?

## விடைச் சுருக்கம்

வினை சடம் ஆதலால் அது தன்னைச் செய்தவனை அறிந்து கூடாது. ஆன்மா சிற்றறிவுடையது; அறிவிக்க அறிவது. ஆகையால், தானகை அறிந்தெடுத்துப் புசிப்புக்கு வேண்டிய வசதிகளைப் படைத்துக்கொண்டு புசிக்க முடியாது. இரும்பும் காந்தமும் ஒன்றையொன்று இழுத்துக் கிடக்கும் இயல்புடையனவாயினும் அவ்விரண்டையும் அங்ஙனம்

ஒட்டிக் கிடக்குமாறு ஒருவன் அவற்றை நேருக்கு நேராகப் பிடிக்கவேண்டியுள்ளது. அப்படியே கன்மத்தையும் ஆன்மாவையும் இறைவனே இயைவிக்கின்றான். இங்ஙனம், அவன் இயைத்திடுவதை நமக்கு அறிவிப்பனவே தனு கரண புவன போகங்கள்.

## விளக்கவுரை

இறைவன் உயிர்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்றல் தனது சத்தியால் வினையின் பயனாகிய இன்ப துன்பங்களை உயிர்கட்கு ஊட்டுதற் பொருட்டே யாகும். எல்லா ஆன்மாக்களையும் தாங்குபவன் முதல்வன் ஒருவனே யாவன் என்பதை ***மான் அமரும் செங்கை*** என்ற தொடர் குறிக்கும். "வேத மான் மறி ஏந்துதல் மற்றதன் நாதன் நான் என நவிற்றுமாறே" என்னும் திரு ஒற்றியூர் ஒருபா ஒருபது வரிகள் இப் பொருள் தொனிக்கச் செய்வன என்னலாம். மற்றும் அத்தகைய பரமன் ஆன்மாக்களைப் பெத்தத்தும் முத்தியிலும் என்றும் தாங்குதலே யன்றி அவை பெத்தநிலை கடந்து முத்திநிலையடைதற்காக அவ்வான்மாக்கள் இருக்கும் இடத்தே வெளிப்பட்டு ஆசானாகி அருளுவன். இதனை, ***மதில் வெண்ணெய் வாழ் மன்ன !*** என்ற வரி குறிக்கும். ஊருக்குக் காவல் மதில். அதுபோல உயிருக்குக் காவல் இறைவன். இதனால் இறைவனே நமக்கு உண்மைக் காவலன் எனப்படுகின்றான். இக்காவலன் காவான் எனின் உயிர்கள் என்னும் ? இது குறித்தே ***மன்ன!*** எனலானார். குற்றம்புரிந்தாரையும் திருத்திப் பணி கொள்ளுதல் மன்னர் இயல்பாகும். இதற்கொரு சான்றாகவே மானைத் தாங்கியிருத்தல் கூறப்பட்டுள்ளது எனலாம்.

போன வினைதானே பொருந்துமோ—

உயிருக்கு முன்பிறவியில் செய்யப்பட்டுக்கிடந்த இருவினையின் பயனுக மறுபிறவியில் இன்ப துன்பம் துய்த்தல் உண்டாகும். அந்தத் துய்ப்பின் போதே மேலும் வினை ஏறும். இதனுல் மீளவும் பிறத்தலு இறத்தலும், சுவர்க்க நரகங்களிற் சென்று மீளுதலும் நிகழும் உடம்பும் வினைப்பயனும் அறிவில்லாத சடப் பொருள்கள். உடம்பு வினைப்பயனை எடுத்துக் கொள்ள முடியாது. வினைப்பயனும் உடம்பைப் பொருந்தவும் இயலாது. ஆகையால், உடம்பையும் வினைப்பயனையும் முதல்வனே தனது சத்தியால் மருத்து வனும் அரசனும் போல உயிருக்கு ஊட்டுவன் என்பது சித்தாந்தம்.

இன்ப துன்பங்களை இயல்பு என்று கூறுவார் உலகாயதர். ஒரே தன்மை உடைமையே ஒரு பொருளுக்கு இயல்பு. மாறுபட்ட இரு தன்மை இயல்பன்று. செயற்கையே தண்ணீருக்கு மணமும் சூடும் செயற்கை. குளிர்ச்சி இயற்கை. ஆதலால் உயிருக்கு அறிவுதான் இயல்பு இருவினை அநுபவமே. இருவினைக்கு முயற்சியே காரணம் என்பாரும் உளர். முயற்சியால் இன்பமும் முயற்சியின்மையால் துன்பமும் உண்டாம் எனக் கூறுவர் இதுவும் உண்மையாகாது. முயற்சியுடையோரும் முற்றுப் பெருது முட்டுப்பாடடைதல் காண்கிரேம். ஒருவினையும் செய்யாதோரும் கிழியீடு அடைதல் காண்கிரேம். 'முயற்சி திருவினையாக்கும்' என்பது மன எழுச்சி விளைத்தற்கும் பயன்படுவதாம். மன எழுச்சிக்குப் பயன் முன்வினைப் பயனை அனுபவிப்

பதற்குத் துணையாதலும், பின்வினைக்கு ஏதுவாதலு-மாம். " உடையார் முன் இல்லார் " என்பதனால் வினைப்பயன் தெரிவிக்கப்பட்டதென்னலாம். ***செல்வம், வறுமை, உயர்வு, இழிவு, இன்பம், துன்பம்*** என்ற ஆறும் சூக்குமமாய்க் கருவுட் கிடந்து பின்னர் முயற்சியால் தூலமாகி வெளிப்படும். வினையால் உடலும், உடலால் வினையும் வித்தும் மரமும்போல் உண்டாம். . முயற்சி செயல்வகையால் அனுபவ-மாகிறது. கருத்து வகையால் மேல் வினைக்கு வித்தாகிறது. " சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறேன் " என்னும் தாயுமான சுவாமிகள் பாடல் பவந்தனை முயற்சியீட்டுதல் காட்டும். வேதம் விதிப்பதைச் செய்தல் இதம் எனப்படும். விலக்கியன செய்தல் அகிதம். இதம் புரியும்போதே அகிதம் நிகழ்தலும், அகிதத்தை அகிதமென எண்ணாதே செய்ய நேரிடுதலும் முயற்சியால் நிகழும். ஆதலால், கன்மமே போதும் இறைவன் வேண்டாம் என்னும் மீமாஞ்சகர் கூற்றுப் பொருந்தாதென்க. இம் மறுப்பையும் உணர்த்தும்பொருட்டே ***போனவினை தானே பொருந்துமோ ?*** எனக் கேட்பார்போல் விடை தருதலானார் ஆசிரியர். இதனால், இதம் அகிதம் இரண்டினையும் முதல்வன் அறிந்து ஏற்று அவற்றிற் கேற்ப இன்பதுன்பப் பயனை உயிருக்குத் தருவன் என்பது கருத்தாம். இங்ஙனம் அவன் புரிதல் கருணையினால் ஆம். " எக் கிரமத்தினாலும் இறை செயல் அருளே " என்பர் இவர் சித்தியாரில் மற்றும் உயிருக்கு இதம் அகிதம் தெரிந்துகொள்ளும் அறிவின்மையால் இறைவனையின்றி ஆன்மா வினையினை எடுத்துக்கொள்ளும் ஆற்றலுடையதன்று. அறிவுக்

குறைவுக்கும் மறைவுக்கும் மூலமலம் காரணமாம் இது பற்றியே, ஆசிரியர், ***யான தனில் ஆவேனே ?*** என்றார். ஓகாரம் வினவோடு எதிர்மறையாகவும் நின்று "ஆக-மாட்டேன்" என்ற விடையையும் தருதல் காணலாம். உயிர் ஒன்று, வினைநிகழ்தற்கான துணைகள் ஏழு ஆக எட்டு முதல் நிலைகளும் சிற்றறிவுடையதும் சடமும் ஆதலின் முற்றறிவுடைய முதல்வனுக்கு வினைப் பயனைக் கூட்டுவித்தல் கடமையாயிற்று என்ப. உடல் கரணம் காலம் உறுபலன் நியதி செய்தி என்ற ***ஏழும்*** முயற்சியின் கருத்தாவாகிய உயிருக்குத் துணையாய் நிற்பனவாம். இவ்வேழும் சடம். இம் முதல் நிலைகளை இன்றி உயிர் அறிவு தொழிற்படாது. ஆதலால் சிற்றறிவுடையது ஆன்மா. ஆகையால் அவ் வேழு முதல் நிலைகளையும் முதல்வன் தன் ஆணையாகிய திருவருளால் உயிருக்குக் கூட்டுவன். இதனால் உயிர் செய்யும் செய்கைகள் இறைவன் கட்டளையேயாம் உயிர் முதலிய எட்டினையும் வடநூலார் ***காரகம்*** என்பர். காரகம் என்பது தொழில் முதல் நிலை என்னும் பொருள் உடையது. இதனை, வினையே, செய்வது செயப்படுபொருளே. "நிலனே காலம் கருவி என்றா இன்னதற் கிதுபயன் ஆக என்னும் அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ ஆயெட்டு என்ப தொழில் முதனிலையே" எனத்தொல்காப் பியம் புகலும். இனி, செய்யுளில் உள்ள ***ஆக்காய்*** என்ற சொல்லால், இறைவனே கருணையாலும் கடமையாலும் உயிருக்கு வினைப்பயனைக் கூட்டு கின்றான் என்பது பெறப்படும். இறைவன், தான் மலரகிதன். பேரிரக்கமுடையன். முற்றறிவினன். எல்லாம் வல்லபன். ஆகையினாலே மலத்தோடுகூடிய

உயிர்களின்மீது தனது திருவருளால் இரக்கம் வைத்து, உயிர்களின் இதம் அகிதம் என்னும் வினைப்பயன்களை அறிந்து பிறப்புத்தோறும் அவ்வுயிர்கள் நற்கதிக்கட் செல்லுதற்பொருட்டுக் கூட்டியருளுவன் என்பது முறைமையாம். இதனையே, ***அமலன் ஆம் நின் அருள் தான் யாதுக்கோ*** என்ற வரியால் தெரிவித்த- னர் ஆசிரியர். இதனால், இறைவன், உலகத்து மன்னர் போலத் தனது ஆணையால் தண்டித்தும், இன் புறுத்தியும் உயிர்களை நடத்துவன் எனத் தெரிதல் வேண்டும் உயிர்கள் வெளிப்படாமல் மறைந்து செய்யும் பாவத்துக்காக நரகம் உள்ளது. முனைப் புடன் செய்யும் புண்ணியத்துக்காகச் சுவர்க்கம் உள்ளது. பாவத்தின் பலனை அனுபவிக்கச்செய்து தீர்ப்பது புண்ணியம் செய்வதின் பொருட்டாம். அங்ஙனமே புண்ணியத்தின் பலனைப்புசிப்பித்துத் தீர்ப்பது மல நிவிர்த்தியின் பொருட்டாகும். வைத்தி யன் மருத்தாலும் பிராயச்சித்தத்தாலும் நோயைத் தீர்ப்பது போல, இறைவனும் நரக சுவர்க்க முதலிய வழிகளால் வினையாகிய நோயைத் தீர்ப்பன் என்பது தெளியத்தக்கது. ***தேவனே*** என்றமையால், மகாதேவ னாகிய சிவ பிரானே இங்ஙனமெல்லாம் செய்தற் குரியவன் என்றார். ***தேர்*** என்றமையால் திருவுளத்- துக்கொண்டு ஆவன யாண்டும் புரிந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றார் என்னலாம்.

இதனால், கன்மம், ஆன்மா, சிவம் மூன்றும் அநாதி என்பதும். ஆகையால், அவரவர் ஆர்ச்சித்த கன்மத்தைக் கர்த்தா கூட்டி முடிப்பன் என்பதும் அறியலாம். "அவ்வினையைச் செய்வதனில் அவ் வினைஞர் தாஞ்சென்றங் கவ்வினையை" என்னும்

சிவஞானபோதச் செய்யுளுரைகள் ஈண்டைக்குத் தெரிதல் தக்கது. காந்தம் இரும்பை இழுக்கும் ஆற்றல் உள்ளது. இரும்பு காந்தத்திடம் தானே செல்லும் ஆற்றல் உடையதன்று. இவ்விரண்டையும் ஒருவன் நேராக்கினுல் காந்தம் இரும்பை வலித்துக் கொள்ளும் காந்தம் போல்வது உயிர். இரும்பை ஒப்பது வினே. நேரொக்க ஆக்குவோனே ஒக்கும் இறை. வண்டியின் நுகத்தடி தானுக எருதின் கழுத்தை அடையாது. எருதும் அதனைத் தானே பூட்டிக் கொள்ளாது. வண்டிக்காரனே இரண்டை யும் சேர்த்துப் பூட்டவேண்டும். "நோயெல் லாம் நோய் செய்தார் மேவாம்" என்ற குறளும் இறைவனது கூட்டுவிக்கும் தொழிலே உணர்த்தும் என்னலாம்.

---

## செய்யுள் – 16

நேரிசை ஆசிரியப்பா

*தீக்ஷையும்—பிராரத்தப் புசிப்பும்*

தேரா துரைப்பன் தெருமரல் உளத்தொடு
பேரா தருளுதல் பெரியோர் கடனே;
நின்னைக் கலப்ப தென்னுண் மையெனின்
நின்னது நேர்மை சொல்மனத் தின்றே

5 எழுவகைத் தாதுவின் எழுதுளை இரண்டும்
பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி
நீக்கி என்றனைப் போக்கற நிறுத்தி
இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க,

10 வாக்கும் மனமும் போக்குள தனுவும்
சொல்லும் நினைவும் செய்யும் செயலும்
நல்லவும் தீயவும் எல்லாம் அறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றுய்க்
காலமும் தேசமும் மாலற வகுத்து

15 நடுவுநின் றருத்தலின் நடுவனு குதியே;
சான்றோர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
அத்துவா மெத்தி அடங்கா வினைகளும்
சுத்திசெய் தனையே ஒத்தகன் மத்திடை

20 நீங்கின தென்னை ஊங்கூழ் வினைகளும்
ஆங்கவை அருத்துவ தாரைகொல்? அதனால்,
கருமம் அருத்தும் கடனது இன்றும்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுள் மணிய! கருத்தினுள் கருத்த!

25 வெண்ணெய் வேந்த! மெய்கண்ட தேவ!
இடர்ப்படு குரம்பையுள் இருத்தித்
துடைப்பதில் லாஅருள் தோன்றிடச் சொல்லே.

## பொழிப்புரை

*அடியேன் மயங்கும் மனத்தொடு தேவரீர் திருமுன்னர் ஒரு வினவினைத் தெரியாமையால் விண்ணப்பம் செய்கிறேன். அங்ஙனம் விண்ணப்பம் செய்தாலும், அடியேனது ஆர்வத்தை நோக்கி மாறு-படாமல் திருவருள் புரிவதே பெரியோர்களுக்குக் கடமையாகும்.*

*தேவரீரைக் கலந்தனுபவிப்பது அடியேனுடைய அற்ப போதமாகும் என்பீராயின் — தேவரீருடைய நுட்பத்தை விசாரிக்கப் புகுந்தால் வாக்குக்கும் மனத்-*

துக்கும் எட்டக்கூடியதன்று. அப்படியிருக்கையில், தேவரீருக்குள்ளே அடங்கியிருக்கப்பட்ட அடியேனைத் தேவரீர், ஏழு தாதுக்களும் ஒன்பது துவாரங்களும் கொண்ட இவ்வுடம்பிலே இட்டு உள்ளே ஒடுக்கிவைத்து, அச் சரீரத்தை விட்டு யான் போகா வண்ணம் நிறுத்தி, அதனை விட்டுப் போகவேண்டிய வேளையில் போகவும் செய்து, அடியேனுடைய விழைவு அறிவு செயல்களைத் தூண்டிக் காரியப்படுத்துகின்ற இந்த **வித்தை**யானது மிகவும் ஆச்சரியப்படத் தக்கதாக உள்ளது. நிற்க,

அடியேன் மனம் வாக்குக் காயங்களால் முறையே நினைப்பதும், சொல்லுவதும் செய்வதும் ஆகிய தொழில் களால் உண்டாக்கப்பட்ட நன்மையும் தீமையுமாய் உள்ள புண்ணிய பாவங்கள் யாவும் தேவரீர் திருவுளத்தே அடைத்தருளி, அடியேன் செய்துவந்த அடைவுக்குத் தவறு நேரா வண்ணம் ஏற்றக் குறைவின்றி அந்தப் புண்ணிய பாவங்களை அநுபவிக்கத் தக்க காலங்களையும் அவைகளைப் புசித்தற்கேற்ற தேசங்களையும் மயக்கமற வகுத்து, அடியேனையும் அக் கன்மங்களையும் கூட்டி, தேவரீர் நடுவராக நின்று புசிக்கச் செய்வதனாலே தேவரீரை **நடுவர்** என்று சொல்லலாகும். ஆகையால்,

நடுவராய் இருக்கப்பட்ட பெரியோர்களுக்கு எப்போதும் மயக்கம் என்பது இல்லை. அறிவில்லாதவர் செயல்களே மயக்கம் உடையன. அப்படியிருக்க,

தேவரீர், ஆறு அத்துவாவகைகளாலும் நிரம்பி மிஞ்சியுமுள்ள கன்மங்களையெல்லாம் **தீக்ஷை**களினாலே சோதனைசெய்து அடியேனுக்குச் சுத்தியை வருவித்தீர். அவ்வாறுயின், அடியேனுக்கு இருவினை ஒப்பு நேரிட்ட காலையில் போனது எது? இங்கே உண்டான ஊழ்வினை களையெல்லாம் தேவரீர் தீக்ஷைகளினாலே சுத்திசெய்த

*பிறகு அந்தக்கன்மங்கள்புசிக்கிறது யாரை? சுத்திசெய்யப் பட்டவர்களைத்தாம் அவை பற்றிப்புசிப்பிக்கின்றன என்பீராயின், தேவரீர் சுத்தி செய்த பின்னர் மறுபடியும் அக்கன்மங்கள் நின்று புசிப்பிக்கைக்கு வழியில்லையே. அப்படித்தான் புசிப்பிக்கும் என்பீராயின் தேவரீரைத் தருமகருத்தா என்றழைப்பது பெருமைக்குத்தான் போலும்!*

*கண்ணுக்கு மணிபோலக் காட்டாக உள்ளவரே! அறிவுக்கு அறிவாக உள்ளவரே! திருவெண்ணை நல்லூருக்குக் கருத்தாவாக உள்ளவரே! மெய்கண்ட தேவரே!*

*துக்கத்துக்குக் காரணமான உடம்புக்குள்ளே அடியேனை இருக்கச்செய்து அடியேனுக்கு உள்ளதான கன்மத்தினைத் துய்த்துப் போக்காததாகிய அனுக்கிரகத்தை அடியேனுக்கு விளங்குமாறு அருளிச்செய்ய வேண்டும்.*

## கருத்து

சிவமும் ஆன்மாவும் எப்போதும் இடைவிடாம லிருக்கின்றன. ஆன்மா மலமுடைமையினாலே சிவ னிடத்திலே கூடியிருந்தும் பற்றில்லை. ஆகையால் அச்சிவன் பெத்தநிலையிலும் ஒத்திருப்பன்.

## வினா விளக்கம்

ஆன்மாக்கள், தமக்கெட்டாத சிவத்தில் எப்படிக் கலந்து நிற்கின்றன?

பொருளுக்கு மாறுபாடுண்டானால்தான் பொரு ளியல்புக்கும் மாறுபாடுண்டாகும். சிவத்தோடு கலந்-

திருத்தல் ஆன்மாவுக்கு இயல்பானுல், சிவம் சரீர பந்தத்தைக் கொடுத்து அவைகளை விலகி நிற்கச் செய்வது எப்படி?

ஆன்மாக்களின் கன்மப் புசிப்புக்காகவே சரீரம் கொடுக்கப்பட்டதானுல், கன்மத்தை நீக்குவதற்குச் சரீரம் இன்றியமையாது வேண்டப்படும். இருவினை ஒப்பு வந்த ஆன்மாக்களுக்கு மட்டும் சஞ்சிதகன்மம் தீக்ஷையாலும். பிராரத்தம் எடுத்த உடற்புசிப்பாலும். ஆகாமியம் இறைவன் ஏற்றுக்கொள்ளுவதாலும் ஒழி கின்றன. ஆகவே உடம்புஇருந்தும் கன்மநீக்கத் துக்குக் கொஞ்சமும் பயன்படவில்லை. சில ஆன்மாக் களுக்குமாத்திரம் கன்மம் நசிப்பதற்காகச் சரீரபந்தத் தைக்கொடுத்து இடைவிடாத துன்பத்தில் ஆழ்த்-தியும், சில ஆன்மாக்களுக்கு அந்தபந்தத்தின் துணை வேண்டாமலே கன்மநசிப்பை விளைத்து இன்பத்தில் ஆழ்த்தியும் வருவது சிவத்தினது நீதிக்குத் தகுமா?

இல்லாவிடில், சிவன் ஆன்மாக்களுக்குச் சரீர பந்தத்தைக் கொடுத்துக் கன்மபந்தத்தைத் துடைப்பா ுயின் அஃது எம்மட்டும் அமையும் ?

## விடைச் சுருக்கம்

ஆன்மா சிவத்துடன் எப்போதுமே கலந்துதான் உள்ளது. மலத்தால் இஃது அறியப்படவில்லை. மல நீக்கத்தே ஒன்ருதல் கூடுகிறது. ஏழுதாதுக்களும் ஒன்பது துவாரங்களும் கொண்டுள்ள உடலில் ஆன்மா உறைகிறது. அத்துவாக்கள் மூலம் வினைப்புசிப்பின் பின்னர் ஆன்மா விடுதலைபெறவேண்டியுள்ளது. தீக்ஷயினுலே அத்துவசோதனை குருவினுல் செய்யப்

படுகிறது. குருவினுல் மலவிமோசனம் உண்டாவ தாயின் கருமசாம்மியம் ஏன் தேவைப்படுகிற தென்பது ஐயப்பாடு. இருவினையொப்பு ஏற்பட்ட போதிலும் குருவினது தீக்ஷையினுல்தான் ஆன்மா விடுதலை அடைகிறது. தீக்ஷையின் பின்னர் புசிப்புக்கு உள்ளது பிராரத்தம் ஒன்றே. அது உடலுள்ளளவும் இருப்பது. ஆனுல் சீவன் முத்தனுயிருப்பவன் தன் செயலெல்லாம் கடவுளதாகவே உரிமைப்படுத்தி விடுகிருன். இதனுல் அது கடவுட் போகமாகி விடுகிறது. இவன் செயலெல்லாம் அரன் செய-லாகின்றன. இங்குத்தான் சிவம் நீதிமான் என்பது அறியப்படவேண்டும். பிராரத்தப் புசிப்பின்போது சீவன் முத்தன் செயல்களைச் சிவம் ஏற்றுக்கொள்ளா-திருப்பின் சிவம் அநீதியுடையதென்னலாம். அப்படி யில்லாமையால் சிவம் நடுவுநிலை உடைப்பொருளே என்னத் தடையிலது.

## விளக்கம்

குற்றம் புரிதலும், அறியாமை உடைமையும், ஆனுல் உண்மை தெரிய அவாவுதலும் ஆன்மாவுக்கு இயற்கையாம். மலப்பிணிப்பால் அறியாமையும், அவ் வறியாமையால் குற்றம்புரிதலும், விளைகின்றன. எனினும், பந்தமறுகைக்குப் பயன்படும் பொருட்டு இறைவனுல் உபகரிக்கப்பட்டுள்ள மாயா காரியமாகிய உலகு முதலனவும், தத்துவகாரியமான இந்திரிய முதலனவும் ஒரு சிறிது அறிவு விளக்கத்துக்குத் துணை புரிதலால் விளக்கொளி போலும் அறிவு விளக்கம் சிறிதளவுண்டாகின்றது. இதனுல், உண்மையுணரும் அவா எழுகின்றது. ஆனுல் தெளிவு ஏற்படுவதில்லை.

குழப்பமும் அறிவுச் சுழற்சியும் உள்ளன. இதுவே ஆன்மாவின் தற்போதைய நிலை. இதனையே. ***தேராது உரைப்பன் தெருமரல் உளத்தொடு*** என்றவரி புலப் படுத்தும். தேராமை அவாவை எழுப்பும். தெருமரல் தெளிவடையாது செய்யும். இதுவரை மாணுக்கரியல்பு காட்டப்பட்டது. இனி,

ஞானசாரியராவார் சிவமேயாதலால், அவருக்கு மலப் பிணிப்பில்லை. முற்றறிவுளது. தெளிவாய் உபதேசிக்க முடிகிறது. மாணுக்கரறிவைத் தூய்மை செய்து தம் அடிப்படுத்த இயலுகிறது. இது அவர்-பால் இயல்பாகவே அமைந்துள்ள பேரருளுடைமை யால் நிகழ்கிறது. இவ்வருளால் அவர் எதனையும் கடமையாகவே கருதிப்புரிந்திடுகின்ருர். இவ்வருட்-டிறத்தினின்றும் அவர் ஒருபோதும் மாறுபடுவதிலர். இதனை, ***பேராது அருளுதல் பெரியோர் கடனே*** என்றவரி கூறுகிறது.

உயிர்கள் எப்போதும் இறை வியாபகத்திலே உள்ளன. இறைவனும் உயிர்கட்கருளும் பொருட்டு உயிர்களுடன் ஒன்ருயும் உடனுயும் உள்ளான். ஆதலால், உயிரும் இறையும் பிரிவற நிற்றலே உண்மையாம். முடிவிலும், உயிர் அறிவு இறை யறிவோடு கலந்து துய்க்கின்றது. முத்தி நிலையும் கலப்பு நிலையேயாம். இதனை உணர்த்தவே ***நின்னைக் கலப்பது என் உண்மை*** (எனின்) எனப்பட்டது. " உள்ளம் என்றும் நீங்காது ஒளித்திருந்து கள்ளமின்று காட்டும் கழல் போற்றி " என்பது போற்றிப் பஃறொடை நூல். இங்ஙனம் பெத்தத்தும் முத்தி யினும் இறைவனோடு உயிர் கலப்புடையதாயினும்,

இறைவனை ஆன்மா பெத்த நிலையில் மலப்பற்றுடை-மையால் அறிவதில்லை. முத்தியிலும் அழுந்தி அநுபவித்தலேயல்லால் வேருக நின்று காண்டல் இல்லை. ஆன்மாவின் மனம் முதலியன மாயாகாரியமே யாதலால் மாயாதீதனுன இறைவனை அக்கருவிகளால் காண்டல் இயல்வதன்று. • சூக்குமத்தைத் தூலம் ஒருபோதும் காணமுடியாமையே மரபாம். இச்செய்தியைக் கூறுவதே *நின்னது நேர்மை சொல் மனத்து இன்றே* என்றவரி.

ஆன்மாவின் இச்சை ஞானம் கிரியைகள் தொழிற்பட்டாலன்றி அது ஏதும் துய்க்க இயலாததாகிவிடும். வித்தினுள்ளடங்கிக் கிடக்கும் அங்குரம் முளைப்பதற்கு ஈரம்நில முதலிய சூழ் நிலைகள் துணை நிற்பதைப் போன்று உடம்பு முதலானவை இச்சையாதிகளைத் தொழிற் படவைப்பதற்கு ஏற்ப அளிக்கப்படுகின்றன. காரண சூக்கும தூல சரீரங்கள் மேலதற்குத் துணையாம் தொழிலுடையவை. தூல சரீரம் அநுபவத்தின் வேறுபாட்டுக்கிணங்க அமைக்கப்படுகின்றது. இந்தத் தூல உடம்பு ஏழுவகைத் தாதுக்களாலானது. அவை நரம்பு, எலும்பு, மூளை, தசை, தோல், இரத்தம், சுக்கிலம் என்பனவாம். "பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போல்" என்பர் இலக்கண நூலாரும். செய்யுளுக்கு ஏழுறுப்புக்கள் இருத்தற்கு இஃது உவமை காட்டப்படும். இவையன்றி, அற்பத் துவாரங்கள் ஏழ் இருக்கின்றன. இவற்ருேடு வாய், அபானம் எனப்படும் இரு பெருந்துவாரங்களும் உடம்பில் உள. ஆகவே நவத்துவாரங்களைக் கொண்டது இச்சரீரம். இத்தகைய ஓட்டைப்பாண்டத்தில் உயிரை நிலைக்கச்செய்கிருன் இறைவன். இது நம் செயலால்

ஆவதன்று. ஓட்டைக்குடத்தினுள் தண்ணீரை நிற்கச்செய்வது இயலாச் செய்கை. நிற்கச் செய்தால் அது வியப்புடைச் செயலாம். இது பற்றியே "வருந் தும் உயிர் ஒன்பான் வாயில் உடம்பில் ***பொருந்துதல்*** தானே ***புதுமை.*** சீதநீர் — பொள்ளல் சிறுகுடத்து நில்லாது விதலோ ? நிற்றல் வியப்பு" எனப்பாராட்டிப் பகருகின்றது நன்னெறிநூல். இவ்வாறே இந்நூல் வரிகள். ***"எழுவகைத் தாதுவின் எழுதுளை இரண்டும் பெருமுழைக் குரம்பையிற் பெய்து அகத்து அடக்கி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு*** என்கின்றன. இறைவனின் பேராற்றல் நமக்கு எங்ஙன பெருந் துணை புரிகின்றது என்பதை இவ்வியப்புடைச் செய்கையே நமக்கு நன்கு அறிவுறுத்தும். ஒவ்வொரு வரும் தத்தம்உடம்பை நேசிக்கின்றனர். உடம்பினுள் வாழவேண்டும் என்றே இச்சைகொள்கின்றனர். இங்ஙனம் இச்சையை எழுப்பி உயிரை உடம்பினுள் ளிருந்து வெளியேறி விடாமல், பிராரத்துவ அநுபவ மளவும் இருக்கச்செய்வதும் இறை செயலேயாம். பிறகு, நாம் விரும்பினும் உயிர் நில்லாமல் நீங்கிவிடு கிறது. நீங்குவது நம் விருப்பின்படி நிகழவில்லை. ஆகவே, உயிரை அதன் அவ்வுடலாலாகும் துய்ப்பு ஒழிந்ததும் நீங்கிவிடுமாறு செய்வதும் நிமலன் செய லாகிறது. இதனுல், உடம்பினிடமும் நம்முடைய அதிகாரம் செல்லாமை நன்குணரப்படும். இதனையே ***என்றனை போக்கு அற நிறுத்தி, நீக்கி*** என்று கூறிக் காட்டியுள்ளார் ஆசிரியர். இங்ஙனம், உடலோடு உயிரைக் கூட்டுவித்தாலன்றி நம் விழைவு அறிவு செயல்கள் தொழிற்பாடு எய்தமாட்டா. எனவே, நம்முடைய இச்சையாதிகளை எழுப்பி நடத்துவதும்

முதல்வன் செயலே என்பது தேற்றம். இதுபற்றியே, ***இச்சை முதலிய எழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு*** எனப்பட்டது பாடலில். நம் விழைவுக் கேற்ப உடம்புகளை மாற்றித்தருதலும், அவ்வுடம்புகளுள் உயிரை நிலைக்கச் செய்தலும், பின்னர் அவ்வுயிரை நீங்கச்செய்தலும் ஆகிய இம் முத்திறத் தொழில்களை இறைவன் நம்வினை பக்குவப் படும் பொருட்டே செய்தருளுகின்றான் என்பது போதரும். கடவுட் செய்கையின் வியப்பறிதற்கு இதனினும் வேறென்ன சான்று வேண்டும்? இஃதொன்றே அமையும் என்னலாம். இதுகாறும் முதல்வன் செயலின் அருமைப்பாடு புலப்படுத்தப்பட்டது. இனி, அப்பெருமானது நடுவுநிலைமை நாட்டப்படு கின்றமை காணலாகும். இதுநோக்கியே ***அது நிற்க,*** எனப்பட்டது.

ஆன்மா, மனத்தாலும், வாக்காலும், செயலாலும் வினைகளைச் செய்கின்றது இவற்றால் விளையும் வினைகள் புண்ணிய பாவங்களாகின்றன. இவற்றை யெல்லாம், இறைவன் திருவுள்ளத் தடைத்தருளி, அந்தந்த வினைக்குத்தக்கவாறு பயனூட்ட வேண்டியுள்ளது. முறைபிறழாமலும், ஏற்றத்தாழ்வு நிகழாமலும், அந்தந்த வினைப்பயனை அனுபவிப்பதற்கு ஏற்ற காலமும், இடமும் திட்டமாக வகுத்தளிக்கவேண்டி யுள்ளது. பிறப்பைக் கொடுக்கும்போதே வினைப் பயனை உயிருக்கு அறிந்து கூட்டிவைக்க வேண்டி யுள்ளது இவ்வாறெல்லாம் செய்தருளும் இறைவன் வேண்டுதலும் வேண்டாமையும் உடையனல்லனாதலால் ஏதும் தவறு நிகழ்வதில்லை. தன்னலம் இல்லாமையே நடுவுநிலைக்கு அடிப்படை. இறைவன் புரியும் ஐந்-

தொழில்களும் உயிர்களின் நற்கதி பொருட்டே யல்லாமல், தன்நயம் கருதியதே அன்று. ஆன்மாக் களுக்குப் பெத்தகாலத்தில் சுவர்க்காதி போகமும், பதமுத்திகளும், முத்திக்காத்துப் பொருந்திய மும் மலங்களும் அருளால் நீங்குதலாகிய வீடுபேறும் உண்டாக்குதற்குத்தான் அருளாட்டம் அரன் நிகழ்த்து கின்றுறவன். இவ்வாறு புரிதல் உயிர்களின்மேல் சென்ற கருணைபற்றியதேயாம். சிருட்டிமுதலான நாற்றெழில்களும் துன்பம்தருவனபோலக் காணப் படினும் அவையும் அநுக்கிரகம்போலவே அருட் செயலாகும். ***சங்காரம்*** இளைப்பாற்றலேயாம். ***சிருட்டி*** யாவது அவரவர் கன்மம் முழுதும் கழியுமுறைமை யால் மலபாகம் வரச்செய்தலாகும். ***திதி***யாவது கன்மங்கழியுமாறு அவற்றை நுகரச்செய்தலாம். ***மறைப்***பாவது இருவினையொப்பு வரச் செய்து மலங் களைத் தெளித்தலாம். அதாவது மலச்சேட்டை தேயச் செய்தலாம். வினைப்பயனை அனுபவிக்கும்போது அதி- லுள்ள குணமும் குற்றமும் தோன்ருமல் இறைவன் ஆணைமறைத்தலின் திரோபவம் எனப்பட்டது. ***அநுக்கிரக***மாவது பந்தம் விடுவித்தலாம். இப்படியே ஒவ்வொருதொழிலுக்கும் ஒவ்வொரு பயனிருத்தலால் ஐந்தொழிலும் அருட்செயல் ஆகும். தண்டித்தலாகிய நிக்கிரகமும், மறக்கருணையேயாம். இதுபற்றியே "எக் கிரமத்திலுைம் இறை செயல் அருளே" என்பது சித்தியார். நல்வழிப்பட்ட பின்னர் இறைவனின் அருள்கூடிய நடுவுநிலை நன்குணரப்படும். இவை யெல்லாம் நோக்கியே, ***வாக்கும் மனமும் போக்குள தனுவும் சொல்லும் நினைவும் செய்யும் செயலும் நல்லவும் தீயவும் எல்லாம் அறிந்து முறை பிறழாமல்***

*குறைவு நிறைவு இன்ருய்க் காலமும் தேசமும் மாலற வகுத்து நடுவுநின்றருத்தலின் நடுவன் ஆகுதியே* எனலுற்ருர் ஆசிரியர். எல்லாம் அறிதலும் எப்போதும் தெளிவுடனிருத்தலும் சான்ருேர் இயல்பாகும் இதுபற்றியே மன்றின் கண் இருப்பவனுகச் சிவபெருமான் செப்பப்படுகின்ருன். " வழக்கும் அன்று மன்றுடை யோர்க்கே " என்று முடிவு காட்டும் பாடல் இஃதுணர்த்தும் திறத்தது. ஆதலால், *சான்ருேர் செய்தி மான்றிருப்பு இன்றே* எனப் பட்டது. இறைவனினும் " சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் அமைந்து ஒருபால் கோடாத சான்ருேர்" எவருளர் ? இலரே. அறிவுக்குறைபாடு ஐயம் எழுப்புவது. ஆன்மாவுக்கு இக் குறைபாடுள்ளது. இதனுலேயே ஆன்மபோதச் செயல்கள் யாவும் நடுவு நிலையற்ற செயல்களாகித் துன்பத்தை விளைக்கின்றன. இதுகருதியே, *சாலார் செயலே மாலாகுவதே* என்ருர். இது நிற்க,

ஆன்மாக்களைப் புனிதமுறச் செய்தலே சிவத்தினது நோக்கம், சகலராகிய நம்மனோரை அங்ஙனம் புனிதப் படுத்தற் பொருட்டே சிவம் ஆசாரியராய் எழுந்தருளுகின்றது. சிவபெருமானே குருமூர்த்தி யாக—குருமூர்த்தியை வாயிலாக — வந்து நின்று தீக்கைபுரிந்தருளுகின்ருன் என்பது சித்தாந்தம். பக்குவர்க்கு அவரவர் பக்குவத் தகுதிக்கு ஏற்ப ஞான தீக்கை, கிரியாதீக்கைகளை ஏற்றவாறு புரிவர். *மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள். தத்துவங்கள், கலைகள்* எனப்படுவன ஆறு அத்துவாக் களாம். அத்துவா எனினும் வழி எனினும் ஒன்றே. உயிருக்கு இதம் அகிதம் எனப்படும் கன்மம் வருகின்ற

வழியும், உயிர் இறைவனை அடைதற்கு வழியும் என இருதிறப்படும் வழிகள். மந்திரங்களை உச்சரிப்பில் மாறுபடாமல் சொன்னல் புண்ணியம் பேதப்பட்டால் பாவம் பதங்களைப் பிரித்தல் பிரியாமை அறியாது சொன்னல் பாவம்; அறிந்து அவ்வழிச் சொன்னல் புண்ணியம். வன்னம் என்பது அக்கரம். இவற்றைக் குறில், நெடில், அளபெடையறிந்து தானப்படி உச்சரிப்பது புண்ணியம். தவறுபடின் பாவம். இந்த மூன்று வகைகளும் ***சொற் பிரபஞ்ச*** அத்துவா எனப்படும்.

புவனங்களுக்குப் பதியாகிய தெய்வ பூசையால் வருவது புண்ணியம். பூசியாமை பாவம். தத்துவங்கள் எனப்படும் ஞானேந்திரியம், கர்மேந்திரியம், அந்தக் கரணங்களால் பிறருக்குச் செய்யும் நன்மை புண்ணியம் ; தீமை பாவம். நல்வழியில் பொருளைச் செலவிடல் புண்ணியம் ; தீய வழியில் செலவிடுதல் பாவம். பஞ்ச கலைகட்கு அபிமானிகளான பஞ்ச சத்திகளுக்குப் பூஜை செய்தல் புண்ணியம் ; செய்யாமை பாவம். இம் மூன்றும் பொருட் பிரபஞ்ச அத்துவா ஆம். இங்ஙனம் அமைவது கன்மம் வரும் வழியாகும். எனவே பிரபஞ்சமெல்லாம் சொல்லும் பொருளும் என்ற இரண்டில் அடங்கும். எழுத்தாலாவது பதம். பதத்தாலாவது மந்திரம் (சொல்). இது சொற் பிரபஞ்சம். இனி பொருட் பிரபஞ்சமாவது உடலும், உலகமும் இவற்றை ஆக்கும் ஆற்றலும் (சத்தியும்) ஆம். உடல் இந்திரிய அந்தக் கரண தத்துவ வடிவாம். புவனம் பஞ்சபூத வடிவு. சத்தி கலை வடிவாம். இப்படிப்பட்ட ஆறு அத்துவாக்களும் கேவல நிலையிலுள்ள ஆன்மாக்கட்கு

அறிவு விளங்குதற்கு வழியாய் அமையும். இதனுல் அறிவு விளங்கும். இவ்விளக்கம் ஏகதேசம் என உணர்ந்த பிறகு இந்த ஆறத்துவாக்களையும் ஒன்றின் ஒன்று அடங்குமாறு ஒடுக்கும் முறையால் இறைவனை அடைய வழி ஏற்படும். சொல் பதத்திலும், பதம் எழுத்திலும் அடங்கும். இம் மூன்றும் சொற்பிரபஞ்சமாதலால் இது பொருளில் ஒடுங்கும். புவனத்தில் சொல் ஒடுங்கும். புவனம் தத்துவத்தில் ஒடுங்கும். தத்துவம் கலையில் ஒடுங்கும். இங்ஙனம் ஒடுங்கும் போது பேச்சு நின்றுவிடும். உலகம் வெறுக்கப் படும். உடம்பைத்தானன்றென அறியச் செய்யும். இதுவே அருளால் தன்னையும் தலைவனையும் அறியும் முறை ஆகும். கன்மங்கள் யாவும் சகலாவத்தையில் அத்துவா வழியாகவே வருதலால், அத்துவ சுத்தியே சிறந்ததாகும்.

ஆணவ மலமும் ஆகாமிய மலமும் ஞானசத்தியால் ஒழிவன. சஞ்சிதமும் மாயா மலமும் கிரியா சத்தியால் ஒழிவன, பிராரத்தம் அநுபவத்தால் ஒழிவது. கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையால் சஞ்சித கன்மத்துக்குப் பற்றுக்கோடான அத்துவாக்கள் சுத்தமடைகின்றன. இதனுல் ஞானம் பிறக்கும். இதனுல் ஆணவ ஆகாமியங்கள் கெடும். எனவே ஞான சத்தி விருத்தியால் ஆகாமியமும் ஆணவமும் கெடும் எனத் தெரிதல் நேரிதாம். ஆணவ கன்ம மலங்கள் அத்துவாக்களினிடமாகவே தொழிற்பட வேண்டியுள்ளன. ஆகவே அத்துவசுத்தி எய்திஞல் அந்த இரு மலங்களும் சுத்தி எய்தும். ஆதலால் அத்துவ சுத்தி (நீக்கம்) சிறந்ததெனப் படலாயிற்று. இதனுல், கன்மம், அருத்தியறுக்கப்படுவதும்,

குருவாகத் தோன்றியறுக்கப்படுவதும் ஆகி ஒழிவதென்பது புலனும். முடிவாய்க் கூறின், அத்துவ சுத்தியால் சஞ்சித கன்மம் நீங்குகிறது. ஞானம் உதிக்கிறது. ஆணவம் நீங்குகிறது. ஆகாமியம் ஒழிகிறது என நாம் அறிதல் வேண்டும். அத்துவசுத்தி ஆன்ம சுத்தியாவது நம்மால் அறியப் படுதற்கே. ***அத்துவா மெத்தி அடங்காவினைகளும் சுத்தி செய்தனையே*** என ஆசிரியர், ஆசாரியரால் இங்ஙனம் நிகழுமுறையைக் கூறிக்காட்டியுள்ளார். "அநாதி முத்தனாய்ப் பரனாய்" என்னும் சித்தியார்ப் பரபக்கச் செய்யுள் இங்குப் படித்தல் பயன்தரும்.

இனி, இருவினை ஒப்பில் நிகழ்வது யாதென்பது கேட்கப்படுவதாம். கன்ம சமத்துவம் அறிவிடைத் தோன்றிய பின்னர் அருட்பதிவு நிகழும். இச் சத்திநிபாதப் பயனால் கருத்தா ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனி தாங்கிவந்து தீக்ஷையாதி புரிந்தருளி அத்துவ சுத்தி பண்ணி மலத்தைப் போக்குவன்; இரட்சிப்பன். எனவே, இருவினை ஒப்பால் மலம் போதலே முடிந்த பயனும். இதனை நமக்குணர்த்தவே, ***ஒத்த கன்மத்திடை நீங்கினது என்னை?*** என்று கேட்டுத் தெரிவிக்கலானார் ஆசிரியர்.

**ஊங்கு ஊழ்வினைகளும் ஆங்கு அவை அருத்துவது ஆரை?**

செய்யப்பட்ட கர்மங்கள் தீக்ஷையால் சுத்திப் படுவதுண்மையானால் சுத்தப்பட்டபிறகு அக்கன் மங்கள் புசிப்பது யாரை என்பது வினாவாம். சஞ்சிதம் ஆசாரியருடைய ஞானதிருட்டியால் நீங்கும்.

ஆகாமியம் ஆசாரியர்வைத்த ஞான நெறிநிற்றலால் நீங்கும். ஆனால், பிராரத்தம் முகந்துவந்துவிட்டதாத லால் சரீரத்தோடேதான் நீங்கும். "ஏன்ற வினை யுடலோடேகும் இடை ஏறுவினை தோன்றில் அருளே சுடும்" என்பது திருவருட்பயன். "தீங்குறுமாயை சேராவகை வினை திரிவிதத்தால் நீங்கிட" என்பது சிவப்பிரகாசம். "விரிந்த சஞ்சித வினைகள் அன்பில் நாம் விழிக்கவெந்தது; விரும்பும் இப்பிறப்பில் புரிந்த வல்வினை உடலுடன் அகலும் புந்திசேர் அருள்வருவினை போக்கும்" என்பது திருவாதவூரார்க்கு அநுக்கிரகித் தமை கூறுவதாம். இதனால், ஆசாரியருடைய கடாக்ஷத்தினால் மோக்ஷத்தை (ஜீவன் முத்த நிலையை) அடைந்தாலும் பிராரத்தம் புசிக்குமளவும் சரீரம் நிற்கும் என நாம் தெரிதல் கூடும். இதுவே "ஊங்கு .........ஆரை" என்ற வரியால் தெரிவது என்க. "அரும்பருவம் அடைதலுமே ஆசானுகி" என்னும் சித்தியார்ச் செய்யுளும் இங்கு நோக்கற்குரியது.

இறைவன் அத்துவசுத்தி நிகழ்த்திய பின்னரும் பிராரத்துவம் புசிக்கப்பட்டே உடலம் நீங்கும் என்பதைக் ***கருமம் அருத்தும் கடன் அது இன்றும்*** என்றவாக்கியம் உணர்த்துவதாகும். இதனால், ஆன்மா-வைச் சிவம் உடலாகக்கொண்டு புசித்தருளும் என்பது கருத்தாம். இதனால் ஞானவான்கள் உடலம் பிராரத்ததேகமாகாமல் ஞானமயமேயாம் என்பது தேறப்படும். இவர்தம் போகம்யாவும் சிவனே ஏற்கும். "பாதகங்கள் செய்திடினும்" என்னும் உண்மைநெறி விளக்கப்பாடல் ஈண்டைக்குக் கருதத்-தக்கதாகும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் கடாக்ஷம் பெற்ற, மணப்பந்தர்க்கண் உற்ற ஞாதாக்கள்

திருமேனி அடங்கலும் ஞானமயமானமை அறியத் தக்கது. அப்பர் சுவாமிகள் திருமேனி ஞானப் பிழம்பிலே அடைவுற்றது. பட்டினத்தார் வரலாறும் இதுகாட்டும். திருவாதவூரர் ஞானகாசத்தே பொருந்தி யமையும் கேட்கப்படுவதேயாம். இவையெல்லாம் பிராரத்துவநிலைமை எத்தகையதாய்க் கழியும் ஞானி-யர்க்கென்பதைக் காட்டுவனவே. இங்ஙனம், ஞானி யர் போகமனைத்தையும் பிராரத்துவப்புசிப்பிலே சிவ போகமாக்கியருளுதலால் சிவபெருமானைத் ***தரும கருத்தா*** எனல் தகுமன்றே! இதனையே உணர்த்த வந்தது ***தருமம் புரத்தல் பெருமையது அன்றே!*** என்ற அடி என்னலாம்.

இனி, சிவமே, ஸ்ரீ மெய்கண்ட ஞானசாரியராகித் தமக்'குப் பிறப்பறுக்கும்' வழிகாட்டியருளிமையால் ஆசிரியர் ***கண்ணின் உள்மணிய*** என விளிக்கின்று ராவர். உள்மணியில்லாக் கண்ணுக்கு விளக்கால் பயனில்லை என்பது யாவரும் அறிந்த செய்தியே. நம்மை நினைக்கவைத்துத் தானும் நினைக்கிறுன் ஈசன். ''நினையுமா நினையே'' என்பர் ஞானிகள். ஆதலால், தோன்றியநாள் தொடங்கி நினைப்பவர்கள் மனந் தன்னுள் நினைவே தானய் நிற்கின்றுன் பரமன் என்பார் ***கருத்தினுள் கருத்த*** என்றுர். அறிவுக் கறிவாய் விளங்குமவன் இறைவனே என்பது இதனுல் தெரிவதாம். ***வெண்ணெய் வேந்த! மெய்கண்ட தேவ!*** அரசர்போலும் தண்டித்து ஆண்டவனகி ஆட் கொண்டருளிய பெருந்தகைமை நோக்கியே ஆசிரியர் இங்ஙனம் கூறலுற்றுர் என்னலாம். ***வேந்த! தேவ!*** என்னும் சொற்கள் இவ்வுண்மை புலப்படுத்துவன வாகும்.

**இடர்ப்படு குரம்பையுள் இருத்தி துடைப்பது இல்லா**
**அருள் தோன்றிடச் சொல்லே.**

உடம்பு துன்புக்கிருப்பிடம். இதனுள் உள்ளது ஆன்மா. உயிர் துன்பாநுபவம் ஒழியவேண்டுமாயின் ஆசாரியனுடைய அத்துவ சுத்தியாதிகள் நிகழ வேண்டும். அங்ஙனம் நிகழாக்கால் பிராரத்துவ அநு-பவம் ஆகாமியத்தை விளைக்கும். சஞ்சிதம் பெருகும். பிறப்பு அறுது. முத்தி உறுது. ஆதலால், பிராரத்துவ அநுபவம் சிவாநுபவமாகும்படி இறைவன் அருள் புரியவேண்டுமென்பதைத் தமதாசிரியர் திருமுன்னர் நூலாசிரியர் இதன் மூலம் விண்ணப்பிக்கலுற்றுர் என்க! *துடைப்பது இல்லா அருள்* என்றமையால் சிவமே யாவகைப் போகத்தையும் ஏன்றுகொண்டு, துன்பமில்லாப் பரபோகமாக்கியருளும் என்பது புலப்படுத்தப்பட்டது. பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தாளில் இதுவே நாமும் நாடோறும் விண்ணபிக்கத் தகுவதாம். இப்பதினுரும் பாடலை நாடோறும் ஓதுதல் நமக்கு உலகபாதை நீங்க வழிசெய்யும் என்பது உறுதி.

---

## செய்யுள் — 17

நேரிசை வெண்பா

*திருவருள்பாலிப்பு முறை*

**சொல்தொழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவும் நிற்செயல்கள்**
**மற்றவர்கள் நின்நோக்கின் மாய்ந்தவுயிர்க்—குற்றங்**
**கொளித்தியாங் கைய உயர்வெண்ணெய் நல்லூர்க்**
**குளித்தமதுக் கொன்றையெங் கோ.**

## பொழிப்புரை

*எல்லா ஆன்மாக்களும் தேவரீருக்கு அடிமையாக இருந்தும், சிலர் மாத்திரம் திருவருளைப் பெறத்தக்க அடிமைத் திறம் கொடுத்தருளினீர். மற்றவர்களும் உம்மால் செயற்பட்டு நிற்பவர்களேயாவர். இங்ஙன மிருந்தும், தேவரீர் திருக்கண் சாத்தப் பெறுதலால் செயலற்று நின்ற ஆன்மாக்களிடத்திலே அநுக்கிரகம் செய்து பிரகாசிக்கின்றதும், மற்றவர்களிடத்திலே கூடி நிற்கும்போதே மறைந்து நிற்பதும், ஆகிய இம் முறைமையை, அடியேனுக்குச் சுவாமியே! சிறப்பினுல் மேம்பட்ட திருவெண்ணெய்நல்லூரிலே மதுக்களினுலே மூழுகப்பட்ட கொன்றை மாலையைச் சாத்தி எழுந்தருளி யிருக்கும் எமது கருத்தாவே! சொல்லியருளவேணும்.*

## கருத்து

எல்லா உயிர்களும் சிவபெருமானுக்கு அடிமை-யாயினும், ஜீவன் முத்தரிடத்தே அவன் பிரகாசிக்கிருன். பெத்தரிடத்தே மறைந்திருக்கிருன். இது எதனுல் விளைவது ?

## விஞ விளக்கம்

பெத்தம், முத்தி என்பன ஆன்மாக்களின் இருவகை நிலை. எல்லா உயிர்களும் இறைவனுக்குப் பொதுவகையால் அடிமையேயாம். ஆனுல் முதல்வன் முத்தான்மாக்கட்கு வெளிப்பட்டு நிற்கிருன். பெத்தான்மாக்கட்கு மறைந்து நிற்கிருன். இப்படி யிருப்பது என்ன முறைமை ?

## விடைச் சுருக்கம்

எல்லா உயிர்களும் இறைவனுக்கு அடிமையே. அப்படியிருந்தும் முத்தான்மாக்கள் கன்ம விடுதலை

பெற்று எல்லாம் சிவம் எனவே இவ்வுலகில் வாழ்பவர். இக் கன்ம நீக்கத்தால் சிவம் அவர்களிடம் தயிரில் நெய்போல் தோன்றுகின்றான். ஆண்டவனடிமை நாமென அறியாதே கன்மச் சுழற்சியுட்பட்டிருக்கும் பெத்தான்மாக்களுக்குப் பாலில் நெய்போல மறைந்து நின்றுபகரிக்கிறான் இறைவன். எனவே, இந் நிகழ்ச்சி ஆன்மாக்களின் பக்குவ அபக்குவ முறைமையால் விளைவதாகும். பெத்தத்தில் இறைவன் எப்படி ஆன்மாவுள் மறைந்து நிற்கின்றானோ அப்படியே முத்தியில் ஆன்மா இறைவனுள் அழுந்தி நிற்க வேண்டும் என்பது இதனாலறியப்படும்.

## விளக்கம்

ஆன்மாக்கள் யாவும் இறைவற்கு அடிமையே. "கடவுள் நீ யாங்கள் அடியேம்" என்பர் தாயுமானார். ஆனால் சில ஆன்மாக்களே உய்யும் நெறியுபாயம் உணர்ந்து இறைவனைத் தலைப்படுகின்றன. இதற்குக் காரணம், அவ்வுயிர்கள் படிப்படியாக நாம் அடிமை என்ற உணர்வடைந்துள்ளமைதான். ஒரே குளத்தி-லிருப்பினும், பக்குவமுற்ற தாமரை மலர்ந்து அழகடைகிறது. ஏனைய பக்குவமுற முயல்கின்றன. ஆன்ம அறிவு பஞ்சேந்திரியங்களிலும் பரவிஇருப் பினும் கண்ணிந்திரியத்தினிடம் விசேடித்து நிற்கிறது. தயிரில் வெண்ணெய் வெளியே தனிப்பட்டு நிறைந் திருக்கிறது. இவ்வாறே, முதல்வன் பக்குவ முற்ற ஆன்மாக்களைத் தொழும்பு நெறியிலே ஆட்படுத்திக் காட்சியளிக்கின்றானவன். இதனையே, ***தொழும்பு கொள்ள நீ சூழ்ந்ததும்*** என்ற இடம் காட்டும். பெத்தநிலையில் ஆன்மாக்களிடம் இறைவன் மறைந்து

நிற்கின்றுன். இது பாலில் நெய் மறைந்திருத்தல் போலாகும். பெத்தான்மாக்கட்கு இன்னம் பக்குவ முதிர்வு ஏற்படாமையால் அம்முதிர்வு நிகழுமட்டும் மறைந்தே அவைகளைத்துய்ப்பித்துத் தெளிவடைவிக் கின்றுன். இதனையே. ***நின்செயல்கள் மற்றவர்கள்*** என்றுர். இதனுல் பெத்தான்மாக்களை இறைவன் உதாசினமாக விட்டு நீங்கி விடவில்லை என்பது போதரும். இவர்கள் அருள்வழி நில்லாமையால் முதல்வனை அறிந்து தொழும்புட்பட்டிலர். ஆகவே இறைவன் அருட்கண்ணுற் காண்பார்க்குப் பிரகா சித்தும், அங்ஙனமல்லாதார்க்குத் திரைக்குள் இருப்பது போல மறைந்து நின்றும் முறைமை செய்கின்றுன் என்பது தெளிவாம். இதனையே, ***நின்நோக்கின் மாய்ந்த உயிர்க்கு அங்கு உற்று*** எனவும். ***ஒளித்தி ஆங்கு*** எனவும் ஓதியுள் ளார் ஆசிரியர். பூமலர்ந்த வழி நாற்றம் வெளிப்பட்டுக் காணும்; மலராவழி நாற்றம் தோன்றப் பெறுது என்பது யாவரும் அறிந்ததேயாம். பக்குவமடைந்த உயிர்கள் அவனருளே கண்ணுகக் காணல் இயலும் என்பர். ஒருவர் கண்ணுல் ஒருவர் காணும் உலகியலை "நின் கண்ணுல் காண்பென் மன்" எனவும், "நின் கண்ணுகு என்கண்" எனவும் கலித்தொகை கூறு மாற்றுலறியலாம். இவ்வாறு எல்லா உயிர்கட்கும் இறைவன் ஆண்டவனுயிருத்தல் பற்றி ***ஐய!*** என விளிக்கலுற்றுர் ஆசிரியர். ஏனை ஊர்கட்கு இல்லாத உயர்ந்த சிறப்பு இத் திருவெண்ணெய் நல்லூர்க்கு ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுரால் உளதாதலை உணர்த்தும் பொருட்டே ***உயர் வெண்ணெய் நல்லூர்*** என்றுர். இப்பெருமான் சிவ பெருமானேயாதல்

தோற்றுவித்தற் பொருட்டே *கொன்றை எம்கோ* எனலானார். சிவத்துக் குரிய அடையாள மாலை கொன்றையே யாவது யாவருமறிவர். திருவடி யடைந்தார் சிவபோகம் துய்த்துச் சுகித்திருத்தலைக் *குளித்த மது* எனக் கூறிக்காட்டியுள்ளார். மதுச் சொல் ஈண்டுத் தேனையும் தேனீயையும் குறிக்கும். மாலையை அடைந்த மதுகரங்கள் தேனுண்டு தேக் கெறிந்து அசைவற அமர்ந்துள்ளன. அங்ஙன மடையப் பெறுதவை வறிதே வாடித் திரிகின்றன. இச் செய்தி, பக்குவ அபக்குவ ஆன்மநிலைக் கேற்பக் கூறப்பட்டிருத்தல் ஒரு நயம். " தன்னுணரும் நேசத்தர் தம்பால் நிகழும் ததி நெய் போல், பாசத் தார்க்கின்றும்பதி " என்பது சிவஞான போதம். " பிரைசேர் பாலில் நெய் போல " என்பது திருவாசகம். " விறகில் தீயினன் பாலிற் படு நெய் போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான் " என்பது தேவாரம். தம்பால் தெளிவு உண்டாக்கியருள வேண்டுமென்பார் *சொல்* எனக்கூறித் தொடங்கினர் ஆசிரியர் இப்பாடலை.

---

## செய்யுள் – 18

நேரிசை ஆசிரியம்

*சிவனுதவியதிசயப் பேறு*

**கோலங் கொண்ட வாறுண ராதே**
**ஞாலங் காவலன் யானெனக் கொளீஇப்**
**பொய்யை மெய்யெனப் புகன்று வையத்**
**தோடாப் பூட்கை நாடி நாடா**
**5 என்னுட் கரந்தென் பின்வந் தருளி**

என்னையும் தன்னையும் அறிவின் றியற்றும்
என்னது யானெனும் அகந்தையுங் கண்டு
யாவர் யாவையும் யாங்கணும் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
10 மிக்க போகம் விதியால் விளைத்திங்கு

எற்பணி யாளாய் எனைப்பிரி யாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்
டென்வழி நின்றனன் எந்தை அன்றே !
அருள்மிக உடைமையின் அருட்டுறை வந்து
15 பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை யாதலும்

கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் ஞகித்
தன்னதும் தானுமாய் என்னையின் ருக்கித்
20 தன்னையும் என்னையும் தந்து தனது

செய்யா மையும் எனதுசெய லின்மையும்
எம்மான் காட்டி யெய்தல்
அம்மா ! எனக்கே அதிசயம் தருமே.

## பொழிப்புரை

பெத்த நிலை —

*துன்பத்துக்கு ஏதுவான இச் சரீரத்தை அடைந்தமை குறித்து அறியாமல் ‘நாமே இவ்வுலகத்துக்கு மன்னன்’ என்று தருக்கால் எண்ணி, பொய்யான இந்த உடம்பையும் உலகத்தையும் உண்மையானவை என்று சொல்லி, உலக வாழ்க்கையையே மேற்கோளாக மதித்து, நமக்கு ஒரு முதல்வன் உண்டென்று மதிக்காத எனக்குள்ளே மறைந்து* ***நின்று*** —

நான் செய்யும் தொழிலுக்கெல்லாம் உடனாக **இருந்து** — எனது நிலைமை அடிமையாவது எனவும், தமது நிலைமை தலைவராவது எனவும் அறியாதபடி செய்கின்ற 'யான்', 'எனது' என்கிற அகந்தையும் **கண்டு** —

உயர்திணையும் அஃறிணையுமாகிய எல்லாப் பிறப்புகளிலும் மூவுலகங்களிலும் என்னோடு ஒக்கச் **சென்று**-நான் போய்ப் பிறக்கும் இடங்களிலெல்லாம் தாமும் **புகுந்து**—நான்விட்டுப் பெயரும்போதெல்லாம் தாமும் உடன் **பெயர்ந்து**—அநேகவிதமான போகங்களையும் எனக்குள்ள விதியின்படி **உண்டாக்கி**—

இப் பிறப்பில் என்னை ஊட்டி உறக்கி நிற்கும் பண்ணை ஆளும் **ஆகி** என்னைவிட்டு எப்போதும் **நீங்காமல்**—

நான் பிறந்தும் இறந்தும் போக்குவரவு செய்கிற நாடகத்தைப் **பார்த்து**—

தன் முதன்மையும் விட்டு என் வசத்திலே **நின்றார்** எனது சுவாமியாய் உள்ளவர். இஃது ஆச்சரியம்!

## முத்தி நிலை —

தாம் மிகவும் அருளுடையவராதலால், திருவெண்ணெய்நல்லூரிலே—திருப்படை விட்டிலே—திருவவதாரம் **செய்தருளி,**—சிவாநுபவப் பொருள் மிகுதியாக நின்று அருளுதலையும், அது பிரபஞ்சப் பொய்யைக் கடிந்து தீர்க்கும் வழக்கையும், கண்கூடாகக் காணுமாறு **காட்டியருளி**—கடல்சூழ்ந்த உலகினர் எவரும் அறியும் வண்ணம் மெய்கண்டநாதன் என்ற திருநாமத்தையும் **பரப்பியருளி**—தம்முடைய பேரறிவினுள் என்னுடைய

*சிற்றறிவை **அடக்கிக்கொண்டு**—தன் செயலே மேம்படுமாறு, தம்முடைய அருளும் தாமுமாய் என்னையும் எனது ஞானத் தோற்றத்தையும் **அடக்கி**—தான் ஒரு முதல் உண்டு என்பது கெடாமல் எனக்குப் புலப்பட **அறிவித்து**—தாம் எல்லாவற்றையும் செய்வித்தும் தாம் ஒன்றிலும் சுட்டியறியாமல தோய்வற நிற்கும் முறைமையையும், நான் எல்லாம் செய்து நின்றும் என்னால் ஒன்றும் முடியாதென என்னும் செயல் அறுதியையும் தலைவராகிய தேவரீர் எனக்குத் தெரியப்படுத்தி நின்ற முறையினைக் காணின், எனக்கு மிகவும் ஆச்சரியம் விளைகின்றது.*

## கருத்து

பரமன். ஆன்மாக்களுக்குப் பெத்தத்தில் மறைந்து நின்று காரியப்படுத்துகின்றானவன்; முத்தியில் பிரகாசித்து நின்று உபகரிக்கின்றானவன்.

## விளக்கம்

இந்நூலாசிரியர் இதுகாறும் வினாமுகமாகப் பாசம் பற்றிய ஐயப்பாடுகளை யெல்லாம் நம்மனோர்க்கு நீங்குமாறு அருளிச் செய்தனர். இந்தப் பதினெட்டாம் பாடலிலிருந்து இருபதாம் செய்யுளளவும் தமது ஞானாசாரியராகிய ஸ்ரீ மெய்கண்ட நாதர் தமக்கருளிச் செய்து ஆட்கொண்ட திறத்தினைச் சொல்லிச் சொல்லிப் பாராட்டிப் பரவுகின்றார். பரமாசாரியன் பண்ணு முதவிக்கு ஈடாக அவரைப் பலபடியாகப் பரவுதலன்றி வேறெதுவும் நம்மால் செய்யலாகாது. “ கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டு மாரிமாட்டு என் ஆற்றுங் கொல்லோ உலகு ” என்னுங் குறட்கருத்து இங்கு

நினைவு கூர்தல் தக்கதாகும். திருவாதவூரராதியோர் இங்ஙனமே அழுதும் தொழுதும் அரற்றியும் பரவியுமே நமக்குவழி காட்டிப் போந்துளர். நம்கடமையும் இவ்வாறு ஒழுகுதலேயாம்.

நாம் இப்போது மானிடப் பிறப்பு எய்தியுள்ளோம். இப் பிறப்பு நமக்கு ***எப்படி*** வந்தது என்பது குறித்தும் நாம் சிந்திக்க காணோம். ***எதற்கு*** இப் பிறப்பு நேர்ந்துள தெனவும் நினைக்கின்றோமில்லை. இவ்விரண்டு விஷயங்களையும் நாம் ஒவ்வொருவரும் சிந்திப்போமாயின், உண்மை விளங்கும். இவ்வுடம்பு நாமே உண்டாக்கிக் கொண்டதன்று. அப்படி நாமே உண்டாக்கிக் கொள்ளக் கூடுமாயின் எல்லோருமே நல்ல தோற்றமுடைய உடம்புகளை ஆக்கிக் கொண்டிருப்போம். கூனும் குறளும் குருடும் செவிடும் முடமும் பொருந்திய பல்வேறுபட்ட உடம்புகளை ஆக்கிக்கொண்டிருக்க மாட்டோம். நம்மால் நம் உடம்புகள் ஆக்கிக்கொள்ளப்படாமையினால் முதல்வனால் இவ் வுடம்புகளாக்கி யளிக்கப்பட்டன எனத் தெரியலாம். அம் முதல்வனும் பல்வேறு திறப்பட ஆக்கியளித்திருப்பதற்குக் காரணம் இருக்கவேண்டும் அதுதான் நம்முடைய மல மறைப்புக் குட்பட்ட அறிவுக் குறைபாட்டினையுடைய விருப்பு வெறுப்பெனும் ***கன்மம்*** எனப்படுவது. கன்ம பேதத்தினால் சன்ம பேதங்களும் விளைகின்றன. இதனால் நமக்குப் பிறப்பு எப்படி வந்ததென்பது ஒருவாறு புலப்படக்கூடும். இப் பிறப்பினை நாம் எடுத்திருப்பது, உண்டு உடுத்து, கண்டு, களித்து, உறங்கி, விழித்து, துன்பும், இன்பும் மாறி மாறி யடையப் பெற்றுச் சோர்வுற்று மேலும் மேலும் வினை

பெருக்கிக்கொண்டு பிறவிப் பெருங்கடலில் வீழ்வ தற்காக அன்று. உண்மையுணர்ந்து சுட்டறிவும் சிற்-றறிவுங் கழன்று மும்மலமும் கழுவி அன்பரோடு மருவி இம்மைக்கண்ணே சிவபோகம் துய்க்கத் தொடங்கி அரன் கழலில் இரண்டற அடைந்தடங்குதற் பொருட்டேயாகும். ஞான நூல்களும், நீதி நூல்களும், சமயபோதங்களும், திருமடங்களும், சிவாலயங்களும், ஆசாரிய பரம்பரைகளும் மேலதை நமக்கு அடிக்கடி நினைவூட்டுதற் பொருட்டே அமைக்கப்பட்டுள. இவை யொன்றும் கருதாமே கண்டதே காட்சி கொண்டதே கோலம் எனத்திரிதல் வாழ்க்கைக் குறிக்கோளாகாது. ஆறிய சிந்தை கொண்டு அமைதியாக எண்ணிப்பார்த் தால் நமது வரவு செலவுகள் நமக்கே புலப்படும். இங்ஙனம் எண்ணிப் பாராதிருத்தல் இழுக்குடை வாழ்க்கையாம். இதனையே, ***கோலங்கொண்டவாறு உணராதே*** என்ற கூற்றால் நமக்குத் தெளிவுறுத்து கின்றார் இவ்வாசிரியர். முத்தியின்போது நீங்குவ தாகிய தூலவுடல் இறைவனால் முதற்கண் ஆக்கி யளிக்கப்படுதல் பற்றிக் ***கோலம்*** என்றார். கோலுதல் செய்தலாம். எனவே, கோலம் என்பது கோலப்பட்ட தென்னும் பொருட்டாய் முதலுடலை உணர்த்தும். கோலம் என்னும் சொல்லில் 'அம்' செயப்படுபொருள் விகுதியாகக் கொள்ளத்தக்கதாகும். இங்ஙனம் முதல் வனால் முதற்கண் ஆக்கப்பட்ட உடம்பினை நாம் கொள்ளுகிறோமாதலால் ***கொண்ட*** என்றார். கொடுத்-தவன் இறைவன். கொண்டவர் ஆன்மாக்கள். ***ஆறு*** என்ற சொல் நம்வினைவந்த வழியை உணர்த்தும். ***உணராதே*** என்ற சொல் நாம் நம் கடமையை மறந்-தொழுகுதலை நினைப்பூட்டும் பெற்றித்தாம். இவ்வாறு சொல்லடைவு செய்துள்ளமை வியக்கத்தக்கது.

'வந்தவாறு ஏதோ" என்பதைச் சிந்தை செய்யாப் பிழையோடுநாம் செருக்குற்றுத்திரிவதும் பெரும் பிழையாம். இதனை இரண்டாம் அடி சொல்லத் தொடங்குகிறது. இதனை உள்ளத்துக்கொண்டு முதல் வரியின் பொருளைக் காண்போமாயின் வேறு ஒரு பொருளும் புராண முறையில் கொள்ளுதல் கூடும். அதாவது, (கோலம் = வராகம்) என்னும் பொருளை வைத்துக்கொண்டால், திருமால் வராகவடிவம் கொண்டும் சிவத்தினது திருவடியை அடையமாட்டாமை உணரப்படும். உணரமாட்டாமைக்குக் காரணம் தற்செருக்கேயாம். தற்செருக்கு நீங்கப் பெற்ற பின்னர் திருவடியிலே அருச்சிக்கவும் முடிந்தது திருமாலுக்கு. இப்புராணவரலாற்றாலும் செருக்கு உதவாதெனத் தெரியலாம். அப்படியும், அறியமாட்டாமல் "நானே உலகின் தலைவன்" என்று தன்னையே பெரிதாகமதித்தல் அறிவை மழுக்கிவிடும். "நானே முதல்வன்" என்றுதான் மாலோனும் கருதிப் பங்கப்பட்டனன். இச்செருக்குறாமல் சிவமே தலைவன், நான் அடியன் என்று கருதும் தன்மைதான் வேண்டுவதாகும். இதனை உணர்த்துவதே ***ஞாலம் காவலன் யான் எனக் கொளீஇ*** என்ற அடி. நம்மைநாமே தெரிந்து கொள்ளாதிருத்தல் ***அறிவுக் குறைவின்*** விளைவாம். இதன் விளைவு தற்போதச் ***செருக்கா***கும். இவற்றால் விளைவது ***மயக்கம்,*** அதாவது பொய்யை மெய்யெனக் கொள்ளுதலும் சொல்லுதலும் ஆம். ஆகவே அழியுமியல்பினையுடைய உடம்பையும் பிரபஞ்சத்தையும் அழியாப் பொருள் என நாம் எண்ண நேரிடுகிறோம். இதனை "மெய்யினை மெய்யெனும் எனக்கு அருள் செய்யாமல் மெய்யினை (உடம்பை)

பொய் என்பவர்க்கு அருள் செய்கிறீரே" என்று விகடமாகக் கேட்டறிவுறுத்துவர் சிவப்பிரகாசரும். இச் செய்தி இங்குப் ***பொய்யை மெய்யெனப் புகன்று*** என்பதாலறியப்படும்.

மற்றும், இவ்வுலக வாழ்வே சதமெனா எண்ணி, நிலையாமை பற்றி ஒரு சிறிதும் நினையாமே பிரபஞ்ச வாழ்வில் அழுந்திநிற்கும் முயற்சியே நாம் புரிகின்றோம். நமக்கு ஒரு தலைவன் உளன்; அவன் கருத்தின் வழி நாம் ஒழுகவேண்டும் என்று நாம் ஒரு சிறிதும் எண்ணி நடப்பதில்லை. இந் நடக்கை நமது ***விவேக-மின்மை***யைக் காட்டும். "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதே அறிவு" ஆகும். இவ்வாறெல்லாம் நாம் தலைவனை மறந்து நடக்கையிலும் நம்முள் இறைவன் மறைந்தே உறைகின்றான். அவன் எப்போதும் விட்டு நீங்குவதில்லை. இதனை, ***வையத்து ஓடாப் பூட்கை நாடி நாடா என்னுள் கரந்து*** என்ற இடம் தெரிவிக்-கின்றது.

இறைவன், ஆன்மாவின் பெத்தநிலையில் உயிர் புரியும் செயல்கட்கெல்லாம் உடனாய் நிற்பன். இங்ஙனம் நில்லாக்கால் உயிர் உண்மை யநுபவம் உண்டாகப் பெற்றுப பற்றறுகையைப் பற்ற இயலாது. ஆகையால், ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் நிகழும் போது முதல்வனுடைய அம் மூன்றும் உடன் நிகழ்கின்றது. அங்ஙனம் நிகழாக்கால் காணுமுப காரம் நடைபெறாது. ஆன்மாவினிடம் உள்ள அறிவு இச்சை செயல்கள் நிகழ்வதற்குத் துணை வேண்டப் படும். கண்ணுக்கு ஒளியிருப்பினும் சூரியனுடைய

துணை வேண்டப்படுவது போன்றதே இச்செயல். இந்தத் துணையும் அகத்துணை புறத்துணை என இரண்டு வகைப்படும். புறத்துணை தூல சூக்கும உடம்பு முதலானவைகளாம். அகத்துணை முதல்வனுடைய அறிவாதிகள் மூன்றுமாம். உயிரறிவுக்குத் தானே விளங்கும் தன்மை இல்லை, ஆதலால், கேவல நிலை முதலே மலச்சேட்டைக்கு ஆற்றுமல் உயிர்வருந்தும் பொழுதும் இறைவன் உடன் நிற்கிருன். துணையை உபயோகப்படுத்திக் கொள்ளும் சுதந்திரம் உயிருக்குண்டு, " தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தாற்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது " என்னும் தேவருரையினும் சேர்தலாகிய தொழில் உயிரினுடைய தெனப் புகலப்பட்டிருத்தல் காணலாம். துணையைக் கொண்டு காணும் தன்மை கண்ணுக்குண்டு. இவ்வாறேயுள்ளது உயிரின் சுதந்திரமும். இந்தச் சுதந்தரம் இருப்பதால் உயிரானது நன்னெறியில் நடக்க முயலவேண்டும். தீயநெறியிற் படரின் உடன் நிற்கும் இறைவன் தண்டனைகளைச் செய்து திருத்து-கின்ருன். நன்னெறியறிதற்பொருட்டே வேதாகமங்கள் இறைவனல் புறத்துணையாகத் தரப்பட்டுள. அவ்வழி நடத்தற்காகவே தனுகரணுதிகளும் முதல்வனல் புறத்துணையாகத்தரப்பட்டுள. புறத்துணையாய் நின்று காட்டுதலும் அகத்துணையாய் நின்று காணுதலும்ஆகிய இறைவனுதவியை நேரிய நெறியில் பயன்படுத்திக் கொள்வதே உயிருக்குள்ள சுதந்திரம் "நான் பாவியன் ஆனுல் உன்னை நல்காய் எனலாமே" என்பது ***திரு வாசகம்***. நெறியும் நெருஞ்சிலும் ஆகிய இரண்டு முள்ள இடத்தே நடக்கையில் நெறியிற்செல்லுதல் செல்வான் கடமையாம். நெறிதவறின் நெருஞ்சில்

குத்துதல் இயல்பாம். இதனை, "நெறியைப்படைத்தான் நெருஞ்சில் படைத்தான்" என்ற *திருமந்திரப்* பாடல் உணர்த்தும். எனவே பெத்தநிலையில் இறைவன் கரந்துள் நின்று உதவுதல் நாம் உணர்தல் ஒரு தலையாக வேண்டுவதாம். இங்ஙனம் இறைவன் உதவுதலை *என் பின் வந்தருளி* என்ற இப்பாட்டின் வரி உணர்த்தும்

இவ்வுணர்ச்சியற்று உயிர் நடக்கும்போது யான் எனது என்னும் செருக்குறும். இச்செருக்கினையும் இறைவன் கண்டு கொண்டிருந்து தண்டிக்கின்ருறுவன். இவ்வாறு செய்தல் அரசன் செயலை நிகர்க்கும். ஆகையால் நாம் நம்மை அடிமை எனவும், இறைவனைத், தலைவன் எனவும் தெளிய அறிவாலறிந் தொழுகவேண்டும். இது பற்றியே, ***என்னையும் தன்னையும் அறிவின்று இயற்றும் என்னது யான் எனும் அகந்தையும் கண்டு*** என இப்பாடல் வரி கூறுகின்றது.

உயிர், தான் ஈட்டிய வினைக்கீடாக உடம்பினைப் பெறுகிறது. அது பூமியாதி உலகங்களிலும் செல்லுகிறது. உயர்திணை அஃறிணை என்னும் இருதிறப் பிறப்புகளையும் எய்துகின்றது. இப்படி உயிர் எங்குச் செல்லினும் எப்பிறப்புட் செல்லினும் குழந்தை ஓடும் இடமெல்லாம் அதன் நற்ருய் உடன் சேறல் போல இறைவனும் உடன் போதருகின்ருறுவன். குழந்தையின் பாதுகாப்புக்கருதியே தாயின் ஓட்டம் நிகழ்கிறது. தாய்க்கேதும் அவ்வோட்டம் பயன்தராது. அவ்வாறே இறைவன் தொடருதலும் நிகழ்கின்றது. இதனுல் நன்மை உயிருக்கேயாம். இங்ஙனம் முதல்

வன் தொடராக்கால் கேடுறுதல் திண்ணம். ஆனது பற்றியே, இவ்வாசிரியர், ***யாவர் யாவையும் யாங் கணும் சென்று*** எனலானுர்

ஆன்மா எப்பிறவியுட்புகினும் ஆங்கெல்லாம் உடனுய் நிற்கும் இறைவனும் போதரும். உடலை விட்டு உயிர் நீங்குங் காலத்தெல்லாம் தானும் உடன் நீங்கும். அவ்வவ்வுடல் தோறும் உயிர் தங்கியிருக்கை யில் அதன் விருப்பு வெறுப்புக் கேற்ப இன்ப துன்ப போகங்களை முறைமையின்படி உண்டாக்கி ஊட்டு வன் இறைவன். இப்படிச் செய்யும் நிலைமையை நோக்கிஞல், இறைவன் நமக்கு ஒரு பணியாளன் என்றே தோன்றும். "கண்ணன் என் வேலையாள்" என்று பாரதியார் கூறுவதும் இம் மரபுபற்றியேயாம். இப்படி யெல்லாம் உயிரினைவிட்டு நீங்காமல் பிறத்தல் இருத்தல் இறத்தல்களைப்புரியும் உயிரின் நாடகத்தை இறைவன் உடனிருந்து காண்கின்ருன். அங்ஙனம் காணும்போது "ஆட்டக்கால சட்டத்தை அனு சரிப்பது" காண்போர் கடமையாதல் போல இறை வன் தன் முதன்மையை விட்டு உயிரின் வசமாகவே நிற்கின்ருன். இங்ஙனம் அவன் பெத்தத்தில் நம்முடன் நம் வழிப்பட்டு நிற்பினும் அவன் இறைவனே; நாம் அடிமையே. இவையெல்லாம், ***புக்குழிப்புக்கு— பெயர்த்துழிப் பெயர்ந்து—மிக்க போகம் விதியால் விளைத்து — இங்கு என்பணி ஆள் ஆய் — எனைப் பிரியாதே— "ஓடிமீள்க" என ஆடல் பார்த்திட்டு என்வழி நின்றனன்; எந்தை அன்றே*** என்ற வரிக ளால் விளங்கும். நம்மனேர்க் கெல்லாம் உற்றதந்தை யாதலின் இங்ஙனம் புரிகின்ருனென்பது தோன்ற ***எந்தை*** என்ருர். இவ்வாறெல்லாம் உயிர் அப் பெரு

மானே உடன் உழைக்கவைக்கும் மடமையுடைமை குறித்து ***அன்றே*** என இரங்கிக் கூறலாயினர் ஆசிரியர். இதுவரை ஆன்மாவின் ***பெத்த நிலே*** முறைமை கூறப் பட்டது. ஸ்ரீ மெய்கண்ட சிவம் தன்பொருட்டு இங்ஙனமெல்லாம் எண்ணில் காலம் இயக்கி வந்த தன்மையை இவ்வாசிரியர் உள்ளுருகி நினேந்து ஆராமை மீதூர அலறிக் கூறுவது போல இவ்வரிகளே யாத்துள்ளமை, நாமும் கருதி நாளும் ஓதி ஓதி உளமுருகுதற் குரித்தாகும் என்க !

இனிச் சிவபெருமான், இவ்வொருபிறப்பிலே ஞானசாரியராகிப் போந்தருளி முத்தியின்பம் பயத்தற் பொருட்டுத் தன்னேப் பக்குவஞ் செய்து ஆட்கொண்ட பான்மையைச் சிலவரிகளால் செப்பி வியக்கின்றுர் நூலாசிரியர்.

உயிர்களின் மேல் என்றும் கருணே உடையவன் இறைவன். அவன் ஒன்ருகவும் வேருகவும் உடனுகவும் நின்று உயிர்களேப் பக்குவ நெறியிற் செலுத்திப் பக்குவமுற்றதும் பரமாசாரியனுகிக் காட்சி யும் தீக்ஷையும் ஞானேபதேசமும் அளித்துத் தன்னுள் அடங்கச் செய்து தானே முன்னின்று நடத்தித் தாளிணேயிற் சேர்த்துக் கொள்ளுகின்றுன். இப்படிப் பரமன் புரியாக்கால் உயிருக்கு ஓய்வு ஏது? இன்பு ஏது? ஆகலால் முதல்வனே நமக்கு எல்லாச்சுற்றமுமாவான். இங்ஙனம் அவன் அருளு டைமையால் ஆற்றுகின்றுன். அவ்வருளுக்கு ஓர் எல்லே இல்லே. எல்லேயற்ற அருளே எல்லேயற்ற இன்பம் நல்கும். இது குறித்தே, ***அருள் மிக உடை-மையின்*** என்றுர். அருளியல்பு இறைவனின் நீங்காத்

தன்மையாதலின் ***உடைமையின்*** என்றுள்ளார். இதன்மேல் சிவம், தன்னை ஆட்கோடற்குப் புரிந்தருளிய செயல்களை முறையே புகல்கின்றார். முதற்கண் திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியமை கூறியுள்ளார். அருட்டுறை என்னும் பேருக்கேற்ப இங்ஙனம் நிகழ்ந்தமை புலப்படுத்தற்காக ***அருட்டுறை வந்து*** என்றார். பிறந்து என்னுமல் ***வந்து*** என்றுள்ள கருத்து சிந்தித்தற்குரியதாம். சிவம் எப்போதும் திருவருள்புரிவதும், அத்திருவருளே பிரபஞ்சவாதனை போக்குவதும், நேருக்கு நேராய் விளங்கும்படி ஸ்ரீ மெய்கண்டப் பெருமான் செய்தருளிய பெருந் திறலினைப் ***பொருள் மிக அருள்தலும் — பொய்ப் பகை ஆதலும் — கைகண்டு கொள் என விரீஇ*** என்ற வாசகங்களால் கூறியுள்ளார் ஆசிரியர். ***கை*** என்பது சின்முத்திரையுபதேசம் காட்டும் குறிப்புடையது. எல்லோரும் நல்வழிப்பட்டு இன்புற வேண்டுமென்பதே இறைவன் திருவுள்ளமாதலால் இத்தகைய செயல்களை இரகசியமாய்ச் செய்யாமல் உலகமறியச் செய்தான் என்பார் ***கடல் உலகு அறிய விரீஇ*** என்றார். இதனால், ***நம் மெய்கண்ட நூல் கூறும் சித்தாந்தம் கடல் கடந்து பல நாடுகளுக்கும் கண்டங்களுக்கும் பரவவேண்டுமென்பது*** நூலாசிரியர் கருத்தாகுமென நாம் தெரிதல் தக்கதாம். சேர-வருவித்தலும், சென்று சேர்வித்தலும் என்ற இவ்விரு முறைகட்கும் பொதுப்பட ***அறிய*** என்றுள்ளார். என்னென்னவோ பெயர்களை வகிக்காமல், ஆன்ம ஈடேற்றத்துக்கு அத்தியாவசிய மந்திரமொத்த ***மெய் கண்டதேவன்*** என்னும் திருப்பெயரினை ஞானாசாரியர் தாங்கியருளியமையும் தெரிவித்துள்ளார் ***மெய்கண்ட***

***தேவன் எனப் பெயர் விரீஇ*** என்பதனல் என்னலாம். இறைவனுடைய தடத்த சொரூப இலக்கணங்கட் கெல்லாம் ஏற்ப இத்திருப் பெயரமைந்துள்ளமை உள்ளி உள்ளி உவத்தற்குரியதாம். இதனை நமக் குணர்த்தவே ***விரீஇ*** எனலானர்.

ஆட்கொள்ளப்பட்ட பின்னர், தற்போதம் கழன்றுவிடுவதும், சிவபோதத்துள் சீவபோதம் அடங்கிவிடுவதும், அதுமுதல் எல்லாம் சிவன் செயலா-கவே சீவன் கருதிக்கிடப்பதும், தமது திருவருள் எல்லையிலேயே இருப்பித்துச் சிவாநுபவத்தையே நுகரச் செய்வதும், மலம் மாத்திரம் கெட ஆன்மா கெடாமல், சிவமென ஒரு முதல் உண்டென்பது புலப்படச் செய்தலும், அச் சிவமே எல்லாம் செய்வித்தும் தாமொன்றிலும் தோய்வற நிற்பதும், சீவனின் செயலறுதி நிலை தெரிவதும் ஆகிய யாவும் புலப்படுத்தியருளியமை நமக்குணர்த்துமாறு, ***தன்னுள் கரந்து தான் முன் ஆகி—தன்னதும் தானும் ஆய் என்னை இன்ருக்கி—தன்னையும் என்னையும் தந்து—தனது செய்யாமையும் எனது செயலின்மையும் எம்மான் காட்டி எய்தல்*** என்ற வரிகளால் வழங்கி-யுள்ளார் ஆசிரியர் ***அணைந்தோர் தன்மை*** கூறும் ஞானப் பனுவல்களின் கூற்றெல்லாம் ஈண்டைக்கு ஒப்பு நோக்குதல் தக்கதாம். "ஒழிந்தேன் பிறவி உறவெனும் பாசம்—கழிந்தேன் கடவுளும் நானும் ஒன்ருனேன்—அழிந்தாங் கினிவரும் ஆக்கமும் வேண்டேன் — செழுஞ்சார்புடைய சிவனைக் கண்டேனே" என்பர் திருமூலர் இந் நிலையினை. இவ் வியப்புறு நிலையினை நம் ஆசிரியரும் ***அம்மா! எனக்கே அதிசயம் தரும்ஏ*** எனலுற்ருராவர்.

முத்தியில் பிரகாசித்து நின்று முதல்வன் புரிசெயல், அந் நிலை எய்தினாராலன்றே அநுபவத்தாலறியப்படுவது எனக் கூறி அமைவுறுவோம் யாம். " அம்மா ! பொருளொன்று மறிந்திலனே " என்றார் நிலையும் இங்ஙனமே கூறுவித்தல் காண்க !

---

## செய்யுள் – 19

நேரிசை வெண்பா

*பாசநீக்கிய அதிசயம்*

**தருமா தருமத் தலைநின்றாழ் வேனைக்**
**கருமா கடல்விடமுண் கண்டப்—பெருமான்**
**திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்**
**உருவென்ன வந்தெடுத்தா னுற்று.**

## பொழிப்புரை

*புண்ணிய பாவங்களைச் செய்து துன்பக் கடலிலே கிடந்து அழுந்துகின்ற என்னைக் கடலில் தோன்றிய கரிய பெரிய நஞ்சினை உண்டடக்கிய கண்டத்தினை உடைய சிவபெருமானே திருவெண்ணெய்நல்லூர் எனப்படும் திருப்படை வீட்டிலே எழுந்தருளிய சுவேதனப் பெருமான் என்னும் பிள்ளைத் திருநாமத்தை உடைய-வராய் அடியேன்போலும் மானிடக் கோலந் தாங்கிவந்து அடியேன் பிறப்பு இறப்பு என்னும் சேற்றில் அழுந்தாமல் எடுத்துத் தனது திருவடியிலே சேர்த்தருளினான்.*

## விளக்கம்

நாம் இதற்குமுன் பல பிறவிகளை எடுத்து விடுத்-துள்ளோம். இப்போது இப்பிறவி வாய்த்துள்ளது. இது

ஞான நெறி நின்று வீடுபேறு எய்துவதற்கான தகுதியுடைய பிறவியாகும். இப் பிறவி தப்பினுல் திரும்பவும் இதே பிறவி வாய்க்குமென்ற உறுதி இல்லை. ஆதலால், கரும்பைப் பக்குவத்திலே ஆட்டிக் காய்ச்சிக் கட்டிகொள்வதுபோலவும், காற்றுள்ள போதே தூற்றிக் கொள்வதுபோலவும் இப் பிறவியாலாய பயன் கொள்ளவேண்டும். இச் சரீரம் கொண்டே நாம் பாசத்தை விட முயலவேண்டும்; சிவனை அடைய வேண்டும்; தேகம் உள்ளளவும் பிராரத்துவ வாசனை தாக்காவண்ணம் இறைபணி நிற்கவேண்டும். இவ்வளவே உடம்பாலாய பயன். இந்நெறி நின்ருர் நம் நூலாசிரியர். தானும் பசுபுண்ணியம், பாவமாதியவை செய்துசெய்து அவற்றின் துய்ப்புட்பட்டு நின்றமையை நமக்கும் கூறிக் காட்டி நமக்குத் தைரிய மூட்டுகிருர். இதனுல் நாமும் நன்னெறிபற்றி நல்வீடுறலாமெனத் தெருட்டுகின்ருர். இதற்காகவே, ***தருமா தருமத் தலைநின்ருழ்வேனை*** என்று தன்னைக் கூறிக்கொள்ளுகின்ருர். இதனுல் நாமும் சரியை கிரியை யோகமார்க்கங்களிலே இறைவன் உள் நின்றுணர்த்தியவழி ஒழுகிப்பின்னர் குருவெளிப்பாடு பெற்று ஆணவ, மாயா, சஞ்சித, ஆகாமியங்கள் அகலப்பெற்றுச் சிவோகம் பாவனையில் நின்று பிராரத்துவத்தாக்கடையாமே இறையருளில் அடங்கியொழுகி முற்றும் பற்றற்றுப் பரமன் பதநீழலில் புகுதல் கூடும் என்று புலப்படுத்துகின்ருர் என்னலாம்.

கடலில் தோன்றிய விடத்தினுக்கு அஞ்சித்தன் சரணடைந்தோரைக்காக்கத் திருவுள்ளங் கொண்டனன் சிவபெருமான். இங்ஙனமே பிறப்பினுக்கஞ்சிச் சரணம் புகுவமேல் பிஞ்ஞகன் நம்மையும் காக்கத்

திருவுளம் பற்றுவன். கடலைப் படைக்கும்போதே நஞ்சினையும் உடன் படைத்த முதல்வன் சிவமாதலின் அவனை அந்த நஞ்சு என்செய்யக்கூடும்? ஆதலால், அதனை விடமென்று கருதாதே பரமன் தனது பரமகருணையால் உட்கொண்டு திருக்கழுத்திலே இருத்தியருளினான். ஆதலால், பற்றற்றுச் சிவத்தையே ஆன்மாச் சார்தருமாயின் உயிரின் குற்றம் பாராதே அதனை ஏற்று நலம் புரிவன் பெருமான் என்பது தெரியலாம். இதனை உணர்த்தவே, ***கருமா கடல் விடமுண் கண்டப் பெருமான்*** என்றார் ஆசிரியர். குற்றத்திற்காகத் தண்டிப்பவரிடம் செல்ல அஞ்சவேண்டும். ஆனால், குற்றத்தைப் பொறுத்தருளுபவர் பால் செல்ல நாம் ஒரு சிறிதும் அஞ்ச வேண்டுவதில்லை. அங்ஙனம் பொறுத்தருளுபவன் சிவபெருமானே எனத் தெளிவுறுத்துகின்றார் இவ்வரியினால். இப் பெருமானே ஆசானாதலை உணர்த்தற்கும் இவ்வரி கூறப்பட்டதென்னலாம். தாம் தோன்றிய ஊரையும், தாங்கிய பெயரையும் நீத்து ஆட்கொள்ளற் கேற்ற பதியினையும், திருநாமத்தையுமே பூண்டருளினர் ஞானாசாரியர் ஆதலாலே ***திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேதவனத்தான்*** என்றார். ஆன்மாக்கட்கு அருள் புரியும் பொருட்டு எதனையும் விட்டுக்கொடுக்கவும் எடுத்துக் கொள்ளவும் இறைவன் தயங்குவதிலன் என்பதை இவ்வரியுணர்த்தும். ஞானமே திருமேனியாக உடைய இறைவன் சகலராகிய நமக்குக் காட்சியருளுகையில் மானிடக் கோலமே தாங்கிவந்தருளுவன். நமக்கு இப்பிறப்பு வினையாலமைவது. இறைவனுக்கு ஞான சங்கல்பத்தாலமைவது. தோற்றம் ஒன்றுபோற் காணப்படினும் தன்மையில் வேறு

பாடுள தென்பதை *உருவென்ன வந்து உற்று* என்பது புலப்படுத்தும்.

ஏழை யொருவன் எதிரில் பெருத்த செல்வந்தன் ஒருவன் காட்சியளித்து என்னபயன் ? செல்வமளித்து நல்குரவு துடைத்தாலன்றே ஏழை ஈடேறுவன். அவ்வாறே இறைவன் மானிடக் கோலத்தோடு ஞான மயனுகத் தோன்றுதல் மாத்திரையோடமையாமல், நமக்கும் ஞானத்தையருளி உண்மை தெளிவித்துப் பேரின்பை யருளுகிருன். இதனைத் தெரிவிப்பது ***எடுத்தான்*** என்ற சொல். " என்னை இப்பவத்தின் " என்ற செய்யுட்கருத்து இங்குச் சிந்தித்தல் தக்கதாகும். இவ்வாறு தனது ஞானசாரியர் தனக்கருள்புரிந்து. பாசமனைத்தும் பாறிடச் செய்தமையை இவ்வாசிரியர் நமக்கெடுத்துக் கூறிமகிழ்கிருர் இச்செய்யுளால், தாம்பெற்ற மகிழ்ச்சியைப் பிறர்க்கும் பகிர்ந்தளித்தல் பெரியோரியல் பென்பதை இச் செயல் காட்டவல்ல தாம். நாமும் இப் பெருமானையே பற்றிக்கிடந்து பற்றற்றுப் பதம் பெறுவோமாக !

---

## செய்யுள்—20

### நேரிசை ஆசிரியப்பா

### *ஞான கடாக்ஷ வியப்பு*

**உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்**
**அற்றவர்க் கற்றவன் அல்லவர்க் கல்லவன்**
**அந்தம் ஆதி இல்லவன் வந்து**
**குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்**
**5 பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்**

டிருள்வெளி யாகும் மருளினை அறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி ஒன்றாய் நின்றவந் நிலையில்
ஒன்றா காமல் இரண்டா காமல்
10 ஒன்று மிரண்டு மின்றா காமல்

தன்னது பெருமை தாக்கா தாயினும்
என்னது பெருமை எல்லாம் எய்தித்
தன்னை எனக்குத் தருவதை அன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
15 பேரா நந்தப் பெருங்கடல் அதனுள்

ஆரா இன்பம் அளித்துத் தீரா
உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி அருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
20 வெண்ணை காவலன் மெய்கண்ட தேவன்

அண்ணல் அருளா லயத்தன் நண்ணிய
மலமுத லாயின மாய்க்கும்
உலக உயிர்க்கெல் லாமொரு கண்ணே.

## பொழிப்புரை

*தனது சுற்றத்தவர்கள் பெற்றோர்கள் தன்னில் வேறாயில்லாத மனைவிமக்கள் தனம் தானியம் வீடு முதலான எல்லா உபாதிகட்கும் இருப்பிடமான தேகாதிப் பிரபஞ்சம் ஆகிய யாவற்றையும் அவற்றின் பற்றையும் அறுத்தவர்களுக்கு அவர்களுடன் இரண்டறப் பிரியாது* ***நிற்பவரும்,—***

*இங்ஙனமுள்ள உபாதிகளை விட்டு நீங்காதவர்-களுக்கு வேறாக* ***இருப்பவரும்,—***

தனக்குத் தோற்றமும் ஈறும் **இல்லாதவரும்,—** **ஆகியவர்,** ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனி கொண்டு எழுந்தருளி **வந்து,—**

குரங்கு மனம்போலும் ஒன்றிலும் தரிப்பில்லாமல் எழுந்தது புத்தியாகத் திரிகின்ற பாவியாகிய என்னை இந்தப் பிரபஞ்சப் பரப்பில் திரியும் வியாப்தியை **ஒடுங்கச் செய்து,—**

தன்னுடைய திருவடி ஞானத்திலே **நிறுத்தி,** திரும்பப் பிரபஞ்ச வாதனையிலே செல்லாமற் **பிடித்துக் கொண்டு,** கேவலம் சகலம் என்கிற மயக்கத்தைத் **தொலையப்பண்ணி,—**

தான் வந்து என் உள்ளத்தே புகுவதும், யான் சென்று தன்னுடன் கூடிப் பாசம் நீங்கப்பெறுவதுமின்றி அநாதியாகவே தானும் யானும் நீங்காமல் நிற்கும் நிலையிலேயே தானும் நானும் ஒன்றுபடுவதும் (அபேதமும்) **ஆகாமல்,** இரண்டுபடுவதும் (பேதமும்) **ஆகாமல்,** தானும் யானும் ஒன்றுபட்டு நிற்பதும் பெறுவானும் பேறுமாய் இரண்டுபட்டு நிற்பதும் (பேதா பேதமும்) **ஆகாமல்,—**

தனக்கு உள்ளவையான சர்வ ஞானமும் பஞ்ச கிருத்தியமும் எனக்கு உண்டாமாறின்றியே எனக்-குள்ளவையான அறிவு விழைவு செயல்களையும் வியாப்தி வியாபகங்களாம் பெருமையையும் தன்னுடைய பூரணத்திலே **அடக்கிக்கொண்டு,—**

தன்னுடைய ஆனந்த சொரூபத்தை எனக்கு அருளியதுமல்லாமல் அப் பேரின்பத்தோடு கூடி அனுபவிக்கிற ஆன்மபோதமாகிய சிற்றறிவு கெடாமற் கெட்டு நிற்கும் முறைமையையும் **கடாக்ஷித்து,—**

*ஒருபோதும் நீங்காமல் அகமும் புறமும் எங்கும் பூரணமாய் நின்று எப்போதும் அறிவித்து நிற்கும் வளமையையும்* **தரிசிக்கப்பண்ணி,—**

*தாமரை மலர்போன்ற ஸ்ரீபாதத்தைத்* **தந்தருளிய தம்பிரானே** *எனக்குக் கர்த்தாவாக உள்ளவர். இவரே, மென்மேலும் பெருகிவரும் வெள்ளத்தால் நிறைந்த பெண்ணை நதியையுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக்* **கருத்தாவாக இருக்கப்பட்டவர்.** *மெய்கண்டதேவர் என்னும்* **திருநாமத்தினை உடையவர்.** *எனக்குச்* **சுவாமியாக உள்ளவர்.** *தனது அருளே* **கோயிலாக எழுந்தருளி இருப்பவர்.**

*என்பால் வந்தடைந்த ஆணவ முதலாய மலங்களை யெல்லாம்* **சேதனம் செய்தவர்.** *சர்வ உலகங்களிலும் உள்ள ஆன்மாக்களுக்கெல்லாம் ஓர் அறிவாக நின்று* **அநுக்கிரகம் செய்தருளுபவர் ஆவார்.**

## விளக்கம்.

ஆவிக்கு இருதிறச் சார்புகள் உள. ஒன்று அகத்-துணை. மற்றொன்று புறத்துணை. ஒன்றையும் சாராமல் இருப்பது ஆவிக்கு இயல்பன்று. சார்ந்ததன் வண்ண மாய் நிற்றலே ஆன்ம இயல்பு. ஆவியின் அகத்துணையா யிருப்பது சிவம். புறத்துணையாவன பிரபஞ்சம், பந்துமித்திரர், உடம்பு முதலனவாம். இவற்றுள் புறச் சார்புகளை உவர்த்து விடுத்து அகச்சார்பாம் ஆண்ட வனைப் பற்றுதலே உண்மைத்தவமாம். இதனைத் தருவதற்கே சரியையாதிகள் வகுக்கப்பட்டுள. சுற்றத் தார்யாவரும் ஆவிக்கு உற்றதுணையாகார் என்பது கண்கூடாக அறியப்படுவதே. "உற்றார் நட்டார்

கூட்டுூர் புக்கார்'' என்பது நூல்நுவல்வது. இறைவனே உண்மையான சுற்றமாவன். ''ஈன்றுளுமாய்'' என்ற தேவாரம் உண்மைச் சுற்றம் உரைப்பதாகும். சந்தையிற் கூட்ட மொப்பதே சுற்றம் என்னும் நூல்கள். ஆதலால், ***உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும் அற்றவர்க்கு அற்றவன்*** என்கிருர் ஆசிரியர். பெற்றோரும் இன்னதன்மையரே யாவர். மனைவி முதலாயினர், உடம்புக்கு மனைவாயில் மட்டே தொடர்பவராவர். ஈருடம்பும் ஒருயிரும் என்று காதலர் பேசப்படுவதெல்லாம் வளமையும் இளமையும் இருக்குமளவுதான். இதனுலேயே குழவிப்பருவத்தே துறப்பது நல்லதெனச் சில நீதி நூல்கள் கூறுகின்றன. மனை மாடு செல்வம் முதலன உடன் தொடர்வனவல்ல என்பது நன்கு நாம் அறிந்த செய்தியே. ''பற்றித் தொடரும் இருவினைப் பாவ புண்ணியமுமே'' என்பர். ஆகையால், இவ்வுலகில் வாழுமளவும், பற்றற்று வாழ்தலே வேண்டுவதாம். நமக்கு இப்புறப்பற்று நீங்கியதும் உடனுறையும் கடவுளே பற்ருகின்ருன். இறைவன் கேவல முதல் சுத்தமிறுதியாக எப்போதுமே நம்முடன் உறைபவன். விட்டு நீங்குதல் எப்போதுமில்லை. ஆதலின் இறையினை ***அற்றவன்*** என்ருர். வாஞ்சை புறத்தே நீங்காதவர்க்கு இறைவன் வெளிப்பட மாட்டான். இதனுலேயே ***அல்லவர்க் கல்லவன்*** என்ருர். ''உலகினில் இயற்கையை ஒழிந்திட்டு ***அற்றவர்க் கற்ற சிவனு***றைகின்ற ஆலவாய்'' என்பது ***தேவாரம்.*** இயற்பகையார் முதலிய நாயன்மார்கள் திவ்வியவரலாறுகள் பற்றறுகைகாட்ட வந்தனவேயாம் உடம்பு முதலனவற்றின்மீதும் பற்றுக்கூடா தென்பது'' பிறப்பறுக்கலுற்ருர்க்கு

***உடம்பும் மிகை*** "என்றுரைக்கும் ***திருவள்ளுவப் பயனு***ரையாலறியலாம். " பாவி யேற்கும் உண்டா மோ" இத்தகைப் பற்றறுகை என்கிறார் ***திருவாதவூரர்.***

மேற் கூறப்பட்ட சுற்ற முதலானவர் தொடர் பெல்லாம் அந்தமும் ஆதியும் உடையன. "யாயும் யாயும் யாராகியரோ — எந்தையும் நுந்தையும் எம் முறைக் கேளிர் " என்னும் பாடலடிகளும் இந் நீதி பொதிந்து நடப்பனவேயாம். அந்தமும் ஆதியுமில் லாத பொருளே நம்முடன் எப்போதும் இருக்கமுடி யும். எனவே நமக்கு உற்றதுணையாவார்க்கு இலக் கணம் ஆதியும் அந்தமும் இல்லாமையே என்பது போதரும். இறைவனே ஆதியந்த மற்றவன். அதாவது தான்நிலைத்தற்கு ஒரு சார்பும் வேண்டாதவன் என்பதாம். உயிர், இறையின் சார்பின்றி இராது. சூரியற்கு வேறொரு ஒளியின் சார்பு தேவையில்லை. இவ்வாறதே இறைநிலை. ஆனதுபற்றியே, "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியை " என்பது ***திருவெம்பாவை.*** இவற்றால், சிவத்துக்கும் ஆன்மா வுக்கும் உள்ள கலப்பு என்று முள்ள தென்பதும் அஃது இடையே வந்ததன் றென்பதும் கருத்தாம்.

இங்ஙனம் கலப்புற்றிருக்குமவன் எப்போதுமே மறைந்திருப்பவனல்லன். பக்குவ நிலையுற்றதுமே ஆசாரியக் கோலத்தனாகி வெளிப்படுவன். இங்ஙனம் தம் முதல் தானே குருவாய் வருதலால் ***வந்து*** என்றார் ஆசிரியர். என்றுமே உள்ளவன் அன்று வெளிப்படு கிறான் என்பதே உண்மையாம்.

இவ்வண்ணம் ஆசானுகி எழுந்தருளிய பின்னர் நம்மை ஞானமார்க்கத்தே செலுத்துகின்ருன். நாம் அவனுல் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கூடல் அடைகிருேம். அதாவது நம்முடைய ஓடும் இயல்புகொண்ட மனத்தை ஒருங்கிருக்கச் செய் கின்ருன் என்பது கருத்தாம். சார்புகள் பலவும் சாய்த்த ஆவிக்கு முதல்வன் ஒருவனே தனிச்சார்பாய் நிற்றலால், அதுகாறும் பற்பல வகையால் வழிகளால் ஓடிக்கொண்டிருந்த உள்ளம் ஓய்ந்து ஒன்றன்பாலே நின்றுவிடுகின்றது. தனக்கே திருமணம் நிகழ்ந்து கொண்டிருக்கப்பெற்றவன் நாலு விட்டுத் திருமணத் துக்கும் அப்போது ஓடமுடியாதவனுகிருன். ஓடும் எண்ணத்தையும் மறந்துவிடுகிருன். வெள்ளம் நின்ருல் துரும்பும் நின்றுவிடும். உள்ளம் நின்ருல் பாசமும் நின்றுபோம். மனம், குரங்குபோல் அலையு-மியல்பினது. பாதரசம் போலப்படர்வது. பாசப் பெருக்கையே ஆகாரமாகக் கொண்டு படர்வது. "கள்ளுண்டு தள்ளுண்டு கோலினுல் மொத்துண்டு பித்துண்ட வன் குரங்கோ" என மனத்தை உவமிப்பர் *இராமலிங்க அடிகளார்*. ஆதலால், ***குரக்கு மனத்து*** என்ருர். இம்மனம் படைத்திருத்தல் கொடிது. ஆகலின், ***கொடியேன்*** எனவுற்ருர். கொம்பு உள்ள இடமெல்லாம் கொடிபடர்வதுபோலப் பற்றுள்ள இடங்களிலெல்லாம் மனம் படரப் பெறுதல்பற்றிக் ***கொடியேன்*** என்ருர் எனலும் ஆம். இறைவனெரு வனைப்பற்ருமல் நாம் மனப் பரப்பைக் குவிக்க ஒண்ணுது. "பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கருமையோ" என்பர் ***தாயுமானுர்***. எனவே இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிச்

செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனாராகிய பெருமான் வெளிப்பட எழுந்தருளியதும், ஓடுங் குதிரையைக் கலினத்தால் இழுத்து நிறுத்துவது போல் பரக்கும் மனத்தைத் தன்பால் பற்றி இழுத்து நிறுத்திப் பிடித்துக்கொள்ளுகின்றானவன். "இதனால் ஓய்ந்த பம்பரம்போலாக நேரும். இதனையே, *பரக்கும் பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு* எனக் கூறியுள்ளார் ஆசிரியர் இங்ஙனம் ஆசாரியர் செய் தருளுதலும், "சிறைவிட்டு அலைகடலிற் சென்றடங் கும் ஆறு போல் (உள்ளமானது) உலைவிலரன் பாதத்தை உற்று மீளா" நிலை உறும் என்பது *சிவஞான போதம்.* இதனால், பிரபஞ்சப்பரப் பிற்பட்டுத்திரிகின்ற வியாத்தியானது ஒடுங்கிவிடும் உயிர்க்கு என்னலாம்

## இருள் வெளி யாகும் மருளினை அறுத்து—

*இருள்* என்பது ஆன்மாவின் கேவல நிலை. வெளி என்பது சிறிதறிவு பெறுதற் கேற்புடைய சகல நிலை. ஆணமலப் பிடிப்புக்குள் அகப்பட்டு ஆன்மா இருட்டறையில் கண்ணில்லாக் குழந்தை போல இருந்த நிலையே ஆன்மாவின் மிகவும் கேவலமான நிலை. உடம்பின் கூட்டுறவு இல்லாத் தனி நிலையாதலின் இஃது இவ்வாறு அழைக்கப்படலாயிற்று. "காரிட்ட அணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப் போல் கட்டுண்டிருந்த எனை" என்பர் இந்த நிலையைத் தாயுமானவர். இத்தகைய ஆன்மா வின் இழிந்த நிலைமை கண்டு முதல்வன் இரக்கம் பூண்டு அதனைச் சகலநிலை பெற அருள் புரிகிறான். அப்போதே முத்திநிலை தரும் ஆற்றல் இறைவனுக்கு

36

இருந்தாலும், ஆன்மா அதனை ஏற்று நிற்கும் ஆற்றல் பெறாது. ஆணவமலம் அற்றாலன்றி முத்திப்பேற்றுள் அழுந்த இயலாது. ஒரு சிறிய பையனுக்கு அவன் தந்தை ஏராளமான நிலபுலங்களையும் ஆஸ்திகளையும் அளித்தாலும் அச்சிறுவனுக்கு அறிவு திறம்படாமையால் அவற்றை ஏற்று லாபமுற அநுபவிக்க மாட்டான். அவன் அறிவடைந்த பிறகு தரப்பட்டால் தக்கவாறு பயன் கொள்வான். அப்படியேதான் சகல நிலை முத்திநிலைக்கு முன்பு தரப்படுகிறது. சகல நிலை விளக்கொளி போல்வது. முத்திநிலை ஆதித்தன் ஒளி போல்வது. கேவல நிலை, சகல நிலை என்ற இரண்டுமே மருள் நிலைதாம். முத்திநிலையில் மருள் இல்லை. அருள் நிலையுள்ளழுந்தி இன்பு அனுபவிக்கும் ஆன்மா. ஆகையால், ஆசிரியர், ***இருள் வெளி ஆகும் மருளினை அறுத்து*** என்றார். ஆசாரியனாகி வெளிப்பட்டபின் மருள் திருவருளால் நீக்கப்படுகின்றதாதலின் இங்ஙனம் கூறினர். " இகலிவரும் இவை உணரில் இருள் வெளியாம் தன்மை எய்தும் " என்பது ***சிவப்பிரகாசம்.*** இருளெல்லையின் வெளிப்பட்டுக் கலை முதலான தத்துவங்களோடு ஆன்மா சீவிக்கையால் ***வெளி*** எனப்பட்டது.

இங்ஙனம் இறைவன் ஆன்மாவின் பக்குவங் கண்டு அறிவிக்கையில் வேறோரிடத்திருந்து வருவானல்லன். அதுவரை மறைவாயிருந்தமை நீங்கி வெளியாவதத்தனையே நிகழ்கின்றது. முடிச்சு அவிழ்ந்ததும் மணி வெளிப்படுவது போன்ற செயலாம் இது. நாமும் அவன் தனித்திருப்பதாகக் கொண்டு ஆங்கு அவன்பாற் சென்று சேர்தல் இல்லை. அழுக்கு நீங்கியதும் ஆடை வெண்மையடைதல் போன்று பாச

நீக்கத்தின்போது இக்காட்சி தானே ஏற்படுகின்றது. ஆதலால், ***வந்து புகுதலும் சென்று நீங்கலும் இன்றி*** எனப்பட்டது. இதனுல் சிவன் புதிதாக ஆன்மாவை வந்து கூடுதலுமில்லை; ஆன்மாவானது சென்று சிவனைக் கூடுவதுமில்லை என்பது தெளியலாம். " உள்ளம் என்றும் ***நீங்காது*** ஒளித்திருந்து தோன்றி நின்ற கள்ளம் இன்று காட்டும் கழல் போற்றி " என்பது ***போற்றிப் பஃறொடை***. இங்ஙனம் இறைவன் உயிர்களோடு அநாதியாகவே நீங்காமல் நிற்கும் நிலையினை ***ஒன்ருய் நின்ற அந்நிலையில்*** என்கிருர் ஆசிரியர். ***ஒன்ருகாமல் ,இரண்டாகாமல். ஒன்றும் இரண்டும் இன்ருகாமல்***— சிவத்துக்கும் ஆன்மாவுக்கும் உள்ள கலப்பு இடையிலே நேர்ந்ததன்ரும். இக்கலப்பு எத்தகையதென இவ்வரிகளில் ஆசிரியர் புலப்படுத்துகிருர். இதுவே நம் ***சித்தாந்தம் கூறும் அத்துவித நிலை***யாகும். இதனை நாம் நன்கு அறிந்து கொண்டால் பிறகு மதமயக்கம் இராது "Neither one, nor two nor neither" என்பர் ஆங்கிலத்தில் இதனை. அதாவது இறைவனும் ஆன்மாவும் ஒன்றுபடுவதுமில்லாமல், இரண்டுபடுவது மில்லாமல், ஒன்றுபட்டு நிற்பதும் பெறுவானும் பேறுமாயிரண்டுபட்டும் நில்லாமல் இம் மூன்றும் தன் கண்தோன்ற இவற்றின் வேருயிருக்கும் வேறின்மை நிலையே அத்துவிதமாம். எனவே, சையோகம் — ஐக்கியம் — தாதான்மியம் என்ற மூன்றையும் உளப்படுத்தி நிற்கும் இம்மூன்றின் வேரும் நிலை என்பர். இதனை, "உடலுயிர் கண்ணருக்கன் அறிவு ஒளி போல் பிரிவரும் அத்துவித நிலை "என்பது ***சிவப்பிரகாசம்***. உரையும் பொருளும், உயிரும்

உடலும், விரையும் (வாசனையும்) மலரும் போல் விம்மிச் சிதைவின்றிச் சென்றவாறு எங்ஙன் திருக் கயிலை எம்பெருமான் நின்றவாறெங்கும் நிறைந்து'' என இதனைத் திருக்காளத்தியந்தாதி புகலும் ***பேதம்*** என்பது விரலும் விரலும் சேர்ந்தமை போலும் சையோகநிலை. ***அபேதம்*** என்பது குடாகாசமும் மகாகாசமும் ஒன்ருறற் போலும் ஐக்கியநிலை. ***பேதா பேதமாவது*** பழமும் சுவையும் சேர்ந்தாற் போலும் தாதான்மியநிலை. சமவாயம், சொரூபம் முதலனவும் கூறி ஒருமைநிலை உணர்த்துவாருமுண்டு. குணகுணி சம்பந்தமே சமவாயம் எனப்படும். அக்கினியும் சூரியனும் செம்மைப்பண்பால் ஒத்திருத்தல் சொரூபசம்பந்தம் எனப்படும். இவை யாவும் ***சுத்த அத்துவித நிலை***யினை உணர்த்துவன ஆகா. சிவானந்தானுபவத்துக்குரிய கலப்பு நிலையே சுத்தாத்துவிதமாம். பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம் அத்துவிதமாம். சையோகம் முதலாகக் கூறப்படும். ஆறு விதமான சம்பந்தமும், இந்திரியத்துக்கும் விஷயத் துக்குமுள்ள சம்பந்தமேயல்லாமல் சிவன் சீவன் என்னும் இருபொருள்களின் சம்பந்தமாகாது என்பது தெரிதல் வேண்டும். தாதான்மியம் என்பது இரண்டு வகைப்படும். ஒரே பொருள் குணமும் குணியுமாய் நிற்றல் ஒருவகை. இரண்டுபொருள்கள் பிரிக்க முடியாத கலப்பால் ஒருதன்மைப்பட்டு நிற்றல் மற்ருெருவகை. அக்கினியும் சூடும்போல்வது முன்ன-தற்கு உதாரணம். கண்ஒளியும் ஆன்மாவின் அறிவும் பொருள்களால் இரண்டாயினும் பிரிக்கமுடியாமல் ஒருதன்மைப்பட்டு நிற்றல் பின்னதற்குக் காட்டாகும்.

முன்னதற்கே தாதான்மியம் என்பது பெயர். பின்னதே அத்துவிதம் எனப்படுவது. ஆகையால், முற்றறிவும் முற்றுத்தொழிலும் உடைய சிவமும், சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய ஆன்மாவும் பேதப் பொருளாயினும் பிரிக்கமுடியாக் கலப்புத் தன்மையால் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடமுடையனவாதலால் ***அத்துவிதம்*** எனப்படும். " அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு" என்பது ***போதம்.*** அத்துவிதம் என்னும் சொல்லின் முன் நிற்கும் அகரம், அன்மை, இன்மை, மறுதலை என்ற மூன்று பொருள்களையும் உணர்த்துமாயினும் துவிதம் என்னும் எண்ணுப்பெயர் மேல் இங்கு வந்துள்ளமையால் அன்மைப் பொருள் ஒன்றையே உணர்த்தும் என்பது சித்தியார் விளக்கம். அப்பிராமணன் என்பது அன்மைப் பொருட்குதா-ரணமாகக் காட்டப்படுவது. பிராமணத்தன்மையில்லா தவன் என்பது இச்சொற்பொருள். இவ்வெல்லாப்-பொருளும் இவற்றின் தெளிவும் நமக்குப் புலப் படுத்தும் பொருட்டே ***" ஒன்றுகாமல்.........இன்-றுகாமல் "*** என்று விதந்து கூறியுள்ளார் ஆசிரியர். இவ்வரிகளின் தெளிந்த உண்மைப்பொருளே சித்தாந்த முத்தியியல்பு உணர்த்துவதாகும்.

இறைவன் உயிர்களை முத்தியில் தன்னுடைய பூரணத்துள் அடக்கிக்கொள்கின்றுன். அதாவது உயிரினுடைய இச்சை ஞானக் கிரியைகளையும், வியாத்தி வியாபகங்களாம் பெருமையையும் தன் பூரணத்துட்படுத்துகின்றுன் என்பதாம். சகல நிலையில் இறைவன் ஆன்மாவினுள் அடங்கி நின்றுற் போலவே ஆன்மா முத்தி நிலையில் இறைவனுள்

அடங்குகிறதெனக் கோடல் கூடும். இவ்வாறு இறை பூரணத்துள் ஆன்மா அடங்கினலும் இறைவனுக்குரிய சருவஞானம், பஞ்சகிருத்தியம் இவைகளை ஆன்மா அடைவதில்லை. பேரின்பானுபவம் ஒன்றே இறைநிறைவுளடங்கி ஆன்மாத் துய்ப்பதாகும். முத்தி பெற்ற இடத்தும் உயிர் அடிமைதான். "உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" என்பது *சித்தியார்.* "நாழி கொள்ளாது ஆழியின் அலைபுனல்" என்று காட்டுக் கூறும் ***சங்கற்ப நிராகரணம்.*** இச் செய்தியே, ***தன்னது பெருமை தாக்கான் ஆயினும் என்னது பெருமை எல்லாம் எய்தி*** என்று கூறப்படுவது. "விரும்பிப் பொன்னினைக் குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி" என்பது *சித்தி*யார். சிவபெருமான் குருமூர்த்தியாக வந்து அனுக்கிரகம் புரிந்ததும் பக்குவமடைந்த ஆன்மாவானது பிரபஞ்சத்தை வெறுத்து இறை-வனையே உறவென அறிந்து கலக்கும். அப்போது, இறைவன் தன் எட்டுக் குணங்களையும் அதனிடம் பதிப்பான். ஆன்மாவின் எண் குணங்களைம் தன் எண் குணத்துள் அகப்படுத்தி அடக்குவான். இப்படி ஆன்மாவினிடம் சிவனது எண்குணங்களும் விளங்கு-வதே முத்தியாம் அப்போது ஆன்மா அவ்வெண் குணங்களையும் அழுந்தி அவனோடு ஒற்றித்து நின்றறியும். இங்ஙனம் அழுந்தியறிவதே பேரின்ப நுகர்ச்சி என்பர். உணர்ச்சி முழுதும் உயிருக்கு இறைவன்-பால் தங்கியிருத்தலால் இன்பதுன்ப நுகர்ச்சி உயிருக்கு இராது உடலூழாய் மட்டில் கழியும். பிராரத்த வினைப்பயனை நுகருங்கால் அதனுள் அழுந்தித் தன்னை இழந்து இறைவனைமறந்து உடலைநினைந்து

ஊழை விழையாமையே தாளின்ப நுகர் வெனப்படும். உள்ளம் இறை நினைவிலழுந்தியிருப்பதால் தானழியாமல் தலைவனை நினைந்து இன்பே நுகரும் *உயிர்.* "அல்லல் என் செய்யும்" என்னும் ஐந்தாம் திருமுறைப்பாடல் இஃது உணர்த்தும்

**தன்னை எனக்குத் தருவதை அன்றியும் என்னையும் எனக்கே தந்து —**

முத்தியனுபவத்திலே இறைவன் தன்னுடைய வரம்பில் இன்பத்தை ஆன்மாவுக்கு அருளுகின்றான். அப்போது ஆன்மா கேடடைவதில்லை ஆன்மாவின் மலமே நீங்குகின்றதன்றி அதன் குணங்கள் கேடடையா. ஆதலால், ஆன்மா அப்பேரின்பத்தைத் தனது ஆன்ம போதம் கெடாமலே கெட்டு நுகர்கின்றது. இறைவனது பேரறிவினைநோக்க, மலமற்ற ஆன்மபோதம் சிற்றறிவென்றே கூறப்படும். இறை வியாபகத்துட்பட்டே ஆன்மா நின்றனுபவித்தலால், ஆன்மாவின் இயல்புகள்யாவும் இறைவனின் வியாபகத்திற்குக் குறைவுடையனவே ஆகும். கடல் பரப்புட்பட்ட ஆற்றின் பரப்பினை எண்ணிக் கொள்ளுதல் இங்குத்தகும். இறைவன் பேரானந்தப் பெருவாழ்வினை ஆன்மாவைக் கெடுத்தருளாமல் கொடுத்தருளுவதனால் இவ்வாறு கூறினர். "தானுக்கித் தன்னுருவப் பரப்பெல்லாம் கொடுபோந்து பதிப்பன் இவன் பாலே" என்பது சித்தியார். தீயானது இரும்பைத்தன் வண்ணமாகச் செய்தல்போல, இறைவனுக்குரிய முற்றுணர்வு முதலிய எண்குணங்களும் படிகம் போலச் சார்ந்ததின் வண்ணமாகும் தன்மையுடைய ஆன்மாவுக்குரிய குணமாகும்படி. அத்துவித இயை

பால் இவனிடம் விளங்கித் தோன்றுதலே *இவன்-பாற்பதித்தலாம்.* ஆன்மா, மாயையில் தங்கிய போது பெற்றிருந்த ஊன முக்குணங்களுமகன்று இறைவனுக்குரிய ஞான குணங்களை எய்திடுதல் இதனால் அறியலாம். திருவாசகத்தே உள்ள "தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னை" என்ற பாடல் ஈங்கு மேற்கோளாகக்காட்டப்படும். தேசிகர் மோகங் கூறுமிடத்தே இங்ஙனம் கூறப்பட்டிருத்தல் போன்றே ஈண்டும் அம்மோகமுரைக்குமிடத்தே ஆசிரியர் கூறியிருத்தல் காணலாம். "முத்திதனில் மூன்றும் முதலும்மொழியக் கேள்" என்பது உண்மை விளக்கம். இதனால் பேரின்பத்தைத் துய்க்கும் ஆன்மாவின் உண்மை விளங்கும். பேரின்பத்தை முழுதும் கொடுத்தருளுபவன் இறைவன். பேரின்பத்தை மேன் மேலும் விளைப்பது மலம். இதனால் சிற்றறிவு கெடாமை காட்டப்பட்டது என்க.

**தன்னது பேரானந்தப் பெருங்கட லதனுள் ஆரா இன்பம் அளித்து -**

இறைவன் தனது பரிபூரணமானதும் ஆனந்தமய மானதும் ஆகிய அருட்சாகரத்திலே விளைவதாயிருக் கின்ற எக்காலத்தும் உவட்டாத இயல்புடைய பேரின்பத்தை ஆன்மாவுக்கு அருளுகின்றானிறைவன். அலையற்றதும் உலைவற்றதுமாதலின் *பெருங்கடல்* என்றார். இது குணக்கடலாதலின் *பேரானந்தக்கடல்* என்றார். "நற்குணக்கடல் ஆடுதல் நன்றரோ" என்பார் கம்பநாடர் உவர்க்கடலமுதம் உவட்டு மியல்பிற்று. இஃது அத்தகையதன் றென்பார் *ஆரா இன்பம்* என்றார். கைம்மாறேதுமின்றித் தரப்படுதலி-

னுலும் அருளால் தரப்படுதலினுலும் ***அளித்து*** என்றுர். " திருக்கடைக்கண் சேர்த்திச் செனன மொன்றிலே சீவன்முத்தராக வைத்தாண்டு மலங்கழுவி ***ஞானவாரி மடுத்து*** ஆனந்தம் பொழிந்து " என்பது ***சித்தியார்.*** இதனுல் சித்தாந்த நெறிப்பட்டோர்க்கு அந்தப் பிறப்பிலேயே சிவபிரான் முத்தி தந்தருளுதல் பெறப்படும். வாயுசங்கிதை, சிவகீதை ஆதிய நூல்களும் இவ்வுண்மை புலப்படுப்பனவாம். முத்தி முடிவென்பதே திருவடி மலர் எனப்படும்.

இங்ஙனமாய பேரின்ப நுகர்வுறுதற்கேற்ற நிலை ஆன்மா எய்து மிடத்தே, சிவபரம் பொருள் இது காறும் இனியும் ஒருபோதும் விட்டு நீங்காதே அகம் புற மெங்கும் பூரணமாய் நின்று எப்போதும் அறிவித் துதவும் பெருங்கருணையைத் தெரிவுறும். இதனுல், ஆன்மா தன்னுண்மை நிலையையும் சிவசொருப நிலை யினையும் தரிசித்தல் பெறும் என்ப. " உம்பர்கட் கரசே " என்னும் திருவாசகப்பாடல் இத்தகைய முத்திக் கலப்பினை எடுத்துரைப்பதாம். " ஊற்றை யேன் " என்பதால் ஆன்ம நிலையும், " சிவபெரு மானே " என்பதால் பரம் பொருளும், " சிக்கெனப் பிடித்தேன் " என்பதால் விட்டு நீங்கா நிலையும் இப்பாடலில் உணர்த்தப்படுதல் காணலாம்.

**மலர் அடி அருளிய மன்னன் —**

மென்மை குளிர்த்தி இனிமை முதலியன தந்து தேனீயைத் தாமரை மலர் இன்புறுத்தும் அவ்வாறே அறிவு இச்சை செயல்களை ஆரா இன்பத்துள். ஆழ்த்தி யருளுதலின் திருவடியை ***மலர் அடி*** என்றுர். " செங்கமலப் பொற்பாதம் தந்தருள வந்தருளும்

சேவகன் " என்பது திருவெம்பாவை. திருவடி ஞானமேயாதலால் முற்றறிவுதவப்படுதற்கு இங்ஙனம் கூறுதல் குறிப்பாம் என்க. திருக்குறட் கடவுள் வாழ்த்துப்பாக்களும் திருவடியே கூறுதல் காணலாம். ஞான வேந்தாதல் தெரிவித்தற்பொருட்டு *மன்னன்* என்றார். செம்மலர் நோன்றாள் என்பதும்அது காட்டும்.

**எம்கோன் —**

உலகிலுள்ள யாவகை உயிர்க்கும் பாதுகாப் பளிக்கும் பரம் பொருளாயிருத்தலேயன்றித் தன்னை வலிய ஆட்கொண்டருளிய அரசு ஆதலால் ***எம் கோன்*** எனலானார். " வானாகி " என்னும் திருவாசகமும் " கோனாகி " எனக்கூறுதல் காணலாம்.

**வார்புனல் பெண்ணை வெண்ணெய் காவலன் —**

எங்கும் நிறைந்துள்ள அப்பொருள் தன் பொருட்டு ஓரிடத்தே எழுந்தருளிய செழுந்தகைமை தோன்ற ***வெண்ணெய்*** என்றார். உயிர்கட்கு என்றும் ஏமம் அளிப்பானாதலால் ***காவலன்*** என்றார். இச் சொல் ஏவல் செய்வோரையும் ஏவுவோரையும் குறிக்கும் பெற்றியது. புனல் பெருகும் பெண்ணைநதி ஊருக் கழகு செய்வது. அருள் பெருகு திருவுருவம் ஆருயிர்க் கழகாவது. இதனால் ***வார் புனல் பெண்ணை*** என்றார். ***மெய்கண்ட தேவன்*** என்பது திருப் பெயர். பஞ்சாக் கரம் போலும் இத் திருப்பெயரினை ஓதி ஓதி உவத்தல் இவ்வாசிரியர்க்கு இயல்பாயிருத்தல் இந்நூலாலறிய லாம். இத் திருப்பெயருள்ளும் மெய் எழுத்துக்களை நீக்கின் ஐந்தெழுத்துண்மை அறியலாம். ஆகலின் இத் திருப் பெயரினை நாடோறும் நாவார ஓதுதலே அமையும் என்க! ***அண்ணல்***—என்பதனால் இத்

தேவரது பெருமை புலப்படுத்தப்பட்டது. யாவரும் அண்ணுதற்குரியவனுதலின் அண்ணல் என்றார் எனினும் ஆம்.

**அருள் ஆலயத்தன்**

சத்தியே இறைனுக்குத் திருமேனியாம். "நாடரிய கருணை திருவுருவமாகி" என்பது சிவப்பிரகாசம்! காயமோ மாயையன்று; காண்பது சத்தி தன்னால்" என்னும் ***சித்தியார்.*** "உடையாள் நடுவுள் நீ இருத்தி" என்பது ***திருவாசகம்.*** இங்ஙனம் அருளே திருமேனியாக உடைமையால் எவரும் வழிபட்டு நற்கதியடையலாம் என்பது கருத்தாம். இதனுலேயே ***நண்ணிய மலம் முதலாயின மாய்க்கும்*** என்றார். என்றும் இறைவனருள் திரோதானமாயும் அருட்சத்தியாயும் நின்று மலம் துடைத்தலால் இங்ஙனம் கூறினர். ***நண்ணிய*** என்றதனுல் மலம் ஆன்மாவின் இயற்கைக் குணமன்றென்பது தேறப்படும். "நின் கருணை வெயிலினுல் உலர்த்தி" எனப் பிறரும் கூறுவர் இக் கருத்தினை.

**உலக உயிர்க்கெல்லாம் ஒரு கண்ணே —**

இதனுல் நம் ஸ்ரீ மெய்கண்ட பரமாச்சாரியர் குறிப்பிட்ட ஒரு சமயத்தாருக்கோ, இனத்தாருக்கோ, நாட்டாருக்கோ உரியவரல்லர். இப்பூமண்டலத்தே வாழும் எவ்வகையினர்க்கும் மருள் ஒழித்து அருள் நெறிகாட்டும் ஒப்பற்ற கண்போலுள்ளவர் என நாம் அறிதல் வேண்டும். "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து" என்பது போல விரிந்த பொருளுக்கு வழி காட்டியாயிருப்பது இவ்வரியின் வாசகம். மற்றும்

மிக விரிந்த பொருளில் சர்வலோகங்களிலுமுள்ள யாவகை ஆன்மாக்களுக்கும் ஓர் அறிவாக நின்று அநுக்கிரகம் புரிபவர் இவ்வாசாரியர் என்பது போதரும். ஆதித்தன் ஒன்றுயிருந்தும் எல்லோருடைய கண்களுக்கும் காட்டா நிற்பதுபோல இவரும் சர்வான்மாக்கட்கும் இறைவர் எனக் கோடல் தக்கதாம். "கண்களுக்கு இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப்போல ஈசன்" என்பது சித்தியார்ப் பிரமாணமாம். ஆகையால் சீவர்களாகிய நாம் யாவரும் அருட்டுறையிலே அருளாலயத்தராகி எழுந்தருளி யிருக்கும் *ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாரின்* திருவடியை அனவரதமும் சிந்தித்தும் வழுத்தியும் வந்தித்தும் நற்பேறடைதலே கடமையாக் கொள்வோம்!

இருபா இருபது விரிவுக்கட்டுரை முற்றும்.

ஸ்ரீ அருணந்தி தேவ நாயனார் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்.

---

# பிழை நீக்கம்

| பகுதி | பக்கம் | வரி | பிழை | பிழை நீக்கம் |
|---|---|---|---|---|
| நூல் மாண்பு | 4 | 25 | திருவட் | திருவருட் |
| வரலாறு | ,, | 16 | திரு பதி | திருப்பதி |
| ,, | ,, | 18 | கடந்தைக் | கடந்தைத் |
| ,, | 5 | 29 | சயத்தி | சமயத்தி |
| ,, | 6 | 15 | ஆட | ஆட் |
| ,, | 7 | 28 | தற்கு | தர்க்கு |
| நூல் | 5 | 25 | இம் | நம் |
| ,, | 8 | 27 | முழுமுதல்வன் | முழுமுதல்வன், |
| ,, | 9 | 10 | மும்மாயா | மும்மல மாயா |
| ,, | 16 | 7 | பணிய | பணியி |
| ,, | 30 | 19 | கூடி | கூடிய |
| ,, | 64 | 12 | என்பதை | என்பதையும் |
| ,, | 86 | 27 | செலுத்திச் | செலுத்தி |
| ,, | 94 | 15 | அறிவுப் அழிய | அறிவு அழியப் |
| ,, | 121 | 12 | அறிவும் | அறியும் |
| ,, | 122 | 11 | அவத்தை தன்மை | அவத்தைத் தன்மை |
| ,, | 206 | 10 | உமித்து | உவமித்து |
| ,, | 218 | 26 | உயிர்கட்டு | உயிர்கட்கு |
| ,, | 236 | 12 | மேவாம் | மேலவாம் |
| ,, | 244 | 11 | எங்ஙன | எங்ஙனம் |
| ,, | 246 | 4 | முத்திக் காத்து | முத்திக் காலத்து |
| ,, | 253 | 16 | விண்ணபி | விண்ணப்பி |
| ,, | 281 | 18 | ஆணமல | ஆணவமல |
| ,, | 286 | 19 | குணங்களோம் | குணங்களையும் |

மற்றும் ஆங்காங்கு மறைபட்டுள்ள குறியீடுகளையும் ஏற்றவாறு இட்டுக்கொள்க.

## குறிப்பு

இந்நூல் வேண்டுவோர் திருவாவடுதுறை ஆதீன (Librarian) ***லைபிரேரியன்*** அவர்கட்கு ***14 அணா தபால் தலைகள்*** அனுப்பிப் பெற்றுக் கொள்க.

*சரஸ்வதி பிரஸ், திருப்பாதிரிப்புலியூர் – போன் 113*

